மற்றும்வீரர்களுளரென்றெளிதரோமரத்தொழிலிவன்மாடு
பெற்றுநீங்கினதாமெனினல்லதுபேரொழிற்றோேடும்
அற்றுவீழ்ந்தகையற்றதவெங்கையினுலெடுத்தவனூர்த்தோடி
எற்றவீழ்ந்தனவெயிறிளித்தோடினவானரக்குலமெல்லாம். (௩௪0)

வன்னல்காத்துடனிற்பவும்வானரத்தானையைமறக்கூற்றம்
கொள்ளைகொண்டிடப்பண்டையின்மும்மடிகுமைக்கின்றகுறிநோக்கி
வெள்ளமின்றொடும்வீந்ததுறமென்பதோர்விம்மலுற்றுயிர்வெம்ப
உள்ளகையினுமற்றவெங்கரத்தையேயஞ்சினவுலகெல்லாம். (௩௪௧)

மாறுவானரப்பெருங்கடலோடத்தன்றோணின்றுவார்சோரி
யாறுவின்டொடும்பிணஞ்சுமந்தோடமேலமாருயிரிந்தோடக்
கூறுகூறுபட்டிலங்கையும்விலங்கலும்பறவையுங்குலைந்தோட
ஏறுசேவகன்மேலெழுந்தோடினன்மழைகுலமிரிந்தோட. (௩௪௨)

ஈற்றுக்கையையுமிக்கணத்தரிதியென்றிமையவர்தொழுதேத்தத்
தோற்றுக்கையகன்றொழிந்தவனுளவைதொலையவுந்தோன்றாத
கூற்றுக்கையழுமச்சமுங்கெடநெடுங்கொற்றவன்கொலையம்பால்
வேற்றுக்கையையும்வேலையிட்டனன்வேறுமோரணையாக. (௩௪௩)

சந்திரப்பெருந்துணெடுசார்த்தியதனிகுன்றுந்தவறாகா
தந்தரத்தவரலைகடலமிழ்தெழக்கடைவுறுமந்நாளில்
சுந்தரத்தடந்தோள்வளைமாசுணஞ்சுற்றியதொழில்காட்ட
மந்தரத்தையுங்க ' த்ததுமற்றவன்மணியணிவயிரத்தோள். (௩௪௪)

சிவணவண்ணவான்கருங்கடற்கொடுவந்தசெயலுஞ்செறிதாரைச்
சுவணவண்ணவெஞ்சிறையுடைக்கடுவிசைமுடுகியதொழிலானும்
அவணவண்ணலதேவவினியற்றியவமைவினுமயில்வாளி
உவணவண்ணலையொத்ததுமந்தரமொத்ததவ்வுயர்பொற்றோள். (௩௪௫)

பழக்கநாள்வருமேருவையுள்ளுறத்தொளைத்தொருபணையாக்கி
வழக்கினுலுலகளந்தவனமைத்ததோர்வான்குணில்வலத்தேந்தி
முழக்கினுலெனமுழங்குபேராப்பினன்வானரமுந்நீரை
உழக்கினன்றசைதோலெலும்பெனுமிவைகுருதியோடொன்றாக. (௩௪௬)

நிலத்தகால்கனல்புனலெனவிவைமுற்றுநிருதனதுருவாகிக்
கொலத்தகாததோர்வடிவுகொண்டாலெனவுயிர்களைக்குடிப்பானைச்
சலத்தகாலனைத்தறுகணர்க்கரசனைத்தருக்கினிற்பெரியானை
வலத்தகாலையும்வடித்தவெங்கணையினுற்றடிந்தனன்றனுவல்லான். ' (௩௪௭)

பந்திபந்தியின்பற்குலமீன்குலப்பாடுபாடுறப்பாகத்
திந்துவெள்ளெயிறிமைத்திடக்குருதியாமெக்கர்கொண்டெழுசெக்கர்

௩௪௮. செக்கர் அந்தி - சிவந்தமாலை.

அந்திவந்தெனவகனெடுவாய்விரித்தடியொன்றுகடிதோட்டிக்
குந்திவந்தெனனெடுநிலங்குழிபடக்குரைகடல்கோத்தேற. (௫௪௮)

மாறுகாலின்றிவானுறநிமிர்ந்துமாடுளவெலாம்வளைத்தேந்திச்
சூறைமாருதமாமெனச்சுழித்துமேற்றொடர்கின்றதொழிலானை
ஏறுசேவகனெரிமுகப்பகழியாலிருநிலம்பொறைநீங்க
வேறுகாலையுந்துணித்தனனறத்தொடும்வேதங்கள்கூத்தாட. (௫௪௯)

கையிரண்டொடுங்கால்களுந்துணிந்தனகருவரைபொருவுந்தன்
மெய்யிரண்டுநூறாயிரம்பகழியால்வெரிநுறந்தொளைபோய
செய்யகண்பொழிதீச்சிகையிருமடிசிறந்ததுதெழிப்போடு
வய்யம்வானிடைமழையினும்பெருத்ததுவளர்ந்ததுபெருஞ்சீற்றம். (௫௫௦)

கும்பகருணன் வாயாலோருமலையினை ஒடித்தெடுத்தெறிதல்.

பாதங்கைகளோடிழந்தனன் படியிடையிருந்துவான்பகுவாயால்
காதநீளியமலைகளைக்கடித்திறுத்தெடுத்துவெங்கனல்பொங்கி
மீதுமீதுதன்னகத்தெழுகாற்றினல்விசைகொடுதிசைசெல்ல
ஊதவூதப்பட்டலந்தனவானரமுருமின்வீழ்வுறென்ன. (௫௫௧)

தீயினற்செய்தகண்ணுடையானெடுஞ்சிலையினற்றிசைநீய
வேயினற்றிணிவெற்பொன்றுநாவினல்விசும்புறவளைத்தேந்திப்
பேயினர்ப்புடைப்பெருங்கணமிரிந்தெழப்பிலந்திறந்ததுபோலும்
வாயினற்செலவீசினன்வள்ளலுமலர்க்கரம்விதிர்ப்புற்றான். (௫௫௨)

அய்யன்விற்றொழிற்காயிரமிராவணரமைவிலாந்தோயான்
கய்யுங்கால்களுமிழந்தனன்வேறினியுதவலாந்துணைகாணேன்
மய்யனோய்கொடுமுடிந்தவனுளென்றுவாம்பின்றிவாழ்ந்தானுக்
குய்யுமாறரிதென்றுதன்னுள்ளத்தினுணர்ந்தொருதுயருற்றான். (௫௫௩)

வேறு.

சிந்துறச்செம்பசுங்குருதிதிசைகடொறுஞ்சிறையாறு
எந்திறத்தேர்கரிபரியாளீர்த்தோடப்பார்த்திருந்த
கந்தரப்பொற்கிரியாண்மைகளிறனையான்கண்ணின்ற
சுந்தரப்பொற்றோளானைமுகநோக்கியிவைசொன்னான். (௫௫௪)

கும்பகருணன் இராமனிடஞ் சிலகூறல்.

புக்கடைந்தபுறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்க
மைக்கடங்கார்மதயானைவான்வேந்தன்வழிவந்தீர்
இக்கடன்களுடையீர்நீரெம்வினைதீர்த்தும்முடைய
கைக்கடன்றானுயிர்காக்கக்கடவீரென்கடைக்கூட்டால். (௫௫௫)

௫௫௧. பகுவாய் - பிளப்புடைய வாய்.

நீதியால்வந்ததொருநெடுந்தருமநெறியல்லால்
சாதியால்வந்தசிறுநெறியறியானென்றம்பி
ஆதியாயுனையடைந்தானரசருக்கொண்டமைந்த
வேதியாவின்னுமுனக்கடைக்கலம்யான்வேண்டினேன். (௩௯௬)

வெல்லுமாகினைக்கின்றவேலரக்கன்வேரோடும்
கல்லுமாமுயல்கின்றனிவனெனலுங்கறுவுடையான்
ஒல்லுமாறியலுமேலுடன்பிறப்பின்பயனோரான்
கொல்லுமாலவனிவனைக்குறிக்கோடிகோடாதாய். (௩௯௭)

தம்பியெனகினைந்திரங்கித்தவிரானத்தகவில்லான்
நம்பியிவன்றனைக்காணிற்கொல்லுமிறைநல்கானல்
உம்பியைத்தானுன்னைத்தானநுமனைத்தாரனொருபொழுதும்
எம்பிரியானாகவருளுதியான்வேண்டினேன். (௩௯௮)

மூக்கிலாமுகமென்றமுனிவர்களுமமரர்களும்
நோக்குவார்நோக்காமைநன்கனையாலென்கழுத்தை
நீக்குவாய்நீக்கியபின்னெடுந்தலையைக்கருங்கடலுள்
போக்குவாயிதுநின்னைவேண்டுகின்றபொருளென்றான். (௩௯௯)

இராமன் கும்பகருணன் தலையையறுத்துக் கடலிலிடுதல்.

வரங்கொண்டானினிமறுத்தல்வழக்கென்றென்றொருவாளி
உரங்கொண்டதடஞ்சிலையினுயர்நெடுநாணுட்கொளுவாச்
சிரங்கொண்டான்கொண்டதனைத்திண்காற்றின்கடும்படையால்
அரங்கொண்டகருங்கடலுள்ளழுவத்துளழுத்தினான். (௪௦0)

மாக்கூடுபடர்வேலைமறிமகரத்திரைவாங்கி
மேக்கூடுகிழக்கூடுயிக்கிரண்டுதிக்கூடு
போக்கூடுகவித்திருகண்புகையோடுபுகையுயிர்க்க
மூக்கூடுப்புகப்புக்குமூழ்கியதம்முகக்குன்றம். (௪௦௧)

ஆடினார்வானவர்களரமகளிரமுதவிசை
பாடினார்மாதவரும்வேதியரும்பயந்தீர்ந்தார்
கூடினார்படைத்தலைவர்கொற்றவனைக்குடர்கலங்கி
ஓடினாடலரக்கரிராவணனுக்குணர்த்துவான். (௪௦௨)

௧௫ வது. கும்பகருணன் வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௫௮0.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

---

௩௯௮. இறைநல்கான் - சற்றிருக்க ஒட்டான்.

## மாயாசனகப்படலம்.

அவ்வழிக்கருணன்செய்தபேரெழிலாண்மையெல்லாம்
செவ்வழியுணர்வுதோன்றச்செப்பினஞ்சிறுமைதீரா
வெவ்வழிமாயையொன்றுவேறிருந்தெண்ணிவேட்கை
இவ்வழியிலங்கைவேந்தனியற்றியதியம்பலுற்றாம். (௧)

மாதிரங்கடந்தோளான்மந்திரவிருக்கைவந்த
மோதரனென்னுநாமத்தொருவனைமுறையினோக்கிச்
சீதையையெய்தியுள்ளஞ்சிறுமையிற்றீருஞ்செய்கை
யாதெனக்குணர்த்தியின்றென்னின்னுயிரீதியென்றான். (௨)

இராவணனுக்கு மோதரன் உத்திகூறல்.

உணர்த்துவனின்றுநன்றோருபாயத்தினுறுதிமாயை
புணர்த்துவன்சீதைதானேபுணர்வதோர்வினையம்போற்றிக்
கணத்துவன்சனகன்றன்னைக்கட்டினென்கொணர்ந்துகாட்ட
மணத்தொழில்புரியுமன்றேமருந்தனையுருவமாற்றி. (௩)

எனவவனுரைத்தலோடுமெழுந்துமார்பிறுகப்புல்லி
அனையவன்றன்னைக்கொண்டாங்கணுகுதியன்பவென்னாப்
புனைமலர்ச்சாலைச்சோலைநோக்கினனெழுந்துபோனான்
வினைகளைக்கற்பின்வென்றவிளக்கினைவெருவல்காண்பான். (௪)

பண்களாற்கிளவிசெய்துபவளத்தாலதரமாக்கிப்
பெண்களானார்க்குநல்லவுறுப்பெலாம்பெருக்கினீட்ட
எண்களாலளவாமானக்குணந்தொகுத்தியற்றினானைக்
கண்களாலரக்கன்கண்டானவனையோர்கலக்கங்காண்பான். (௫)

மின்னொளிர்மகுடகோடிவெயிலொளிவிரித்துவீசத்
துன்னிருளிரிந்துதோற்பச்சுடர்மணித்தோளிற்றோன்றும்
பொன்னரிமாலைநீலமலையின்வீழருவிபோர்ப்ப
நன்னெடுங்களிமால்யானைநாணுறநடந்துவந்தான். (௬)

விளக்கொருவிளக்கந்தாங்கிமின்னணியாவிற்சுற்றி
இளைப்புறுமருங்குனோவமுலைசுமந்தியங்குமென்னா
முளைப்பிறைநெற்றிவாணமடந்தையர்முன்னும்பின்னும்
வளைத்தனர்வந்துசூழவந்திகர்வாழ்த்தவந்தான். (௭)

---

௧. கருணன் - கும்பகருணன். வேட்கை - சனகியிடத்துள்ள ஆசை.

## இராவணன் சீதையினிடம் தன் வேட்கை யுரைத்தல்.

இட்டதோரிரணபீடத்தாமரையிருக்கைநின்றும்
கட்டதோட்கானஞ்சுற்றக்கழலொன்றுகாலிற்காண
வட்டவெண்கவிகையோங்கச்சாமரைமருங்குவீசத்
தொட்டதோர்சுரிகையானவிருந்தனனினையசொன்னான். (அ)

என்றுதானடியனேனுக்கிரங்குவதின்றுவென்பான்
ஏன்றுதானிரவியோடும்வேற்றுமைதெரிவதென்பால்
என்றுதானநங்கவாளிக்கிலக்கலாதிருக்கலாவ
தென்றுதானுற்றதெல்லாமியம்புவானெடுத்துக்கொண்டான். (கூ)

வஞ்சனேனெனக்குநானேமாதரார்வடிவுகொண்ட
நஞ்சதோயமுதமுண்பானச்சினேனுளுந்தேய்ந்து
நெஞ்சநோனாதும்மைநினைப்புவிட்டாவிநீக்க
அஞ்சினேனடியனேனும்மடைக்கலமமுதின்வந்தீர். (க0)

தோற்பித்தீர்மதிக்குமேனிசுடுவித்தீர்தென்றறூற்ற
வேர்ப்பித்தீர்வயிரத்தோளைமெலிவித்தீர்வேனில்வேளை
ஆர்ப்பித்தீரொன்னையின்னலறிவித்தீரமாரச்சம்
தீர்ப்பித்தீரின்னமென்னென்செய்வித்துத்தீர்தீரம்மா. (கக)

பெண்ணெலாநீரேயாக்கிப்பேரொலாமுமதேயாக்கிக்
கண்ணெலாநுங்களுக்கிக்காமவேளென்னுநாமத்
தண்ணலெய்வானுமாக்கியைங்கணைக்கரியத்தக்க
புண்ணெலாமெனக்கேயாக்கிவிபரீதம்புணர்த்திவிட்டீர். (கஉ)

ஈசனேமுதலாமற்றைமானுடரிறுதியாகக்
கூசமூன்றுலகுங்காக்குங்கொற்றத்தென்வீரக்கோட்டி
பேசவாரொருவற்காவிதோற்றிலென்பெண்பால்வைத்த
ஆசைநோய்கொன்றதென்னுவாண்மைமாசுண்ணுதன்றே. (கங)

கோயிடைநுகரவேயுநுணங்கின்றுணங்குமாவி
நாயுயிராகுமென்றேநாள்பலகழித்தகாலைப்
பாயிரமுணர்ந்துநூலோர்காமத்துப்பகுத்தபத்தி
ஆயிரமல்லபோனவையிரண்டென்பர்பொய்யே. (கச)

பிறந்திலனுக்கவந்தீர்பேரெழின்மானங்கொல்ல
மறந்தனபெரியபோனவருமெனுமருந்துதன்னால்
இறந்திறந்துய்கின்றேன்யான்யாரிதுதெரியுமீட்டார். (கரு)

அந்தாமுணரின்மேனைகவிகையென்பான்காதல்
இந்திரனூர்த்தைநல்கியெய்திஞளிழுக்குற்றுனோ

---

கஉ. ஐங்கணை - பஞ்சபாணம். அது - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பன.

மந்திரமில்லைவேறோர்மருந்தில்லைமையனோய்க்குச்
சுந்தரக்குமுதச்செவ்வாயமுதலாலமுதச்சொல்லீர். (கசு)

இராவணன் சீதைகால்களில் விழுந்துவணங்குதல்.

என்றுரைத்தெழுந்துசென்றங்கிருபதென்றுரைக்குநீலக்
குன்றுரைத்தாலுநோக்குவவுத்தோணிலத்தைக்கூட
மின்றிரைத்தருக்கன்றன்னைவிரித்துமுன்னெருகுத்தபோலும்
நின்றிமைக்கின்றதென்னமுடிபடிநெடிதின்வைத்தான். (கஎ)

சீதை இராவணனுக்கு நற்புத்திபகர்தல்.

வல்லியமருங்குகண்டமானெனமறுக்கமுற்று
மெல்லியலாக்கைமுற்றுநடுங்கினள்விம்முகின்றாள்
கொல்லியவரினுமுள்ளகூறுவென்றெறியவென்னாப்
புல்லியகிடந்ததொன்றைநோக்கினள்புகல்வதானாள். (கஅ)

பழியிதுபாவமென்றுபார்க்கிலைபகரத்தக்க
மொழியிவையல்லவென்பதுணர்கிலைமுறைமைநோக்காய்
கிழிகிலைநெஞ்சம்வஞ்சக்கிளையொடுமின்றுகாறும்
அழிகிலையென்றபோதென்கற்பென்னுமறந்தானென்னும். (ககூ)

வானுளவறத்திற்றோன்றுஞ்சொல்வழிவாழுமண்ணின்
ஊனுளவுடம்புக்கெல்லாமுயிருளவுணர்வுமுண்டால்
தானுளபத்துப்பேழ்வாய்தகாதனவுரைக்கத்தக்க
யானுளன்கேட்கவென்றோவென்சொலாயாதுசெய்யாய். (உ0)

வாசவன்மலரின்மேலான்மழுவலான்மைந்தன்மற்றக்
கேசவன்சிறுவனொன்றதன்மையோர்தம்மைக்கேளாய்
பூசலினெதிர்ந்தேனென்றோய்போர்க்களம்புக்கபோதென்
ஆசையின்கனியைக்கண்ணிற்கண்டிலையோலுமஞ்சி. (உக)

ஊணிலாயாக்கைபேணியுயிர்புகழ்சூடாதுன்முன்
நாணிலாதிருந்தேனல்லேனவையறுகுணங்களென்னும்
பூணெலாம்பொறுத்தமேனிப்புண்ணியமூர்த்திதன்னைக்
காணலாமின்னுமென்னுங்காதலாலிருந்தேன்கண்டாய். (உஉ)

சென்றுசென்றழியுமாவிதிரிக்குமாற்செருவிற்சேமக்
குன்றுநின்றனையதம்பிபுறக்கொடைகாத்துநிற்பக்
கொன்றுநின்றலைசன்சேர்நிராக்கர்தங்குலத்தைமுற்றும்
வென்றுநின்றருளுங்கோலங்காணியகிடந்தவேட்கை. (உங)

---

உக. என்னாசையின்கனி - என்றது இராமனை.

எனக்குயிர்பிறிதுமொன்றுண்டென்றிரேலெனக்குமல்லால்
தனக்குயிர்வேறின்றாகித்தாமரைக்கண்ணனாகிக்
கனக்கருமேகமொன்றுகார்முகந்தாங்கியார்க்கும்
மனக்கினிதாகிநிற்குமஃதன்றிவரம்பிலாதாய். (௨௪)

### சீதைமொழிகேட்ட இராவணன் சீறுதல்.

என்றனளென்றலோடுமெரியுறுகண்ணன்றன்னைக்
கொன்றனமானத்தோன்றக்கூற்றனசீற்றங்கொண்டான்
வென்றனையிராமனுன்னைமீட்டபினவனோடாவி
ஒன்றெனவாழ்திபோலென்றிடியுருமொக்கநக்கான். (௨௫)

இனத்துளாருலகத்துள்ளாரிமையவர்முதலினோரொன்
சினத்துளார்யாவர்நீர்த்தார்தயரதன்சிறுவன்றன்னைப்
புனத்துளாய்மாலையானென்றுவக்கின்றவொருவன்புக்குன்
மனத்துளானெனினுங்கொல்வென்வாழுதிபின்னைமன்னே. (௨௬)

வினைத்தனமதிலேவேலைவகுத்தனவரம்புவாயால்
உனைத்தனகுரங்குபல்காலென்றநமுவந்ததுண்டேல்
இனைத்தநுண்மருங்குனங்காயென்னெதிரெய்திற்றெல்லாம்
விளக்கெதிர்வந்தவிட்டிற்பான்மையேவியக்கவேண்டா. (௨௭)

கொற்றவாளரக்கர்தம்மையயோத்தியர்குலத்தைமுற்றும்
பற்றிநீர்தருதிரன்றேற்பசுந்தலைகொணர்திர்பாரித்
துற்றதொன்றியற்றுவீரொன்றுந்தினேனுக்தைமேலும்
வெற்றியர்தம்மைச்செல்லச்சொல்லினன்விரைவினென்றான். (௨அ)

### இராவணன் உரைகேட்டுச் சீதை துன்புறுதல்.

என்றவனுரைத்தகாலையென்னையிம்மாயஞ்செய்தாற்
கொன்றுமிங்கரியதில்லையென்பதோர்துணுக்கமுந்த
நின்றுநின்றுயிர்த்துநெஞ்சம்வெதும்பினளொருப்பைமீளத்
தின்றுநின்றமிழ்கின்றாளிற்றுயருக்கேசேக்கையானாள். (௨௯)

இத்தலையின்னசெய்தவிதியினோரொன்னையின்னும்
அத்தலையன்னசெய்யச்சிறியரோவலியரம்மா
பொய்த்தலையுடையதெல்லாந்தருமமேபோலுமென்னுக்
கைத்தனளுள்ளம்வெள்ளக்கண்ணினீர்கரையிலாதாள். (௩0)

### மாயாசனகனைச் சீதை யெதிரே கொண்டு வருதல்.

ஆயதுகாலத்தாங்கோரரக்கனைச்சனகனாக்கி
வாய்திறந்தாற்றப்பற்றிமகோதரன்கடிதின்வந்தான்
காயெரியனையான்முன்னர்க்காட்டினன்வனைக்கண்டாள்
தாயெரிவீழக்கண்டபார்ப்பெனத்தரிகிலாதாள். (௩௧)

௩௧. பார்ப்பு - இளங்குஞ்சு.

கய்களைரெிித்தான்கண்ணைமோதினான்கமலக்கால்கள்
செய்யெரிமிதித்தாலென்னநிலத்திடைப்தைத்தாணெஞ்சம்
மெய்யெனவெரிந்தாளேங்கிவிம்மினனடுங்கிவீழ்ந்தான்
பொய்யெனவுணராளன்பாற்புரண்டரும்பூசலிட்டான். (௧௨)

தெய்வமோவென்னுமெய்ம்மைசிதைந்ததோவென்னுந்திய
வய்வலோவுலகையென்னும்வஞ்சமோவலியதென்னும்
உய்வலோவின்னுமென்னுமொன்றலதுயரமுற்றான்
தய்யலோதருமமேயோவாரவடன்மைதேர்வார். • (௧௩)

எந்தையேயெந்தையேயின்றென்பொருட்டுனக்குமிக்கோன்
வந்ததேயென்னைப்பெற்றுவாழ்ந்தவாறிதுவோமண்ணோர்
தந்தையேதாயேசெய்ததருமமேதவமேயென்னும்
வெந்துயரொன்னுந்தீவீழ்விறகெனவெந்துவிழ்ந்தான். (௧௪)

இட்டுண்டாயறங்கள்செய்தாயெதிர்ந்தனோரிருக்கையெல்லாம்
சுட்டுண்டாயுயர்ந்தவேள்வித்துறையெலாந்தொலைவுகண்டாய்
மட்டுண்டார்மனிசர்த்தின்றவஞ்சரால்வயிரத்தோள்கள்
கட்டுண்டாயென்னேயானுங்காண்கின்றேன்போலுங்கண்ணால். (௧௫)

என்றனன்பலவும்பன்னிபெழுந்துவீழ்ந்திடரிற்றோய்ந்தான்
பொன்றினன்போலுமென்னப்பொறையழிந்துயிர்ப்புப்போவான்
மின்றணிநிலத்துவீழ்ந்துபுரள்கின்றதனையமெய்யாள்
அன்றிலம்பேடைபோலவாய்திறந்தாற்றலுற்றாள். (௧௬)

பிறையுடைநுதலார்க்கேற்றபிறந்தவிக்கடன்கள்செய்ய
இறையுடையிருக்கைமூதூரொன்றும்வந்திறக்கலாதீர்
சிறையிடைக்காணநீருஞ்சிறையொடுஞ்சேர்ந்தவாறே
மறையுடைவரம்புநீங்காவழிவந்தமன்னர்நீரே. (௧௭)

வன்சிறைப்பறவையூரும்வானவன்வரம்பின்மாயப்
புன்சிறைப்பிறவிதீர்ப்பானுளனெனப்புலவர்நின்றார்
என்சிறைதீர்க்குவாரைக்காண்கிலேனென்னின்வந்த
உன்சிறைவிடுக்கற்பாலர்யாருளருலகத்துள்ளார். (௧௮)

பண்பெற்றோரோடுகூடாப்பகைபெற்றாய்பகழிபாய
விண்பெற்றாயெனினுநன்றால்வேந்தாயுயர்ந்தமேலோர்
எண்பெற்றாய்பழியும்பெற்றாயிதுநின்னாற்பெற்றதன்றால்
பெண்பெற்றாயதனாற்பெற்றாயாரின்னபேறுபெற்றார். (௧௯)

கற்றுண்டபாசகாஞ்சிற்சுமையொடுஞ்சூடுண்டாற்ற
எற்றுண்டுமனதுநீங்காவிழுசிறுகுண்டையென்னப்

• ௧௪. விராயென - என்றும் பாடம்.

பற்றுண்டானேமானப்பாவியேனும்மையெல்லாம்
விற்றுண்டேனெனக்குமீளும்விதியுண்டோசாகின்வீழ்ந்தால். (௪0)

இருந்துநான்பகையையெல்லாமீறுகண்டனவிவின்பம்
பொருந்தினேனல்லேனெங்கோன்றிருவடிபுனைந்தேனல்லேன்
வருந்தினேனெடுநாளும்மைவழியொடுமுடித்தேன்வாயால்
அருந்தினேனயோத்திவந்தவாசர்தம்புகழையம்மா. (௪௧)

கொல்லெனக்கணவற்காங்கோர்நெடும்பகைகொடுத்தேனெந்தை
கல்லெனத்திரண்டதோளைப்பாசத்தாற்கட்டக்கண்டேன்
இல்லெனச்சிறந்துநின்றவிரண்டுக்குமின்னல்சூழ்ந்தேன்
அல்லலேனுவெளியெனேயானனியற்றேனிறக்கலாதேன். (௪௨)

இணையறுவேள்விமேனுளியற்றியீன்றெடுத்தவெந்தை
புணையுறுதிரடோளார்த்துப்பூழியிற்புரளக்கண்டேன்
மணவினைமுடித்தென்கையைமந்திரமாபிற்றொட்ட
கணவனையினையென்காண்டலின்றியேகழிகின்றேனே. (௪௩)

அன்னையீரையன்மீரென்னுருயிர்த்தங்கைமீரோ
என்னையீன்றெடுத்தவெந்தைக்கெய்தியதியாதுமொன்றும்
முன்னமீருணர்ந்திலீரோவுமக்கும்வேறுற்றதுண்டோ
துன்னருநெறியின்வந்துதொடர்ந்திலீர்துஞ்சினீரோ. (௪௪)

மேருவிற்கும்பர்சேர்ந்துவிண்ணினைமீக்கொண்டாலும்
நீருடைக்காவன்மீதுரெய்தலாநெறியிற்றன்றால்
போரிடைக்கொண்டாரேனும்வஞ்சனைபுணர்த்தாரேனும்
ஆருமக்கறையற்பாலாரநுமனுமுனனேநும்பால். (௪௫)

சாதமற்றிவனைத்தந்தார்தவம்புரியாற்றல்சான்ற
பரதனைக்கோணர்தற்கேதுமையுறவில்லைப்பன்னுள்
வாதனும்வாழ்ந்தானல்லன்றம்பியுமனையன்வாழா
விரதமுற்றறத்தினின்றுற்கிவைகொலாம்வினைவமென்மேல். (௪௬)

அடைத்ததுகடலைமேல்வந்தடைந்ததுமதிலையாவி
துடைத்ததுபகையைச்சேனையெனச்சிலர்சொல்லச்சொல்லப்
படைத்ததோருவகைதன்னைவேறொருவினையம்பண்ணி
உடைத்ததுவிதியேயென்றென்றுனைத்தனளுணர்வுதீர்வாள். (௪௭)

இராவணன் சீதைக்குச் சமாதானமுரைத்தல்.

எங்குவானினையபன்னவிமையவரோற்றமெல்லாம்
வாங்குவானரக்கனுற்றமனமகிழ்ந்தினிதினேக்கித்
தாங்குவானல்லனுன்பமிவளையுர்தாங்கித்தாலும்
ஒங்குவானென்னவுன்னியினையனவுரைக்கலுற்றான். (௪அ)

௪அ. இமையவர் - கண்ணிமையாதவர்.

காரிகைநின்னையெய்துங்காதலாற்கருதலாகாப்
பேரிடரியற்றலுற்றேன்பிழையிதுபொறுத்தியின்னும்
வேறமிதிலையோரைவிளிகிலேன்விளிந்தபோதும்
ஆருயிரிவனையுண்ணேனஞ்சலையன்னமன்னாய். (சக)

இமையவருலகமேதானிவ்வுலகேழுமேதான்
அமைவரும்புவனமூன்றிலென்னுடையாட்சியேதான்
சமைவுறத்தருவன்பற்றித்தாரணிமன்னற்கின்னற்
சுமையுடைக்காமவெந்நோய்துடைத்தியேற்றொழுதுவாழ்வேன். (ருo)

இலங்கையூரிவனுக்கீந்துவேறிடத்திருந்துவாழ்வேன்
நலங்கிளர்நிதியமூன்றுநல்குவெனுமத்தெய்வப்
பொலங்கிளர்மானந்தானேபொதுவுறக்கொடுப்பென்புத்தேள்
வலங்கிளர்வாளும்வேண்டின்வழங்குவென்யாதுமாற்றேன். (ருக)

இந்திரன்கவித்தமௌலியிமையவரிறைஞ்சியேத்த
மந்திரமரபிற்சூட்டிவானவர்மகளிர்யாரும்
பந்தரினுரிமைசெய்யயானிவன்பணியினிற்பேன்
சுந்தரப்பவளவாயோயருண்மொழிசிறிதுசொல்லின். (ருஉ)

எந்தைதன்றந்தைதாதையிவ்வுலகீன்றானென்முன்
வந்தவன்றானேவிட்டவரமெலாம்வழங்கிமற்றை
அந்தமிலடியார்செய்கையாற்றவேனமிழ்தின்வந்த
செந்திருநீரல்லீரேலவளும்வந்தேவல்செய்யும். (ருங)

தேவரேமுதலாமற்றைத்திண்டிறநாகர்மண்ணோர்
யாவரும்வந்துநுந்தையடிதொழுதேவல்செய்வர்
பாவைநீயிவனின்வந்தபயன்பழுதாவதன்றால்
மூவுலகாளுஞ்செல்வங்கொடுத்ததுமுடித்தியென்றான். (ருச)

இராவணனுக்குச் சீதை மறுமாற்ற முரைத்தல்.

இத்திருப்பெறுகிற்பானுமிந்திரனிலங்கைநுங்கள்
பொய்த்திருப்பெறுகிற்பானும்வீடணன்புலவர்கோமான்
கைத்திருச்சரங்களுன்றன்மார்பிடைக்கலக்கற்பால
மைத்திருநிறத்தான்றானென்றலைமிசைவைக்கற்பால. (ருரு)

நகுவனநின்னுடையநாயகனுமவாளி
புகுவனபோழ்ந்துன்மார்பிற்றிறந்தனபுண்களெல்லாம்
தகுவனவிளையசொல்லத்ரக்கனசாபநாணின்
உகுவனமலைகளெஞ்சப்பிறப்பனவொலிகளம்மா. (ருசு)

சொல்லுவமதுரமாற்றந்துண்டத்தாலுண்டுன்கண்ணைக்
கல்லுவகாகம்வந்துகலப்பனகமலக்கண்ணன்

---

ருசு. போழ்ந்து - பிளந்து.

வில்லுமிழ்பகழியின்னர்விலங்கெழிலலங்கன்மார்பம்
புல்லுவகளிப்புக்கூர்ந்துபுலவுநாறலகையெல்லாம். (ருஎ)

விரும்பினான்கேட்பதுண்டானின்னுழைவார்த்தைவீரன்
இரும்பியல்வயிரவாளியிடறிடவெயிற்றுப்பேழ்வாய்ப்
பெரும்பியற்றலைகள்சிந்திப்பிழைப்பிலமுடிந்தாயென்ன
அரும்பியற்றளவப்பைந்தாரநுமன்வந்தளித்தவந்நாள். (ருஅ)

புன்மகன்கேட்டிகேட்டற்குரியதுபுகுந்தபோரின்
உன்மகனுயிரையெம்மோய்ச்சுமித்திரையுய்யவீன்ற
நன்மகன்வாளிநக்காயவனுடலைநக்க
என்மகனிறந்தானென்னநீயெடுத்தாற்றலென்றான். (ருக)

இராவணனை மகோதரன் தடுத்து உபாயங்கூறல்.

வெய்யவனனையகேளாவெயிலுகவிழித்துவீரக்
கைபலபிசைந்துபேழ்வாயெயிறுபுக்கழுந்தக்கவ்வித்
தய்யன்மேலோடலோடுமகோதரன்றடுத்தானின்ற
மொய்கழற்றாதைவேண்டவிசையுநீமுனியலென்றான். (சு0)

மாயாசனகன் சீதையைப்பார்த்துச் சிலகூறுதல்.

அன்றவன்றகைப்பமீண்டானுசனத்திருக்கவாவி
பொன்றினனுகுமென்னத்தரையிடைக்கிடந்தபொய்யோன்
இன்றிதுநேராயென்னினென்னையென்குலத்தினோடும்
கொன்றனையாதியென்னுவினையனகூறலுற்றான். (சுக)

பூவின்மேலிருந்ததெய்வத்தையலும்பொறுமையுற்றாள்
பாவியான்பயந்தநங்கைநின்பொருட்டாகப்பட்டேன்
ஆவிபோயழியநன்றேயமரர்க்குமரசனுவான்
தேவியாயிருத்தறீதேசிறையிடைத்தேம்புகின்றாய். (சுஉ)

என்னையென்குலத்தினோடுமின்னுயிர்தாங்கியீண்டு
நன்னெடுஞ்செல்வத்துய்ப்பேனுக்கினை நல்கினாலும்
உன்னைவெஞ்சிறையினீக்கியின்பத்துளுய்ப்பாயென்னுப்
பொன்னடிமருங்குவீழ்ந்தானுருமுகப்பொருமுகின்றான். (சுஙு)

மாயாசனகனை அனுமானித்து அதன்றேனஉணர்ந்த சீதைகூறுதல்.

அவ்வுரைகேட்டநங்கைசெவிகளையமையப்பொத்தி
வெவ்வுயர்த்தாவிதன்னினீங்கினள்வெகுளிபொங்கி
இவ்வுரையெற்றைகூறினின்னுயிர்வாழ்க்கைபேணிச்
செவ்வுரையன்றிதென்னுச்சிறினனுனையச்செப்பும். (சுச)

சுஉ. பொறுமையுற்றாள் - ஒருவனிடந்தங்காது பலரிடத்துந்தங்கினவள்.

அறங்கெடவழக்குநீங்கவாசர்தமரபுக்கான்ற
மறங்கெடமெய்ம்மைதேயவவைசையுறமறைகளோதும்
திறங்கெடவொழுக்கங்குன்றத்தேவரும்பேணத்தக்க
கிறங்கெடவினையசொன்ஞய்சனகன்கொணிவினையினைய. (௬௫)

வரிகெடவரினுந்தத்தம்வாழ்க்கைதேய்ந்திறினுமார்பம்
கிழிபடவயில்வேல்வந்துகிழிப்பினுமான்றோர்கூறும்
மொழிகொடுவாழ்வதல்லான்முறைகெடப்புறநின்றார்க்கும்
பழிபடவாழ்கிற்பாரும்பார்த்திவருளரோபாவம். (௬௬)

நீயுநின்கிளையுமற்றிந்நெடுநிலவரைப்புநேரே
மாயினுமுறைமைகுன்றவாழ்வெனேவயிரத்திண்டோள்
ஆயிரானமத்தாழியரியினுக்கடிமைசெய்வேன்
நாயினைநோக்குவேனோவாண்டுறந்தாவிநச்சி. (௬௭)

வரிசிலையொருவனல்லான்மைந்தரென்மருங்குவந்தார்
எரியிடைவீழ்ந்தவிட்டிலல்லரோவாசுக்கேற்ற
அரியொடும்வாழ்ந்தபேடையங்கணத்தழுக்குத்தின்னும்
நரியொடும்வாழ்வதுண்டோநாயினுங்கடைப்பட்டோனே. (௬௮)

அல்லையேலெந்தையாஞயாகத்தானலங்கல்வீரன்
வில்லையேவாழ்த்திமீட்கின்மீளுதுமீட்சியென்ப
தில்லையேலிறந்துதீர்துமிதுவலாலியம்பலாகாச்
சொல்லையேயுரைத்தாயென்னும்பழிகொண்டாயென்னச்சொன்னாள். ()

வன்றிறலரக்கனன்னவாசகமனத்துக்கொள்ளா
நின்றதுநிற்கமண்மேனிகழ்ந்தவாநிகழ்கநின்முன்
நின்றவனல்லன்போலாஞ்சனகனிக்கணத்தினின்முன்
கொன்றுயிர்குடிப்பெனென்னுச்சுரிகைவாளுரீஇக்கொண்டானல். (எ0)

சீதை இராவணனைப்பார்த்து உரைத்தல்.

என்னையுங்கொல்லாயின்னேயிவனையுங்கொல்லாயின்னும்
உன்னையுங்கொல்லாய்மற்றிவ்வுலகையுங்கொல்லாயானே
இன்னுயிர்நீங்கியென்றுங்கெடாப்புகழெய்துகின்றேன்
பின்னையுமெங்கோனம்பிற்கிளையொடும்பிழையாயென்றாள். (எக)

இரந்தனன்வேண்டிற்றல்லாலிவன்பிழையிழைத்ததுண்டோ
புரந்தான்செல்வத்தையாகொல்கையோர்பொருளிற்றோதான்
பரந்தவெம்பகையைவென்றானின்வழிப்படருநங்கை
அரந்தையளாகுமன்றேதந்தையையாலிவதாயின். (எஉ)

௬௫. வழக்கு - உலகானுபவம், ௬௮. அங்கணம் - சேற்றுநிலமுற்றம்.

என்றவன்விலக்கமீண்டான்டிருந்தநோரிறுதியின்கண்
குன்றெனநீண்டகும்பகருணனையிராமன்கொல்ல
வன்றிறற்குரங்கின்றானைவானுறவார்த்தவோதை
சென்றனசெவியினூடுதேவர்களார்ப்புஞ்செல்ல. (௭௩)

உருந்திறலமரர்நாடும்வானரவோதத்தோரும்
மிருந்திறம்மினில்லாவிருவர்நாரொலியும்விஞ்சத்
தருந்திறன்வினர்ந்தேனெம்பிக்கமரிடைத்தனிமைப்பாடு
புகுந்தனதுண்டென்றுள்ளம்பொருமல்வந்துற்றபோழ்தின். (௭௪)

கும்பகருணன் இறந்தானென்று தூதர் இராவணனுக்கு உரைத்தல்.

புறந்தருசேனைமுந்நீரிருஞ்சிறைபோக்கிப்போதப்
பறந்தனரனையதூதர்செவிமருங்கெய்திப்பையத்
திறந்திறமாகிநின்றகவிப்பெருங்கடலைச்சிந்தி
இறந்தனனும்பியம்பிற்கொன்றனனிராமனென்றார். (௭௫)

ஊரொடும்பொருந்தித்தோன்றுமொளியவனென்னவொண்பொற்
றாரொடும்புனைந்தமோலிதரையொடும்பொருந்தத்தன்னப்
பாரொடும்பொருந்திநின்றமராமரம்பணைகளோடும்
வேரொடும்பறிந்துமண்மேல்வீழ்வதேபோலவீழ்ந்தான். (௭௬)

பிறிவெனும்பீழைதாங்கள்பிறந்தநாட்டொடங்கியென்றும்
உறுவதொன்றின்றியாவியொன்றெனநினைந்துநின்றான்
எறிவருஞ்செருவிற்றம்பிதன்பொருட்டிறந்தானென்ன
அறிவழிந்தவசனாகியாற்றினனண்டமுற்ற. (௭௭)

வே

தம்பியோவானவராந்தாமரையின்காடுழக்கும்
தும்பியோநான்முகத்தோன்சேய்மதலைதோன்றாலோ
நம்பியோவிந்திரனைநாமப்பொறிதுடைத்த
எம்பியோயானுன்னையிவ்வுரையுங்கேட்டேனோ. (௭அ)

மின்னிலையவேலோனேயானுன்விழிகாணேன்
நின்னிலையாதென்றேனுயிர்பேணிநிற்கின்றேன்
உன்னிலைமைநீதாயினோடைக்களிறுந்திப்
பொன்னுலகமீளப்புகாரோபுரந்தரனார். (௭௯)

வன்னெஞ்சினென்னைநீநீத்துப்போய்வானடைந்தால்
இன்னஞ்சிலரோடொருவயிற்றின்யார்பிறப்பார்

---

௭௩. வயர் - வரிவேடம். ௭௭. முற்ற — இடிய.
௭அ. தும்பியோ-யானையே, ஓ, இரக்கத்தைக்குறிக்கும்விளிவேற்றுமை.

மின்னஞ்சம்வேலோய்விழியஞ்சவாழ்கின்றார்
தன்னெஞ்சந்தாமேதடவாரோதானவர்கள். (௮௦)

கல்லன்றோநீராடுங்காலத்துட்காறேய்க்கும்
மல்லொன்றுதோளாய்வடமேருமானுடவன்
வில்லொன்றினின்னைவிளிவித்தனனென்னும்
சொல்லன்றோவென்னைச்சுடுகின்றதுதோன்றால். (௮௧)

மாண்டனவாஞ்சூலமுஞ்சக்கரமும்வச்சிரமும்
தீண்டினவாவொன்றுஞ்செயலாற்றாவாந்தெறித்து
மீண்டனவாமானுடவன்மெல்லம்புமெய்யுருவ
நீண்டனவாந்தாமின்றுநின்றாராந்தோணோக்கி. (௮௨)

நோக்கறவுமெம்பியர்கண்மாளவுமிந்நொய்திலங்கை
போக்கறவுமாதுலனார்பொன்றவுமென்பின்பிறந்தான்
மூக்கறவும்வாழ்ந்தேனொருத்திமுலைக்கிடந்த
ஏக்கறவாலின்னமிரேனோவுனையிழந்தும். (௮௩)

தன்னைத்தான்றம்பியைத்தான்றானைத்தலைவனைத்தான்
மன்னைத்தானமர்தனைத்தான்மாருதத்தின்காதலைத்தான்
பின்னைக்கரடிக்கிறையைத்தான்பேர்மாய்த்தாய்
என்னைத்தான்கேட்டிலேனென்னானவாறிதுவே. (௮௪)

ஏழைமகளிரடிவருடவீர்ந்தென்றல்
வாழுமணியரங்கிற்பூம்பள்ளிவைகுவாய்
சூழுமலகைதுணங்கைப்பறைதுவைப்பப்
பூழியணைமேற்றுயின்றனையோபோர்க்களத்தே. (௮௫)

செந்தேன்பருகித்திசைதிசையுநீவாழ
உய்ந்தேனினியின்றுநானுமுனக்காவி
நொந்தேன்பிரியேன்றனிப்போகத்தாழ்க்கிலேன்
வந்தேன்றொடாமதக்களிறேவந்தேனால். (௮௬)

அண்டத்தளவுமினையபகர்ந்தழைத்துப்
பண்டைத்தன்னாமத்தின்காரணத்தைப்பாரித்தான்
தொண்டைக்கனிவாய்துடிப்பமயிர்பொடிப்பக்
கெண்டைத்தடங்கண்ணாளுள்ளேகினுகினுத்தான். (௮௭)

வீங்கினாள்கொங்கைமெலிந்தமெலிவகல
ஓங்கினாளன்னமுவந்தாளுயிர்புகுந்தாள்

௮௩. ஏக்கறவால் - ஆசையால்.
௮௭. இராவணன் என்பதற் கழுபவன் என்றும் பொருளாதலிற் பண்டைத்தன்னாமத்தின் காரணத்தைப் பாரித்தான் என்றார்.

நீங்கிலாக்கற்பிற்றிருமடந்தைதேடியாம்
பாங்கிணுற்றதனையாரேபகர்கிற்பார். (அஅ)

கண்டான்கருணைனத்தன்கண்கடந்ததோளானைக்
கொண்டாளொருதனுக்கமன்னவனைக்கொற்றவனுர்
தண்டாதவாளிதடிந்ததனிவார்த்தை
உண்டாளுடறடித்தான்வேறொருத்தியொக்கின்றான். (அக)

தாவரியபேருலகத்தெம்பிவசத்தோடும்
யாவரையுங்கொன்றடுக்கியென்றும்மிறவாத
மூவரையுமேலைநாண்மூவாமருந்துண்ட
தேவரையும்வைப்பேன்சிறையென்னச்சீறினான். (கo)

அக்கணத்துமந்திரியாராற்றச்சிறிதாறி
இக்கணத்துமானுடவீரக்குருதியால்
மூக்கைப்புனலுகுப்பனெம்பிக்கெனமுனியாத்
திக்கனைத்தும்போர்கடந்தான்போயினன்றீவிழியான். (கக)

கூறேமினிநாமக்கும்பகருணனுர்
பாறுடுவெங்களத்துப்பட்டாரெனப்பதையா
வேறோர்சிறையினவைம்மின்விரைந்தென்ன
மாறோர்திசைநோக்கிப்போனார்மகோதரனுர். (கஉ)

வே று.

வரிசடைநறுமலர்வண்டுபாடலாத்
துரிசடைபுரிகுழல்சும்மைசுற்றிய
ஒருசடையுடையவட்குடையவன்பினுன்
திரிசடைதெருட்டுவாளினையசெப்புவாள். (கங)

திரிசடை மாயாசனகன் தன்மைகூறுதல்.

உந்தையென்றனக்கெதிருருவமாற்றியே
வந்தவன்மருத்தனென்றுளனெனுர்மாயையான்
அந்தமில்கொடுந்தொழிலரக்கனுமெனுஞ்
சிந்தையினுணர்த்தினளமுதின்செம்மையாள். (கச)

நங்கையுமவளுரைநாளுந்தேறுவான்
சங்கையுமின்னலுந்துயருந்தள்ளினுள்
இங்குநின்றேகியவிலங்கைகாவலன்
அங்குநின்றியற்றியதறைகுவாமரோ. (கரு)

கரு வது. மாயாசனகப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கககஎ௯.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

---

கக, மூக்கைப்புனலுகுப்பன் - மூன்றுக்கை நீரளிப்பன்,

## பதினேழாவது

# அதிகாயன்வதைப்படலம்.

கொழுந்துவிட்டழன்றெரிமடங்கல்கூட்டற
எழுந்தெரிவெகுளியானிருமருங்கினும்
தொழுந்தகையமைச்சரைச்சுளித்துநோக்குறா
மொழிந்தனனிடியொடுமுகிலுஞ்சிந்தவே. (௧)

ஏகுதிரெம்முகத்தெவருமென்னுடை
யோகவெஞ்சேனையுமுடற்றும்முடைச்
சாகரத்தானையுந்தழுவச்சார்ந்தவர்
வேகவெஞ்சிலைத்தொழில்விலக்கிவீட்டிரால். (௨)

எடுத்தவரிருந்துழியெய்தியாரையும்
படுத்திவண்மீடுமென்றுரைத்தபண்பினீர்
தடுத்திலீரெம்பியைத்தாங்குகிற்றிலீர்
கொடுத்திலீரும்முயிர்வீரக்கோட்டியீர். (௩)

உம்மையினின்றுநானுலகமூன்றுமென்
வெம்மையினுண்டதுநீரென்வென்றியால்
இம்மையினெடுந்திருவெய்தினீரினிச்
செம்மையினின்றுயிர்தீர்ந்துதீர்திரால். (௪)

ஆற்றலமென்றிரே லென்மின்யானவர்
தோற்றலம்வந்துகத்துரந்துதொன்னெடுங்
கூற்றலதுயிராதுகுடிக்குங்கூர்த்தவென்
வேற்றலைமானுடர்வெரிநிற்காண்பெனால். (௫)

அல்லதுமுண்டுமெக்குரைப்பதாமமர்
வெல்லுதுமென்றிரேன்மேற்செல்வீரினி
வல்லதுமடிதலேயென்னின்மாறுதிர்
சொல்லுநுங்கருத்தெனமுனிந்துசொல்லினான். (௬)

வேறு.

நதிகாய்நெடுமானமுநாணுமுறா
மதிகாய்குடைமன்னனைவைதுரையா
விதிகாயினும்வீரம்வெலற்கரியான்
அதிகாயனெனும் பெயரானறைவான். (௭)

௫. என்மின் - என்றுரையுங்கள்.

அதிகாயன் இராவணனைநோக்கித் தன்வீரங்கூறுதல்.

வானஞ்சகவையகமஞ்சகமா
லானஞ்சகமுகத்தவனஞ்சகமேல்
கானஞ்சினெனென்றனைநாணுகபோர்
யானஞ்சினெனென்றுமியம்புமதோ. (௮)

வெம்மைப்பொருதானவர்மேல்வலியோர்

உம்மைக்குலையப்பொருமும்பரையும்
கொம்மைக்குயவட்டணைகொண்டிலெனோ. (௯)

காய்ப்புண்டநெடும்படைகையுளதாத்
தேய்ப்புண்டவனுஞ்சிலசில்கணையால்
ஆய்ப்புண்டவனும்மவர்சொல்வலதால்
ஏய்ப்புண்டவனும்மெனவெண்ணினையோ. (௧௦)

உம்பிக்குயிர்றுசெய்தானொருவன்
தம்பிக்குயிர்றுசமைத்தவனைக்
கம்பிப்பதொர்வன்றுயர்கண்டிலெனேல்
நம்பிக்கொருநன்மகனோவினிநான். (௧௧)

கிட்டிப்பொருதக்கிளர்சேனையெலாம்
மட்டித்துயர்வானரர்வன்றலையை
வெட்டித்தரையிட்டிருவில்லினரைக்
கட்டித்தருவென்னிதுகாணுதியால். (௧௨)

சேனைக்கடலோடிடைசெல்கெனினும்
யானிப்பொழுதேதனியேகெனினும்
தானொத்ததுசொல்லுதிதாவிடையென்
றூனித்திறமுன்னியரக்கர்பிரான். (௧௩)

சொன்னயிதுநன்றுதுணிந்தனைநீ
அன்னுனுயிர்தந்தனையாமெனின்யான்
பின்னுளவிராமனெனும்பெயரான்
தன்னுருயிர்கொண்டுசமைக்குவெனல். (௧௪)

போவாயிதுபோதுபொலங்கழலோய்
மூவாயிரகோடியரோடுமுரண்

---

௮. மாலான் அஞ்சுமுகத்தவன்-மாலும் ஐம்முகனுகிய உருத்திரன்.
௯. வட்டணைகொண்டிலனோ-தாளம்போட்டிலனோ.
௧௦. தேய்ப்புண்டவன்-அட்சன். ஆய்ப்புண்டவன்-கும்பகருணன்.
ஏய்ப்புண்டவன் - விபீடணன்.
௧௧. நம்பிக்கு - ஆடவர்திலதனுகிய உனக்கு.

காவார்கரிதேர்பரிகாவலினின்
றேவாதனயாவையுமேவினனல். (கரு)

கும்பக்கொடியோனுநிகும்பனும்வே
றம்பொற்கழல்வீரனகம்பனுமுன்
செம்பொற்பொலிதேரயல்செய்குவரால்
உம்பர்க்கும்வெலற்கரியாருரவோர். (கசு)

ஓரோருசிவற்குளதொப்புளவாம்
வாரோருவயப்பரியாயிரம்வன்
போரேறிடவேறுவபூணுறுதிண்
தேரோருதிதந்தனனென்வெந்திறலோய். (கஎ)

ஆமத்தனைமாவுடையத்தனைதேர்
சேமத்தனபின்புடைசெல்லவடும்
கோமத்தநெடுங்கரிகோடியொடும்
போமத்தனைவெம்புரவிக்கடலீர். (கஅ)

என்றேவிடைநல்கவிறைஞ்சியெழா
வன்றான்வயிரச்சிலைகைக்கொடுவாள்
பொன்றாழ்கவசம்புகுதாமுகிலின்
நின்றானிமையோர்கணெளிந்தனரால். (சுக)

பல்வேறுபடைக்கலம்வெம்பகலோன்
எல்வேறுதெரிப்பகொடேகினனல்
சொல்வேறுதெழிக்குநர்சுற்றவுமா
வில்வேறுதெரிப்புறமேனியினன். (உ௦)

இழையஞ்சனமால்களிறெண்ணிலரி
முழையஞ்சமுழங்கினமும்முறைநீர்
உழையஞ்சமுழங்கினநாணொலிகோன்
மழையஞ்சமுழங்கினமாமுரசே. (உக)

ஆர்த்தார்நெடுவானநடுங்கவடி
பேர்த்தார்நிலமாமகள்பேர்வனெனத்
தூர்த்தார்நெடுவேலைகடூளியினல்
வேர்த்தாரதுகண்டுவிசும்புறைவோர். (உஉ)

அடியோடுமதக்களியானைகளில்
பிடியோடுநிகர்த்தனபின்புறமுன்
தடியோடுதொடக்கியதாரையவெண்
கொடியோடுதொடக்கியகொண்மூவெலாம். (உ௩)

உ௦. வெம்பகலோன் - உச்சிக்கால சூரியன்.

தாரூடினமால்கரிபின்புடைகாழ்
மாரூடினமாமதமண்டுதலால்
ஆரூடினபாய்பரியானைகளும்
சேரூடினசேனைநிசென்றவெலாம். (உச)

தேர்சென்றனசெங்கதிரோனொடுதேர்
ஊர்சென்றனபோலொளியோடைகளின்
கார்சென்றனகார்நிறைசென்றனபோல்
பார்சென்றனசென்றிலபாய்பரியே. (உ௫)

மேருத்தனைவெற்பினமொய்த்துநெடும்
பாரிற்செலுமாறுபடப்படரும்
தேர்சுற்றிடவேகொடுசென்றுமுரட்
போர்முற்றுகளத்திடைபுக்கனனால். (உ௬)

கண்டானவிராமனெனுங்களிமா
உண்டாடியவெங்கள னூடுருவப்
புண்டானுறநெஞ்சுபுழுக்கமுறத்
திண்டாடினன்வந்தசினத்திறலோன். (உ௭)

மலைகண்டனபோல்வருதேரொடுதோள்
கலைகண்டகருங்கடல்கண்டுளவாம்
நிலைகண்டனகண்டொருதாதைநெடுந்
தலைகண்டிலனின்றுசலித்தனனால். (உ௮)

மிடலொன்றுசரத்தொடுமீதுயர்வான்
திடலன்றுதிசைக்களிறன்றொருதிண்
கடலன்றிதெனெந்தைகடக்கரியான்
உடலென்றுயிரோடுமுருத்தனனால். (உ௯)

எல்லேயிவைகாணியவெய்தினனே
வல்லேயுளராயினமானுடரைக்
கொல்லேனொருகானுயிர்கோணெறியிற்
செல்லேனெனினிவ்விடதீர்குவெனே. (௩0)

என்னுமுனியாவிதிழைத்துளவன்
பின்னுனையுமிப்படிசெய்துபெயர்ந்
தன்னுனிடர்கண்டிடாறுவனென்
றன்னுவெருவற்கிதுணர்த்தினனால். (௩௧)

அதிகாயன் இலக்குமணனுக்குத் தூதனுப்புதல்.

வாநீமயிடன்னொருவல்விசையிற்
போநீயிலக்குவனிற்புகல்வாய்

௩௨. வானிஎன்றும் - பாடம்.

நாளீது துணிந்தனெனன்னினெனுல்
மேனியிதுணர்ந்துவிளம்பிடுவாய். (கஉ)

அந்தாரிளவற்கயர்வெய்தியமும்
தந்தாதைமனத்திடாதள்ளிடுவான்
உந்தார்துயரோடுமுருத்தெரிவான்
வந்தானெனமுன்சொல்வழங்குதியால். (கங)

கோளுற்றவனெஞ்சசுடக்குழைவான்
ஆளுற்றவிருக்கையில்யானெருதன்
தாளற்றுருளக்கணைதள்ளிடுவான்
சூளுற்றதுமுண்டதுசொல்லுதியால். (கச)

நீதென்றதுசிந்தனைசெய்திலனுல்
ஈதென்றறமன்னெறியாமெனநீ
தூதென்றிகழாதுளசொல்வதலால்
போதென்றுடனேகொடுபோதுதியால். (கரு)

செருவாசையினுர்புகழ்தேடுறுவார்
இருவோரையுநீவலியுற்றெதிரோ
பொருவோர்நமனுர்பதிபுக்குறைவோர்
வருவோரையெலாம்வருகென்னுதியால். (கசு)

சிந்தாகுலமெந்தைதிருத்திடுவான்
வந்தானெனவென்னெதிரேமதியோய்
தந்தாயெனின்யானலதியார்தருவார்
உந்தாரியவல்லவுயர்ந்தவெலாம். (கஎ)

வேறேயவிலக்குவனென்னவிளம்
பேறேவருமேவிமையோரெதிரே
கூறேபலசெய்துயிர்கொண்டுனையும்
மாறேயொருமன்னெனவைக்குவெனுல். (கஅ)

விண்ணுடியர்விஞ்சையரஞ்சொலினுர்
பெண்ணாமுதன்னவர்பெய்தெவரும்
உண்ணுதனகூர்நறவுண்டதசும்
பெண்ணாயிரமாயினுமீகுவெனுல். (கக)

உறைதந்தனசெங்கதிரோனுருவில்
பொறைதந்தனகாசொளிர்பூணிமையோர்
திறைதந்தனதெய்வவிதிக்கிழவன்
முறைதந்தனதந்துமுடிக்குவெனுல். (சo)

கஎ. உந்தாரிய - உந்த அரிய. உந்த - நீக்க.

மாறுமதவாரியவண்டினொடும்
பாறுடுமுகத்தனபல்பகலும்
தேறுதனசெங்களிவெங்கதமா
நூறுயிரமாயினுநூறுவெனல். (சக)

செம்பொன்னினமைந்துசமைந்தனதேர்
உம்பர்க்கெடுவானினுமொய்ப்புறழா
பம்புமணிதாரணிபாய்பரிமா
இம்பர்க்கடவாதனவீகுவெனல். (சஉ)

நிதியின்னிரைகுப்பைநிறைந்தனவும்
பொதியின்மிளிர்காசுபொறுத்தனவும்
மதியின்னொளிர்தூசுவகுத்தனவும்
அதிகஞ்சுகமாயிரமீகுவெனல். (சங)

மற்றும்மொருநீதின்மணிக்கணிதம்
உற்றன்னினிவியாவையுமூந்துவெனல்
பொற்றின்கழலாய்நனிபோவெனலோ
டெற்றுந்திரடோளவனேகினனால். (சச)

ஏகித்தனிசென்றெதிரெய்தலுறும்
காகுத்தனையெய்தியகாலையின்வாய்
வேகத்தொடுவீரர்விசைத்தெழலும்
ஓகைப்பொருளுண்டெனவோதினனால். (சரு)

இராமன் தூதனை விடுமினெனல்.

போதம்முதல்வாய்மொழியேபுகல்வோன்
ஏதும்மதியான்வழிதேகினனால்
தூதன்னவனைச்சுளியன்மினென
வேதம்முதனாதன்விலக்கினனால். (சசு)

என்வந்தகுறிப்பதியம்பெனலும்
மின்வந்தவெயிற்றவன்வில்வலவன்
பின்வந்தவனையறிபெற்றியதால்
மன்வந்தகருத்தெனமன்னர்பிரான். (சஎ)

தூதன் இலக்குமணனிடம் தான்வந்த செயலுரைத்தல்.

சொல்லாயதுசொல்லிடுசொல்லிடென
வில்லாளனிளங்கிளையோன்வினவப்
பல்லாயிரகோடிபடைக்கடன்முன்
நில்லாயெனநின்றுநிகழ்த்தினனால். (சஅ)

சஉ. இம்பர்கடவாதன - வானிற்செல்வன.

உன்மேலதிகாயனுருத்தனாய்
நன்[illegible]
தன்மேலெதிரும்வலி தக்குளையேல்
பொன்மேனியவென்னொடுபோதுதியால். (௪௯)

சய்யப்படிவத்தொருதந்தையைமுன்
மெய்யெப்படிசெய்தனனும்முன்விரைந்
தய்யப்படலப்படியிப்படியில்
செய்யப்படுகிற்றிதெரித்தனனால். (௫0)

கொன்றானொழியக்கொலைகோளறியான்
நின்றானொடுநின்றதெனேடியெனின்
தன்றாதைபடுந்துயர்தந்தையைமுன்
வென்றானையயற்றுமவேட்கையினால். (௫௧)

வானோர்களுமண்ணினுளோர்களுமற்
றேனோர்களுமிவ்வுரைகேண்மினிவன்
தானேபொருவானயலேதமர்வந்
தானுமுடன்பொருவானமைவான். (௫௨)

என்றேயுலகேழினொடேழினையும்
தன்றாமரைபோலிருதாளளவா
நின்றானுரைசெய்யநிசாசரனும்
பின்றாவுரையொன்றுபிதற்றினனால். (௫௩)

எழுவாயினியென்னுடனென்றெரியும்
மழுவாய்நிகர்வெஞ்சொல்வழங்குதலும்
தழுவாவுடனேகுதிதாழலெனத்
தொழுவார்தொழுதானரிசொல்லுதலும். (௫௪)

எல்லாமுடனெய்தியபின்னிவனே
வில்லாளொடுபோர்செயவேண்டுமெனை
நல்லாறுடைவீடணனானன்முன்
சொல்லாடினனன்னவைசொல்லுதுமால். (௫௫

விபீடணன் அதிகாயன் தன்மைகூறல்.

வாரேறுகழற்சினவாளரியெம்
போரேறொடுபோர்புரிவானமையாத்
தேரேறுசினக்கடுவெந்தறுகட்
காரேறெனவந்தகதத்தொழிலோன். (௫௬)

ஓவாநெடுமாதவமொன்றுடையான்
தேவாசுராதியர்செய்செருவில்

௫௭. தேவர் அசுரர் - தேவாசுரர்.

சாவானிறையுஞ்சலியாவலியான்
மூவாமுதனான்முகனார்மொழியால். (௫௭)

கடமேய்கயிலைக்கிரிகண்ணுதலோ
டிடமேறவெடுத்தனமென்றிவனைத்
திடமேலுலகிற்பலதேவரொடும்
வடமேருவெடுக்கவளர்த்தனனால். (௫௮)

மாலாரொடுமந்தரமாசுணமும்
மேலாகியதேவரும்வேண்டுமெனா
ஆலாலமுமாரமிழ்தும்மமையக்
காலானெடுவேலைகலக்கிடுமால். (௫௯)

ஊழிக்குமுயர்ந்தொருநாளொருவாப்
பாழித்திசைநின்றுசுமந்தபணைச்
சூழிக்கரிதன்னுதரேன்வலியோ
ஆழிக்கிரிதன்னுமொரங்கையினால். (௬0)

காலங்கள்கணக்கிலகண்ணிமையா
ஆலங்கொண்மிடற்றவனாழல்வாய்
வேலங்கொழியக்கொடுவிட்டதுநீள்
சூலங்கொலெனப்பகர்சொல்லுடையான். (௬௧)

பகையாடியவானவர்பல்பகையூர்
புகையாடியரான்புனைவாகையினான்
மிகையாருயிருண்ணெனவீசியவெந்
தகையாழிதகைந்ததனுத்தொழிலான். (௬௨)

உயிரொப்புறுபல்படையுள்ளவெலாம்
செயிரொப்புறுமிந்திரர்சிந்தியநாள்
அயிரொப்பனநுண்டுகள்செய்தவர்தம்
வயிரப்படைதள்ளியவாளியினான். (௬௩)

கற்றான்மறைநூலொடுகண்ணுதல்பால்
முற்றாதனதேவர்முரட்படைதாம்
மற்றாரும்வழங்கவலாரில்வும்
பெற்றானெடிதாண்மைபிறந்துடையான். (௬௪)

அறனல்லதுகல்லதுமற்றறியான்
மறனல்லதுபல்பணிமாறணியான்
திறனல்லதொராருயிருஞ்சிதையான்
உறனல்லதுபேரிசையென்றுணர்வான். (௬௫)

௫௮. கடமே - இமயமலை.

காயத்துயிரேவிடுகாலையினும்
மாயத்தவர்கூடிமலைந்திடினும்
தேயத்தவர்செய்குதல்செய்திடினும்
மாயத்தொழில்செய்யமதித்திலனால். (௬௬)

மது கைடவ சரிதம்.

மதுகைடவரென்பவர்வானவர்தம்
பதிகைகொடுகட்டவர்பண்டொருநாள்
அதிகைதவராழியனர்தனையும்
விதிகைம்மிகமுட்டியவெம்மையினர். (௬௭)

நீராழியிழிந்துநெடுந்தகையைத்
தாராயமரென்றனர்தாமொருநாள்
ஆராழியவண்ணனுமஃதிசையா
வாராவமர்செய்கெனவந்தனனால். (௬௮)

வல்லாருரு வாயிரமாய்வரினும்
நல்லார்முறைவீசிநகுந்திறலார்
மல்லாவினகாதுமலைந்தனன்மால்
அல்லாயிரமாயிரமஃதினவால். (௬௯)

தன்போல்பவர்தானுமிலாததனிப்
பொன்போலொளிர்மேனியனைப்புகழ்வோய்
என்போல்பவர்சொல்லுவதெண்ணுடையார்
உன்போல்பவர்யாருளரென்றுரையா. (௭0)

ஒருவேமுலகேழையுமுண்டுமிழ்வேம்
இருவேமொடுநீதனியித்தனைநாள்
பொருவேமொடுநேர்பொருதாய்புகழ்வோய்
தருவேநின்மனத்ததுதந்தனமால். (௭௧)

ஒல்லும்படிநல்லதுனக்குதவச்
சொல்லும்படியென்றவர்சோறலுமே
வெல்லும்படிநம்மைவிளம்புமெனக்
கொல்லும்படியாலரிகூறுதலும். (௭௨)

இடையிற்படுகிற்கிலம்யாமொருவின்
தொடையிற்படுகிற்றுமெனத்துணியா
அடையச்செயகிற்றியதாணையெனு
'நடையிற்படுநீதியர்நல்குதலும். (௭௩)

விட்டானுலகியாவையுமேலொடுகீழ்
எட்டாவொருவன்றனிடத்தொடையை

௭௨. ஒல்லும்படி - பொருந்தும்படி.

ஒட்டாதவரொன்றினரூழ்வலியால்
பட்டாரிதுபட்டதுபண்டொருநாள். (எச)

தனிநாயகன்வன்கதைதன்கைகொளா
நனிசாடவிழுந்தனர்காளுலவாப்
பனியாமதுமேதைபடப்படர்மே
தினியானதுபூவுலகெங்கணுமே. (எரு)

விதியாலிவ்வுகந்தனின்மெய்வலியான்
மதுவானவனெம்முன்மடிந்தனனால்
கதிர்தானிகர்கைடவனிக்கதிர்வேல்
அதிகாயனிதாகவறிந்தனனால். (எசு)

இராமன் விபீடணற்கு இலக்குமணன் பராக்கிரமமுதலிய கூறல்.

ரயான்

நன்றாகுகவென்றொருநாயகனும்
மின்றானுமிழ்வெண்ணகைவேறுசெயா
நின்றானிதுகூறிநிகழ்த்தினனால். (எஎ)

எண்ணாயிரகோடியிராவணரும்
விண்ணாடரும்வேறுலகத்தெவரும்
நண்ணாவொருமூவருநண்ணிடினும்
கண்ணாலிவன்விற்றொழில்காணுதியால். (எஅ)

வானென்பதென்வையகமென்பதென்மால்
தானென்பதென்வேறுதனிச்சிலையோர்
யானென்பதெனீசனெனின்றிமையோர்
கோனென்பதெனெம்பிகொதித்திடுமேல். (எகூ)

தெய்வப்படையுஞ்சினமூந்திறனும்
மய்யற்றொழிமாதவமற்றுமெலாம்
எய்தற்குளவோவிவனிச்சிலையில்
கய்வைப்பனவேயிறல்காணுதியால். (அ௦)

என்றேவியைவஞ்சனைசெய்தெழுவான்
அன்றேமுடிவானிவனன்னவன்சொல்
குன்றேனெனவேகியகொள்கையினால்
நின்றானுளனாயநெடுந்தகையான். (அக)

ஏகாயுடனீயுமெதிர்ந்தனனும்
மாகாயநெடுந்தலைவாளியொடும்

எச. இதுபட்டது - இதுநடந்தது. எகூ. கொதித்திடுமேல் - சீறுவானானால்.

ஆகாயமளாந்தவ்வுருத்தனைக்
காகாதியநுங்குதல்காணுதியால். (அஉ)

நீரைக்கொடுநீயெதிர்நிற்கினுமே
நீரக்கொடியாரொடுதேவர்பொரும்
போரைக்கொடுவந்துபுகுந்ததுநாம்
ஆரைக்கொடுவந்தயர்த்தனையோ. (அங)

சிவனல்லனெனிற்றிருவின்பெருமான்
அவனல்லனெனிற்புவிதந்தருளும்
தவனல்லனெனிற்றனியேவலியோன்
இவனல்லனெனிற்பிறர்யாருளரோ. (அச)

ஒன்றாயிரவெள்ளமொருங்குளவாம்
வன்றானையர்வந்தவளைந்தவெலாம்
கொன்றானிவனல்லதுகொண்டுடனே
நின்றார்பிறருண்மைநினைந்தனையோ. (அரு)

கொல்வானுமிவன்கொடியோனையெலாம்
வெல்வானுமிவன்னடல்விண்டுவெனா
ஒல்வானுமிவன்னுடனேயொருநீ
செல்வாயெனவேவுதல்செய்தனனால். (அசு)

இராமனைவணங்கி இலக்குமணன் போர்புரியச் செல்லுதல்.

அக்காலையிலக்குவனாரியனை
முக்காலும்வலங்கொடுமூதுணர்வின்
மிக்கான்மதிவீடணன்மெய்தொடரப்
புக்கானவன்வந்துபுகுந்தகளம். (அஎ)

சேனைக்கடல்சென்றதுதென்கடன்மேல்
ஏனைக்கடல்வந்தெழுந்ததெனா
ஆனைக்கடறேர்பரியாண்மிடையும்
தானைக்கடலோடுதலைப்படலும். (அஅ)

வேறு.

பசும்படுகுருதியிற்பண்டுசேறுபட்
டசும்பறவுருகியவுலகமார்ப்பெழக்
குசும்பையினறுமலர்ச்சுண்ணக்குப்பையின்
விசும்பையுங்கடந்ததுவிரிந்ததூளியே. (அகூ)

தாமிடித்தெழும்பணைமுழக்குஞ்சங்கினம்
ஆமிடிக்குமுறலுமார்ப்பினோதையும்

அகூ. குசும்பை - ஒருமலர்விசேடம்.

ஏழுடைக்கொடுஞ்சிலைபிடிப்புமஞ்சித்தம்
வாய்மடித்தொடுங்கினமகரவேலையே. (௧௦)

அசுரவானர யுத்தம்.

உலைதொறுங்குருதிநீரருவியொத்துக
இலைதுறுமரமெனக்கொடிகளிற்றுக
மலைதொறும்பாய்ந்தெனமாலையானையின்
தலைதொறும்பாய்ந்தனகுரங்குதாவியே. (௧௧)

கிட்டினகிளைநெடுங்கோட்டகீழுகு
மட்டினவருவியின்மதத்தவானரம்
விட்டனநெடுவரைவெம்மைவேழத்தை
முட்டினவொத்தனமுகத்தின்வீழ்வன. (௧௨)

இடித்தனவுறுக்கினவிறுக்கியேய்ந்தன
தடித்தனவெயிற்றினுற்றலைகள்சந்தறக்
கடித்தனகவிக்குங்கால்கண்மேற்படத்
துடித்தனகுருதியிற்றுரகராசியே. (௧௩)

அடைந்தனகவிக்குலமெற்றவற்றன
குடைந்தெறிகால்பொரப்பூட்கைக்குப்பைகள்
இடைந்தனமுகிற்குலமிரிந்துசாய்ந்தென
உடைந்தனகுலமருப்புகுத்தமுத்தமே. (௧௪)

தோல்படத்துதைந்தெழுவயிரத்துணிகர்
கால்படக்கைபடக்காலபாசம்போல்
வால்படப்புரண்டனர்நிருதர்மற்றவர்
வேல்படப்புரண்டனர்கவியின்வீரரே. (௧௫)

மாவமுஞ்சிலையொடுமலையும்வாளெயிற்
றாவமுங்கரிகளும்பரியுமல்லவும்
விரவினகவிக்குலம்வீசவிம்மலால்
உரவருங்கானெனப்பொலிந்தநம்பரே. (௧௬)

தடவரைக்கவிக்குலத்தலைவர்தாங்கின
அடல்வலிநிருதர்தம்மணிகராசிமேல்
விடவிடவிசும்பிடையிடைந்துவீழ்வன
படர்கடலினமழைபடிவபோன்றவே. (௧௭)

இழுக்கினராடிகளினிங்குமங்குமா
மழுக்களுமயில்களும்வாளுந்தோன்களும்
முழுக்கினருழக்கினர்மூரியாக்கையை
ஒழுக்கினர்நிருதரையுதிரவாற்றினே. (௧௮)

---

௧௦. மகரம் - சுறாமீன்.

மிடலுடைக்கவிக்குலங்குருதிவெள்ளநீர்
இடையிடைநீந்தினவியைந்தயானையின்
திடரிடைச்சென்றவையொழுகிச்சேர்ந்தன
கடலிடைப்புக்கனகரையுங்காண்கில. (௯௯)

கால்பிடித்தீர்த்திழிகுருதிக்கண்ணகட்
சேல்பிடித்தெழுதிரையாற்றிற்றின்னொடுங்
கோல்பிடித்தெழுகுறள்குருடர்கூட்டம்போல்
வால்பிடித்தொழுகினகவியின்மாலையே. (௧௦௦)

பாய்ந்தனவிருதர்தம்பரவைபன்முறை
காய்ந்தனகடும்படைகலக்கிக்கைதொறும்
தேய்ந்தனசிதைந்தனசிந்திச்சேணுறச்
சாய்ந்தனதகைப்பெருங்கவியின்றானையே. (௧௦௧)

இலக்குமணன் போர்த்திறம்

அத்துணையிலக்குவனஞ்சலஞ்சலென்
றெத்துணைமொழிகளுமியம்பியேற்றினன்
கைத்துணைவில்லினைக்காலன்வாழ்வினை
மொய்த்துணைநாணினைமுழங்கத்தாக்கினன். (௧௦௨)

நுண்மறைத்தொளிப்பினுநுவன்றபூதங்கள்
மேன்மறைத்தொளிப்பினும்விரிஞ்சன்வீயினும்
கான்மறைந்தொளிக்கிலாக்கடையிற்கண்ணகன்
நான்மறையார்ப்பெனநடந்ததவ்வொலி. (௧௦௩)

தூர்ந்தனசுடுசரந்தூர்ந்ததோன்றல
கார்ந்தனவிருதர்தங்கரையில்யாக்கையின்
நிரந்தரநெடும்பிணம்விசும்பினெஞ்சுறப்
பார்ந்தனகுருதியப்பள்ளவெள்ளத்தின். (௧௦௪)

யானையின்கரந்துரந்திரதவீரர்தம்
வானுயர்முடித்தலைதடிந்துவாசியின்
காணிரையறுத்துவெங்கறைக்கண்மொய்ம்பரை
ஊனுடையுடல்பிளந்தோடுமம்புகள். (௧௦௫)

வில்லிடையறுத்துவேறணித்துவீரர்தம்
எல்விடுகவசமுமார்புமீர்த்தெறி
கல்லிடையறுத்துமாக்கடிந்துதேரழீஇக்
கொல்லியல்யானையைக்கொல்லுங்கூற்றினே. (௧௦௬)

வெற்றிவெங்கரிகளின்வளைந்தவெண்மருப்
பற்றெழுவிசைகளினும்பரண்மின

௧௦௨. அத்துணை - அவ்வமயம்.

முற்றருமுப்பகற்றிங்கள்வெண்முளை
உற்றனவிசும்பிஸைட்ப்பலவுமொத்தன. (கOஎ)

கண்டகர்நெடுந்தலைகனலுங்கண்ணன
துண்டவெண்பிறைத்துணிகவ்வித் தூக்கிய
குண்டலமீன்குலந்தழுவிக்கோண்மதி
மண்டலம்விழுந்தனபோன்றமண்ணினே. (கOஅ)

கூர்மருப்பிணையனகுறைந்தகையன
கார்மதக்கனவரைகவிழ்ந்துவீழ்வன
போர்முகக்குருதியின்புணரிபுக்கன
பாரொடுக்குறுநெடும்பன்றிபோன்றன. (கOகூ)

புண்ணுறவுயிருகும்புரவிபூட்டறக்
கண்ணகன்றேர்க்குலமறிந்தகாட்சிய
எண்ணுறுபெரும்பதம்வினையினெஞ்சிட
மண்ணுறவிண்ணின்வீழ்மானம்போன்றன. (ககO)

அடக்கருங்கவர்தனின்றாடுகின்றன
விடற்கரும்வினையறச்சிந்திமெய்யுயிர்
கடக்கருந்துறக்கமேகலந்தவாமென
உடற்பொறையுவகையிற்குனிப்பவொத்தன. (ககக)

ஆடுகவந்தமொன்றாறெண்ணுயிரம்
வீடியபொழுதெனும்பனுவன்மெய்யதேல்
கோடியின்மேலுளகுனித்தகொற்றவன்
பாடினியொருவராற்பகாற்பாலதோ. (ககஉ)

ஆனையின்குருதியுமரக்கர்சோரியும்
ஏனைவெம்புரவியினுதிரத்தீட்டமும்
கானினுமலையினும்பார்தகாரப்புனல்
வானயாறுமெனக்கடன்மடுத்ததே. (ககக)

தாக்கியசரங்களிற்றலைகணீங்கிய
ஆக்கையபுரசையோடனைந்ததானன
மேக்குயரங்குசக்கையவெங்கரி
தூக்குவகணிப்பிலவரக்கர்நோன்பிணம். (ககச)

கோளுடைக்கணைபடப்புரவிகூத்தன
தோளுடைநெடுந்தலைதுமிந்துந்தீர்கில
ஆளுடைக்குறைத்தலையதிரவாடுவ
வாளுடைத்தடக்கையவாசிமேலன. (ககரு)

ககஉ. கொற்றவன் - இலக்குமணன். பாடு - பெருமை.

வய்வனமுனிவர்சொல்லனையவாளிகள்
கொய்வனதலைகடோள்குறைத்தலைக்குழாம்
கய்வனைவரிசிலைக்கடுப்பிற்கைவிடா
எய்வனவெனைப்பலவிரதமேலன. (௧௧௯)

தாதையைத்தம்முனைத்தம்பியைத்தனிக்
காதலைப்பெயரனைமருகனைக்களத்
தூதையினொருகணையுருவமாண்டனர்
சிதையென்றொருகொடுங்கூற்றந்தேடினர். (௧௧எ)

தூண்டருங்கணைபடத்துமிர்ந்துதுள்ளிய
நீண்டருநெடுந்தலைதழுவிச்சேர்ந்தன
பூண்டெழுகரதலம்பொறுக்கலாதன
ஆண்டலைகிகர்த்தனவெருவையாடுவ. (௧௧அ)

ஆயிரவாயிரகோடியாய்வரும்
தீயுமிழ்கடுங்கணைமனத்திற்செல்வன
பாய்வனபுகுவனநிருதர்பல்லுயிர்
ஓய்வனநமன்றமர்கால்களோயவே. (௧௧௯)

விளக்குவான்கணைகளால்விளிந்துமேருவைத்
துளக்குவாருடற்பொறைதுணிந்துதுள்ளுவார்
இளக்குவாரமார்தஞ்சிரத்தையேன்முது
குளக்குவாணிலமகள்பிணத்திணுங்கலால். (௧௨0)

தாருகனென்றுளனொருவன்றுநெடு
மேருவின்பெருமையானெரியின்வெம்மையான்
போருவர்தழக்குவான்புகுந்துதாங்கினுன்
தேரினன்சிலையினனுமிழுந்தீயினன். (௧௨௧)

தூர்ந்தனநெடுஞ்சரநெருப்பின்றோற்றத்த
பரந்தனவிசும்பிடையொடுங்கப்பண்டுடை
வார்ந்தனின்வளர்வனவவற்றைவள்ளலும்
கரந்தனன்கணைகளான்முனிவுகார்ந்துவான். (௧௨௨)

அண்ணறன்வடிக்கணைதுணிப்பவற்றவன்
கண்ணகனெடுந்தலைவிசையிற்காரெனை
விண்ணிடையார்த்ததுவிரைவின்மெய்யுயிர்
உண்ணியவந்தவெங்கூற்றுமுட்கவே. (௧௨௩)

காலனுங்குலிசனுங்காலசங்கனும்
மாலியுமருத்தனுமருவுமைவரும்

---

௧௧எ. ஊதை - ஊழிக்காற்று.

குலமுங்கனிச்சியுங்கடிதுசுற்றினர்
பாலமும்பாசமும்பிலும்பற்றுவார். (கஉச)

அன்னவரெய்தனவெறிந்தவாயிரம்
துன்னரும்படைக்கலந்துணித்துத்துவீன
நன்னெடுந்தலைகளைத்துணித்துநால்வகைப்
பன்னெடுந்தானையைப்பாறநூறினன். (கஉரு)

ஆண்டதிகாயன்றன்சேனையாடவர்
ஈண்டினமதகரியேழெனுயிரம்
தூண்டினர்மருங்குறச்சுற்றினர்தொகை
வேண்டியபடைக்கலமுறையின்வீசுவார். (கஉசு)

போக்கிலாவகைப்புறம்வளைத்துப்பொங்கினர்
தாக்கினர்திசைதொறுந்தடக்கைமால்வரை
தூக்கினர்படைகளானூறுக்கினர்குழம்
பாக்கினர்கவிகடங்குழுவையார்ப்பினர். (கஉஎ)

எறிந்தனவெய்தனவெய்தியொன்றொடொன்
றறைந்தனவசனியின்விசையினசைகள்
நிறைந்தனமழையெனநெருக்கிநிற்றலால்
மறைந்தனவுலகொடுதிசையும்வானமும். (கஉஅ)

அப்படையனைத்தையுமறுத்துவீழ்த்தவர்
துப்புடைத்தடக்கைகடுணித்துச்சுற்றிய
முப்புடைமதமலைக்குலத்தைமுட்டினன்
எப்புடைமருங்கினுமெரியும்வாளியான். (கஉகூ)

வேறு.

குன்றனமதகரிகொம்பொடுகரமற
வன்றலைதுமிதரமஞ்செனமறிவன
ஒன்றலவொருபதுமொன்பதுமொருகணை
சென்றறிதரமழைசிந்துவமதமலை. (கங0)

ஒருதொடைவிடுவனவுருமுறழ்கணைபட
இருதொடைபுரசையெர்டிறுபவரெறிபடை
விருதுடைநிருதர்கண்மலையெனவிழுவர்கள்
பொருதுடைவனமதமழையெனபுதர்மலை. (கஙக)

பருமமுமுதுகிடுபடிகையும்வலிபடர்
மருமமுமழிபடநுழைவனவடிகணை
உருமெனவலியெனவுருள்வனதிசைதிசை
கருமலைநிகர்வனதனிமலைகனல்வன. (கஙஉ)

கஙஉ. மருமம் - மார்பு.

இறுவனகொடியவையெறிவனவிடையிடை
துறுவனசுடுகணைதுணிவனமதகரி
அறுவனவவையவைகடவினர்தடிதலை
வெறுமைகள்கெடுவனவிழிகுழிகழுதுகள். (௧௩௩)

மிடலொடுவிடுகணைமழையினுமிகையுள
படலொடுமுருமெறிபருவரைநிலையென
உடலொடுமுருள்கரியுதிரமதுருகெழு
கடலொடுபொருதகரியொடுகரியென. (௧௩௪)

மேலவர்படுதவின்விடுமுறையிலமிடல்
ஆலமுமசனியுமனையனவிடுகரி
மாலுறுகரியினின்மறுகினமதமழை
போல்வனதமதமவெதிரெதிர்பொருவன. (௧௩௫)

கால்சிலதுணிவனகரமறுவனகதம்
வால்சிலதுணிவனவயிறுகள்வெளிபட
நால்சிலகுடரனநகழ்வனசிலவரு
தோல்சிலகணைபலசொரிவனமழையன. (௧௩௬)

முட்டினமுட்டறமுரணுறுதிசைநிலை
எட்டினுமெட்டருநிலையனவெவையவன்
விட்டனவிட்டனவிடுகணைபடுதொறும்
பட்டனபட்டனபடர்பணைகுவிவன. (௧௩௭)

அறுபதின்முதலிடைநாலொழியாயிரம்
இறுதியமதகரியிறுதலுமெரியுமிழ்
தறுகணர்தகையறுநிலையினர்சலமுறு
கறுவினரவனெதிர்கடவினர்கடலென. (௧௩௮)

எல்லையின்மதகரிவிரவினவினனிகர்
செல்வனமுடிவிலதெறுதொழின்மறவனை
வில்லியையினியிதுவிடுகணைமழையன
கொல்லுதியெனவெதிர்கடவினர்கொடியவர். (௧௩௯)

வந்தனமதகரிவளைதவின்மழைபொதி
செந்தனியொருசுடரெனமறைதிறலவன்
இந்திரதனுவெனவெழுசிலைகுனிவழி
தந்தியினெடுமழைசிதறினதரையின. (௧௪௦)

வேறு.

மய்யற்றனசெவிமுற்பொழிமழைபெற்றனமலையின்
மெய்பெற்றனகடலொப்பனவெயிலுக்கனவிழியின்

---

௧௩௪. நாலுதல் - தொங்குதல்.

மொய்பெற்றனமுதுகிற்றனமுகமுக்கனமுரண்வெங்
கய்யற்றனமதமுற்றியகணிதத்தியல்கதமா. (௧௪௧)

உண்ணின்றலையலைநீருகவிறுதிக்கடையுறுகால்
எண்ணின்றலைநிமிர்கின்றனவிகல்வெங்கணையிரணப்
பண்ணின்படர்தலையிற்படமடிகின்றனபலவா
மண்ணின்றலையுருள்கின்றனமழையொத்தனமதமா. (௧௪௨)

பிறைபற்றியவெனுநெற்றியபிழையற்றனபிறழப்
பறையற்றமில்விசைபெற்றனபரியக்கிரியமரர்க்
கிறையற்றறையமுனிவிற்படையெறியப்புடையெழுபொற்
சிறையற்றனவெனவிற்றனசினமுற்றியமதமா. (௧௪௩)

கதிரொப்பனகணைபட்டுளகதமற்றிலகதழ்கார்
அதிரத்தனியதிர்கைக்கிரியளவற்றனவளவா
எதிர்பட்டனமொழியக்கிரியிவரித்திரையெழுகார்
உதிரத்தொடுமொழுகிக்கடனடுவுற்றவுமுளவால். (௧௪௪)

கண்ணின்றலையயில்வெங்கணைபடைகின்றனகாறு
எண்ணின்றலைநிமிர்வெங்கதமுதிர்கின்றவினமா
மண்ணின்றலைநெரியும்படிதிரிகின்றனமலைபோல்
உண்ணின்றலைநிருதக்கடலுலறிட்டவுமுளவால். (௧௪௫)

ஓராயிரமயில்வெங்கணையொருகால்விடுதொடையில்
காராயிரம்விடுதாரையினிமிர்கின்றனகதுவுற்
றீராயிரமதமால்கரிவிழுகின்றனவினிமேல்
ஆராய்வதெனவன்விற்றொழிலமரேசருமறியார். (௧௪௬)

தேருந்தெறுகரியும்பொருசினமன்னரும்வயவெம்
போரின்றலையுகள்கின்றனபுரவிக்குலமெவையும்
பேருந்திசைபெறுகின்றிலபணையின்பிணைமதவெங்
காரின்றருகுருதிப்பொருகடனின்றனகடவா. (௧௪௭)

நூறாயிரமதவெங்கரியொருநாழிகைநுவலக்
கூறாயினபயமுற்றொருகுலைவாயினவுலகம்
தேறாதனமலைநின்றனதெரியாதனசினமா
வேறாயினவவையாவையுமுடனேவரவிட்டான். (௧௪௮)

ஒருகோடியமதமால்கரியுளவந்தனவுடன்முன்
பொருகோடியிலுயிருக்கனவொழியப்பொழிமதயா
றருகோடுவவாவுந்தினரசனிப்படிகணைகால்
இருகோடுடைமழைவெஞ்சிலையினவாளரியெதிரே. (௧௪௯)

---

௧௪௧. முரண்வெம் கை - துதிக்கை.

உலகத்துளமலையெத்தனையவையத்தனையுடனே
கொலகிற்பனபொருகிற்பனபுடைசுற்றினகுழுவா
அலகற்றனசினமுற்றியவனலொப்பனவவையும்
தலையற்றனகரமற்றனதனிவிற்றொழிலதனால். (கஙo)

காலாயினநவயோசனைநனிவன்றிசையெவையும்
மாலாயினமதவெங்கரிதிரிகின்றனவரலும்
தோலாயினவுலகெங்கணுமெனவஞ்சினதுகளே
போலாயினவயவானமுமாறுனதுபுவியே. (கஙக)

கடைகண்டனதலைகண்டிலகழுதின்றிரள்பிணமா
இடைகண்டனமலைகொண்டெனவெழுகின்றனதிரையால்
புடைகொண்டெறிகுருதிக்கடல்புணர்கின்றனபொறிவெம்
படைகொண்டிடைபடர்கின்றனமதயாறுகள்பலவால். (கஙஉ)

ஒற்றைச்சரமதனேடொருகரிபட்டுகவொளிவாய்
வெற்றிக்கணையுருமொப்பனவெயிலொப்பனவயில்போல்
வற்றக்கடல்சுடுகிற்பனமழையொப்பனபொழியும்
கொற்றக்கரிபதினுயிரமொருபதயிற்கொல்வான். (கஙந)

மலையஞ்சினமழையஞ்சினவனமஞ்சினபிறவும்
நிலையஞ்சினதிசைவெங்கரிநிமிர்கின்றனகடலின்
அலையஞ்சினபிறிதென்சிலதனியைங்கரகரியும்
கொலையஞ்சலிபுரிகின்றதுகரியின்படிசொலலால். (கஙச)

காலேறினசிலநாளொலிகடலேறுகள்படவான்
மேலேறினர்மிசையாளர்கடலைமெய்தொறுமுருவக்
கோலேறினவுருமேறுகள்குடியேறினவெனலாய்
மாலேறினகளியானைகண்மழையேறெனமறிய. (கஙரு)

அநுமன் யானைப்படையைப் பொருதழித்தல்.

இவ்வேலையினநுமான்முதலெழுவேலையுமனையான்
வெவ்வேலவர்செலவேவியகொலையானையின்மிகையைச்
செவ்வேயுறநினையாவொருசெயல்செய்குவெனென்பான்
தவ்வேலெனவர்தானிவன்றனிவேலெனத்தகையான். (கஙசு)

ஆர்த்தங்கனல்விழியாமுதிர்மதயானையையனையான்
தீர்த்தன்கழல்பாவாமுதலரிபோல்வருதிறலான்
வார்த்தங்கியகழலானொருமரனின்றதுநமனர்
போர்த்தண்டினும்வலிபாயதுகொண்டான்புகழ்கொண்டான். (கஙஎ)

கருங்கார்புரைநெடுங்கையனகளியானைகளவைசென்
றொருங்காயினவுயிர்மாய்ந்தனபிறிதென்பலவுரையால்

---

கஙசு. எழுவேலை - எழுகடல்.

வருங்காலமும்பெரும்பூதமுமழைமேகமுமுடனுப்
பொருங்காலையின்மலைமேல்விழுமுருமேறெனப்புடைத்தான். (கருஅ)

மிதியாற்பலவிசையாற்பலமிடலாற்பலவிடறும்
கதியாற்பலகாலாற்பலவாலாற்பலவாலின்
நுதியாற்பலநுதலாற்பலநொடியாற்பலபயிலும்
குதியாற்பல்குமையாற்பலகொன்றானறனின்றான். (கருகூ)

பறித்தான்சிலபகிர்ந்தான்சிலவகிர்ந்தான்சிலபணைபோல்
இறுத்தான்சிலவிடந்தான்சிலபிளந்தான்சிலவெயிற்றால்
கறித்தான்சிலகவர்ந்தான்சிலகடித்தான்சிலபிடித்தான்
முறித்தான்சிலதிறந்தானையினெடுங்கோடுகண்முனிந்தான். (கசு0)

வாரிக்குரைகடலிற்புகவிலகுக்நெடுமரத்தால்
சாரித்தலைத்துருட்டுந்நெடுந்தலத்திற்படுத்தரைக்கும்
பாரிற்பிடித்தடிக்குஞ்சுடர்பறிக்கும்படர்விசும்பின்
ஊரிற்செலவெறியும்மிதித்துழக்கும்முகத்துதைக்கும். (கசுக)

வாலால்வரவளைக்குந்நெடுமலைப்பாம்பெனவளையா
மேலானொடுபிசையும்முழுமலைமேற்செலவிலக்கும்
ஆலாலமுண்டவனேயெனவகல்வாயினிட்டதுக்கும்
தோலாயிரமிமைப்போதினினரியேறெனத்தொலைக்கும். (கசுஉ)

சய்யத்தினுமுயர்வுற்றனதறுசட்களிமதமா
நொய்திற்கடிதெதிருற்றனநூறாயிரமாறு
மய்யற்கரியுகிரிற்சிலகுழைபுக்குருமறையத்
தொய்யற்படாழுவக்கொழுஞ்சேறாயுகத்துதைப்பான். (கசுங)

வேறாயினமதவெங்கரியொருகோடியின்விறலோன்
நூறாயிரம்படுத்தானிதுநுவல்காலையினிளையோன்
கூறாயினவெனவன்னவைகொலைவாளியிற்கொன்றான்
ஏறுநெடும்பயத்தானெடுநிசிகாவலரிரிந்தார். (கசுச)

அநுமதேவாந்தக யுத்தம்.

இரிந்தார்திசைதிசையெங்கணும்யானைப்பிணமெற்ற
நெரிந்தார்களுநெரியாதுயிர்கிலைத்தார்களுநெருக்கால்
எரிந்தார்நெடுந்தடந்தேரிழிந்தெல்லாருமுன்செல்லத்
திரிந்தானொருதனியேநெடுந்தேவாந்தகன்சினத்தான். (கசுரு)

உதிரக்கடல்பிணமால்வரையொன்றல்லனபலவா
எதிரக்கடுநெடும்போர்க்களத்தொருதான்புகுந்தேற்றான்
கதிரொப்பனசிலவெங்கணையனுமானுடற்கார்த்தான்
அதிரக்கடனெடுந்தேரினன்மழையேறெனவார்த்தான். (கசுசு)

அப்போதினினனுமானுமொர்மரமோச்சிநின்றார்த்தான்
இப்போவதினுயிர்போமெனவுருமேறெனவெறிந்தான்
வெப்போவெனவெயில்கால்வனவயில்வெங்கணைவிசையால்
துப்போவெனத்துணியாம்வகைதேவாந்தகன்றுரந்தான். (கசஎ)

மாறுங்கொருமலைவாங்கினன்வயவானரக்குலத்தோர்க்
கேறுங்கதுவெறியாதமுன்முறியாயுகவெய்தான்
கோறுங்கியசிலையானுடனெடுமாருதிகொதித்தான்
பாறுங்கெனப்புகப்பாய்ந்தவனெடுவில்லினைப்பறித்தான். (கசஅ)

பறித்தானெடும்படைவானவர்பலரார்த்திடப்பலவா
முறித்தானவன்வலிகண்டுயர்தேவாந்தகன்முனிந்தான்
மறித்தாங்கொருசுடர்த்தோமரம்வாங்காமிசையோங்காச்
செறித்தானவனிடத்தோண்மிசையிமையோர்களுந்திகைத்தார். (கசகூ)

சுடர்த்தோமரமெறிந்தார்த்தலுங்கனலாமெனச்சுளித்தான்
அடற்றேர்மரம்பறித்தான்றிரிந்துருமேறெனவடித்தான்
புடைத்தானவன்றடந்தேரொடுநெடுஞ்சாரதிபுரண்டான்
மடற்றோகையர்வலிவென்றவன்வானோர்முகமலர்ந்தார். (கஎ0)

சூலப்படைதொடுவான்றனையிமையாதமுன்றொடர்ந்தான்
ஆலத்தினும்வலியானும்வந்தெதிரேபுகுந்தடர்த்தான்
காலற்கிருகண்ணான்றனகையாலவன்கதுப்பின்
மூலத்திடைபுடைத்தானுயிர்முடித்தான்சிரமடித்தான். (கஎக)

அனுமஅதிகாய வசனம்.

கண்டானெதிரதிகாயனுங்கனலாமெனக்கனன்றான்
புண்டானெனப்புனலோடிழியுதிரம்விழிபொழிவான்
உண்டேனிவனுயிரிப்பொழுதொழியேனெனவுரையாத்
திண்டேரினைக்கடிதேவெனச்சென்றானவனின்றான். (கஎஉ)

அன்னான்வருமளவின்றலைநிலைநின்றனவனிகம்
பின்னானதமுன்னானதுபிறிந்தார்களுஞ்செறிந்தார்
பொன்னானுயர்நெடுமால்வரைபோல்வானெதிர்புக்கான்
சொன்னானிவையதிகாயனும்வடமேருவைத்துணிப்பான். (கஎங)

தேய்த்தாயொருதனியெம்பியைத்தலத்தோடொருதிறத்தால்
போய்த்தாவினைநெடுமாகடல்பிழைத்தாய்கடல்புகுந்தாய்
வாய்த்தானையுமடித்தாயதுகண்டேனெதிர்வந்தேன்
ஆய்த்தாயதுமுடிவின்றுனக்கணித்தாகவந்தடுத்தாய். (கஎச)

இன்றல்லதுநெடுநாளுனையொருநாளினுமெதிரேன்
ஒன்றல்லதுசெய்தாயெமையினையோனையுமுனையும்

கஎச. எம்பி - தம்பி, பின்னவன்.

வென்றல்லதுமீளாதவென்மிடல்வெங்கணைமழையால்
கொன்றல்லதுசெல்லேனிதுகொள்ளென்றனன்கொடியோன். (கஎரு)

பிழையாதிதுபிழையாதெனப்பெருங்கைத்தலம்பிசையா
மழையாமெனச்சிரித்தான்வடமலையாமெனுநிலையான்
முழைவாளரியனையாயினுமெனைநீமிகமுனிவாய்
அழையாய்திரிசிரத்தோனையுநிலத்தோடுமிட்டிரைக்க. (கஎசு)

அனுமதிரிசிரயுத்தம்.

ஆமாமெனத்தலைமூன்றுடையவனார்த்துவந்தடர்த்தான்
கோமான்றனிப்பெருந்தூதனுமெதிரேசெருக்கொடுத்தான்
கார்மாண்டவர்கல்லாதவர்வல்லீரெனக்கழறு
நாமாண்டனரயனின்றுறநடுவேபுகநடந்தான். (கஎஎ)

தேர்மேற்செலக்குதித்தான்றிரிசிரத்தோனையோர்திறத்தால்
கார்மேற்றுயின்மலைபோலியைக்கரத்தாற்பிடித்தெடுத்தான்
பார்மேற்படுத்தரைத்தானவர்பழிமேற்படப்படுத்தான்
போர்மேற்றிசைகெடுவாயிலினுளதாமெனப்போனான். (கஎஅ)

வேறு.

இமையிடையாகச்சென்றானிலதிகாயனின்றான்
அமைவதொன்றாற்றமேற்றானருவியோடழல்கால்கண்ணான்
உமையொருபாகனேயுமிவன்முனிந்துருத்தபோது
கமையிலனாற்றலென்னாக்கதத்தொடுங்குலைக்குங்கையான். (கஎகூ)

பூணிப்பொன்றுடையனுலைப்புகுந்தநான்புறத்துநின்று
பாணித்தல்வீரமன்றாற்பருவலிபடைத்தோர்க்கெல்லாம்
ஆணிப்பொன்னானான்றன்னைப்பின்னுங்கண்டறிவெனென்னாத்
துணிப்பொற்புறத்தான்றிண்டேரினவன்மேற்றாண்டச்சொன்னான். (கஅ0)

தேரொலிகடலைச்சீறச்சிலையொலிமழையைச்சீறப்
பேரொலிமுரசினோதைதிசைகளிற்புறதுபோகத்
தாரொலிகழற்கான்மைந்தன்றானையுந்தானுஞ்சென்றான்
வீரனுமெதிரேநின்றான்விண்ணவர்விசயஞ்சொல்ல. (கஅக)

வல்லையினனுகவந்துவணங்கியவாலிமைந்தன்
சில்லியந்தேரின்மேலானவனமர்செவ்விதன்றால்
வில்லியர்திலதமன்னநின்றிநமேனிதாங்கப்
புல்லியவெனினுமென்றோளேறுதிபுனிதவென்றான். (கஅஉ)

---

கஎகூ. இமையிடையாக - கண்ணிமைப்பொழுதிற்குள்ளாக.

அங்கதன் தோளில் இலக்குமணன் ஏறி நின்று பொருதல்.

ஆமெனவமலன்றம்பியங்கதனலங்கற்றோண்மேல்
தாமரைச்சரணம்வைத்தான்கலுழனிற்றுங்கின்ற
கோமகனூற்றனுக்கிக்குளிர்கின்றமனத்தராகிப்
பூமழைபொழிந்துவாழ்த்திப்புகழ்ந்தனர்புலவரெல்லாம். (கஅக)

ஆயிரம்புரவிபூண்டவதிர்குரல்சனித்திண்டேர்
போயினதிசைகளெங்குங்கறங்கெனச்சாரிபோமால்
மீயெழினுயருந்தாழிற்றாழும்விண்செல்லிற்செல்லும்
தீயெழவுவரிநீரைக்கலக்கினுன்சிறுவனம்மா. (கஅச)

அத்தொழிலோனுக்கியாங்குவானரத்தலைவரார்த்தார்
இத்தொழில்கலுழற்கேயுமரிதெனவிமையோரெல்லாம்
கைத்தலங்குலைத்தாராகக்களிற்றினும்புரவிமேலும்
தைத்தனவிளையவீரன்சரமெனுந்தாரைமாரி. (கஅரு)

முழங்கினமுரசம்வேழமுழங்கினமூரித்திண்டேர்
முழங்கினமுகரப்பாய்மாமுழங்கினமுழுவெண்சங்கம்
முழங்கினதனுவிநாணைமுழங்கினகழலுந்தாரும்
முழங்கினதெழிப்புமார்ப்புமுழங்கினமுகிலின்மும்மை. (கஅசு)

கரிபடக்காலாள்வெள்ளங்களப்படக்கலினக்கால்போல்
பரிபடக்கண்டகூற்றும்பயம்படப்பைம்பொற்றிண்டேர்
எரிபடப்பொருதபூமியிடம்படவெதிர்ந்தவெல்லாம்
முரிபடப்பட்டவீரன்முரட்கணைமூரிமாரி. (கஅஎ)

அதிகாயன் இலக்குமணனை வினுதல்.

மன்னவன்றம்பிமற்றவ்விராவணன்மகனைநோக்கி
என்னுனக்கிச்சைநின்றவெறிபடைச்சேனையெல்லாம்
சின்னபின்னங்கள்பட்டாற்பொருதியோதிரிந்துநீயே
நன்னெடுஞ்செருச்செய்வாயோசொல்லுநியந்ததென்றான். (கஅஅ)

யாவரும்பொருவரல்லரெதிர்ந்துளயானுநீயும்
தேவரும்பிறருங்காணச்செருவதுசெய்வவெல்லாம்
காவல்வந்தன்னைக்காப்பார்காப்பவுமமையும்வேறே,
கூவியதனுக்கன்றோவென்றனன்கூற்றின்வெய்யோன். (கஅகூ)

உமையனேகாக்கமற்றங்குமையொருகூறன்காக்க
இமையவரெல்லாங்காக்கவுலகமோரேழுங்காக்க
சமையுமுன்வாழ்க்கையின்றோடென்றுதன்சங்கமூதி
அமையுருக்கொண்டகூற்றைநாணெறிந்துருமினார்த்தான். (ககo)

---

கஅக. கலுழன் - கருடன்.

இலக்குமணன் அதிகாயனுக்குப் பதிலுரைத்துப் பொருதல்.

அன்னதுகேட்டமைந்தனரும்பியன்முறுவலோன்றச்
சொன்னவர்வாரார்யானேதோற்கினுந்தோற்கத்தக்கேன்
என்னைநீபொருதுவெல்லினவரையும்வென்றியென்னு
மின்னினுமிளிர்வதாங்கோர்வெஞ்சரங்கோத்துவிட்டான். (கக௧)

அதிகாய விலக்குமண யுத்தம்.

விட்டவெம்பகழிதன்னைவெற்பினைவெதுப்புந்தோளான்
சுட்டதோர்கணையினுலேவிசும்பிடைத்துணித்துநீக்கி
எட்டினேடெட்டுவாளியிலக்குவவிலக்காயென்னுத்
திட்டியின்விடத்துநாகமனையனசிந்தியார்த்தான். (கக௨)

ஆர்த்தவனெய்தவாளியனைத்தையுமறுத்துமாற்றி
வேர்த்தொளிவயிரவெங்கோன்மேருவைப்பிளக்கற்பால
தூர்த்தனனிராமன்றம்பியவைவெயலாந்துணித்துச்சிந்திக்
கூர்த்தனபகழிகோத்தான்குபேரனையாடல்கொண்டான். (ககக)

எய்தனவெய்தவெல்லாமெரிமுகப்பகழியாலே
கொய்தனனகற்றியார்க்குமரக்கனைக்குரிசில்கோபம்
செய்தனன்றூரந்தான்றெய்வச்செயலன்னகணையைவெங்கோல்
நொய்தவன்கவசங்கீறிநுழைவனபிழைப்பிலாத. (ககச)

நூறுகோல்கவசங்கீறிநுழைதலுங்குழைவுதோன்றத்
தேறலாந்துணையுந்தெய்வச்சிலைநொடுந்தேரினூன்றி
ஆறினனதுகாலத்தங்கவனுடையனிகமெல்லாம்
கூறுகூறாக்கியம்பாற்கோடியின்மேலுங்கொன்றான். (ககரு)

புடைநின்றார்புரண்டவாறும்போகின்றபுங்கவாளி
கடைநின்றுகணிக்கவாங்கோர்கணக்கிலாவாறுங்கண்டான்
இடைநின்றமயக்கந்தீர்ந்தானேந்தியசிலையன்கார்த்தித்
தொடைநின்றபகழிமாரிமாரியின்மும்மைதூர்த்தான். (கக௬)

வானெலாம்பகழிவானின்வரம்பெலாம்பகழிமண்ணே
தானெலாம்பகழிகுன்றின்றலையெலாம்பகழிசார்ந்தோர்
ஊனெலாம்பகழிநின்றோருடலெலாம்பகழிவேலை
மீனெலாம்பகழியாகவித்தினன்வெருளிமிக்கோன். (கக௭)

மறைந்தனதிசைகளெல்லாம்வானவர்மனமேபோலக்
குறைந்தனசுடரின்மும்மைக்கொழுங்கதிர்குவிந்தொன்றொன்றை
அறைந்தனபகழிவையமதிர்ந்ததுவிண்ணுமஃதே
நிறைந்தனபொறியின்குப்பைநிமிர்ந்தனநெருப்பின்கற்றை. (கக௮)

முற்றியதின்றேயன்றோவானரமுழுதுந்தானை
மற்றிவன்றன்னைவெல்லவல்லனோவள்ளறம்பி

கக௬. புடை - பக்கம்.

கற்றதுகாலனோடோகொலையிவனொருவன்கற்ற
விற்றொழிலென்னேயென்னாத்தேவரும்வெருவலுற்றார். (௧௯௯)

அங்கதனெற்றிமேலுந்தோளினுமாகத்துள்ளும்
புங்கமேதோன்றவண்ணம்பொருசரம்பலவும்போக்கி
வெங்கணையிரண்டுமொன்றும்வீரன்மேலேவிமேகச்
சங்கமுமூதிவிண்ணோர்தலைபொதிரெறியவார்த்தான். (௨௦௦)

வாலிசேய்மேனிமேலுமழைபொருகுருதிவாரி
காலுயர்வரையிற்செங்கேழருவிபோலொழுகக்கண்டான்
கோலொருபத்துநூற்றாற்குதிரையின்றலைகள்கொய்து
மேலவன்சிரத்தைச்சிந்திவில்லையுந்துணித்தான்வீரன். (௨௦௧)

மாற்றொருதடந்தேரேறிமாறொருசிலையும்வாங்கி
ஏற்றவல்லரக்கன்றன்மேலெரிமுதற்கடவுளென்பான்
ஆற்றல்சால்படையைவிட்டானாரியனரக்கனம்மா
வேற்றனதாங்கவென்னாவெய்யவன்படையைவிட்டான். (௨௦௨)

பொருபடையிரண்டுந்தம்மிற்பொருதனபொருதலோடும்
எரிகணையுருமின்வெய்யவிலக்குவன்றுரந்தமார்பை
உருவினவுலப்பிலாதவுலைவிலனாற்றலோயான்
சொரிகணைமழையின்மும்மைசொரிந்தனன்றெழிக்குஞ்சொல்லான். (௨௦௩)

பின்னின்றார்முன்னின்றாரைக்காணலாம்பெற்றித்தாக
மின்னின்றவயிரவாளிதிறந்தனமேனிமுற்றும்
அந்நின்றநிலையினாற்றல்குறைந்திலனாவிநீங்கான்
பொன்னின்றவடிம்பின்வாளியுருமெனப்பொழியும்வில்லான். (௨௦௪)

வாயுதேவன் அதிகாயன்மீது பிரமாத்திரம்விட வுரைத்தல்.

கோன்முகந்தள்ளியள்ளிக்கொடுஞ்சிலைநாணிற்கோத்துக்
கான்முகங்குழையவாங்கிச்சொரிகின்றகாளைவீரன்
பான்முகந்தோன்றநின்றுகாற்றினுக்கரசன்பண்டை
நான்முகன்படையாலன்றிச்சாகிலனம்பவென்றான். (௨௦௫)

அதிகாயன் தலையை இலக்ஷ்மணன் பிரமாத்திரத்தால் அறுத்தல்.

நன்றெனவுவந்துவீரனான்முகன்படையைவாங்கி
மின்றனிதிரண்டதென்னச்சரத்தொடுங்கூட்டிவிட்டான்
குன்றினுமுயர்ந்ததீயோன்றலையினைக்கொண்டவாளி
சென்றதுவிசும்பினூடுதேவருந்தெரியக்கண்டார். (௨௦௬)

---

௨௦௧. மேலவன் - சாரதி. ௨௦௨. ஆரியன் - மேட்டு நிலத்தவன்.

பூமழைபொழிந்துவானோர்போயதெம்பொருமலென்றார்
தாமழைத்தலறியெங்குமிரிந்தனரரக்கர்தள்ளித்
திமையுங்களிப்புநீங்கித்திகைத்தனர்குரங்குச்சேனைக்
கோமகன்றேரினின்றுங்குதித்தனன்கொற்றவில்லான். (உ0எ)

வெந்திறற்சித்திகண்டவீடணன்வியந்தநெஞ்சன்
அந்தரசித்தாரர்ப்புமமலையுங்கேட்டானையன்
மந்திரசித்தியன்னசிலைத்தொழில்வலியிதாயின்
இந்திரசித்தினற்குமிறுதியேயியைவதென்றான். (உ0அ)

அங்கதநராந்தக யுத்தம்.

எந்தெழிலாகத்தெம்முனிறந்தனனென்றுநீநின்
சாந்தகன்மார்புதிண்டோளேக்கிநின்றனுவைநோக்கிப்
போர்தகைக்குரியையன்றுற்போகலைபோகவென்று
நாந்தகமின்னும்வீசிநராந்தகனடந்துவந்தான். (உ0௯)

தேரிடைநின்றுகண்கடையுகச்சீற்றம்பொங்கப்
பாரிடைகிழியப்பாய்ந்துபகலிடைப்பரிதியென்பான்
ஊரிடைநின்றானென்னக்கேடகமொருகைதோன்ற
நீரிடைமுகிலின்மின்போல்வாளிடைமிளிரவந்தான். (உ௧0)

வீசினமாமுங்கல்லும்விலங்கலும்வீற்றுவீற்றா
ஆசைகடோறும்வீசவாளினுலறுத்துமாற்றித்
தூசியுமிரண்டுகையுநெற்றியுஞ்சுருண்டுநீர்மேற்
பாசியினொதுங்கவந்தானங்கதனதனைப்பார்த்தான். (உ௧௧)

மரமொன்றுவிரைவின்வாங்கிவாய்மடித்துருத்துவள்ளல்
சரமொன்றுகடிதிற்சென்றுதாக்கினன்றாக்கினன்றன்
கரமொன்றிற்றிரிவதாருங்காண்கிலாததனைத்தன்கை
அரமொன்றுவயிரவாளாலாயிரங்கண்டங்கண்டான். (உ௧உ)

அவ்விடைவெறுங்கைநின்றவங்கதனுண்மையன்றால்
இவ்விடைபெயர்தலென்றுவிமையிடையொதுங்காமுன்னம்
வெவ்விடமென்னப்பொங்கியவனிடையெறிந்தவீச்சத்
தவ்விடவுருமிற்புக்குவாளொடுந்தழுவிக்கொண்டான். (உ௧௩)

அத்தொழில்கண்டவானோராவலங்கொட்டியார்த்தார்
இத்தொழிலிவனுக்கல்லாலீசற்குமியலாதென்பார்
குத்தொழித்தவன்கைவாடன்கூருகிர்த்தடக்கைக்கொண்டான்
ஒத்திருகூறாய்வீழவீசினனுலைபவார்த்தான். (உ௧௪)

மத்தநீலயுத்தம்.

கூர்மத்தின்வெரிநின்வைத்துவானவரமுதங்கொண்ட
நீர்மத்தினிமிர்ந்ததோளானிறைமத்தமதுவைத்தேக்கி

---

உ௧௧. ஆசை - திசை. உ௧௫. வெரிந் - முதுகு.

ஊர்மத்தமுண்டாலன்னமயக்கத்தானுருமுத்தின்பான்
போர்மத்தனென்பான்வந்தான்புகர்மத்தப்பூட்கைமேலான். (உகரு)

காற்றன்றேற்கடுமையென்னுங்கடலன்றேன்முழக்கமென்னும்
கூற்றன்றேற்கொலைமற்றென்னுமுருமன்றேற்கொடுமையென்னும்
சீற்றந்தானன்றேற்சீற்றம்வேறொன்றுதெரிப்பதெங்கே
மாற்றன்றேமலைமற்றென்னேமத்தன்றன்மத்தயானை. (உகசு)

வேகமாக்கவிகள்வீசும்வெற்பினம்விழுவமேன்மேல்
பாகர்காற்சிலையிற்றாண்டுமுண்டையாமெனவும்பற்றா
மாகமாமரங்களெல்லாங்கடாத்திடைவண்டுசேர்வ
தாகினுமாமதன்றேற்கரும்பென்றேயறையலாமால். (உகஎ)

காலிடைப்பட்டுமானக்கையிடைப்பட்டுங்கால
வாலிடைப்பட்டும்வெய்யமருப்பிடைப்பட்டுமாண்டு
காலிடைப்பட்டசேனைநாயகன்றம்பியெய்த
கோலிடைப்பட்டவெல்லாம்பட்டனகுரங்குச்சேனை. (உகஅ)

தன்படையுற்றதன்மைநோக்கினான்றரிக்கிலாமை
அன்படையுள்ளத்தண்ணலனலின்றன்புதல்வனாழி
வன்படையனையதாங்கோர்மராமரஞ்சுழற்றிவந்தான்
பின்படைசெல்லநள்ளார்பெரும்படையிரிந்துபோர. (உ. கக)

சேறலுங்களிற்றின்மேலான்றிண்டிறலரக்கன்செவ்வே
ஆறிரண்டம்பினாலந்நெடுமாமறுத்துவீழ்த்தான்
வேறொருகுன்றநீலன்வீசினனதனைவிண்ணின்
ஊறுவெம்பகழிதன்னானுறுக்கினான்களிறுநூக்கி. (உஉ0)

பின்னெடுங்குன்றந்தேடிப்பெயர்தவான்பெயராவண்ணம்
பொன்னெடுங்குன்றஞ்சூழ்ந்தபொறிவரியரவம்போல
அந்நெடுங்கோபயானையமரும்வெயர்பப வங்கி
தன்னெடுமகனைப்பற்றிப்பிடித்ததுதடக்கைநீட்டி. (உஉக)

ஒடுங்கினனாருமாற்றலூற்றமுமுயிருமென்னக்
கொடும்படைவயிரக்கோட்டாற்குத்துவான்குறிக்குங்காலை
நெடுங்கையுந்தலையும்பிய்யாநொய்தினினிமிர்ந்துபோனான்
நடுங்கினாரரக்கர்விண்ணோர்நன்றுநன்றென்னநக்கார். (உஉஉ)

தறைத்தலையுற்றானீலனென்பதோர்காலந்தன்னில்
நிறைத்தலைவழங்குஞ்சோரிநீர்த்ததுநெடுங்குன்றென்னக்
குறத்தலைவேழம்வீழவிசும்பின்மேற்கொண்டுநின்றான்
பிறத்தலைவயிரவாளிமழையெனப்பெய்யுங்கையான். (உஉக)

---

உகரு. ஊர்மத்தம் - ஊரிலுள்ள யூமத்தங்காய், இஃதிக்காலத்து ஊமத்தங்காய் என வழங்குகின்றது. உஉக. அங்கிதன்னெடுமகன் - அக்கினிகுமாரனானீலன்.

வாங்கியசிரத்தின்மற்றைவயிரவான்கோட்டைவவ்வி
வீங்கியவிசையினீலனரக்கன்மேற்செல்லவிட்டான்
ஆங்கவனவற்றையாண்டோரம்பினாலறுத்தோரம்பால்
ஓங்கல்போற்புயத்தினன்றனுரத்திடையொளிக்கவெய்தான். (௨௨௪)

எய்ததுகாலமாகவீழ்ந்திலதியானையென்னக்
கய்யுடைமலையொன்றேறிக்காற்றெனக்கடாவிவந்தான்
வெய்யவனவனைத்தானுமேற்கொளாவில்லினோடும்
மொய்பெருங்களிற்றினிட்டான்மும்மதக்களிற்றின்முன்னர். (௨௨௫)

இட்டனனவனிநின்றுமெழுவதன்முன்னம்யானை
கட்டமைவயிரக்கோட்டாற்களப்படவீழ்த்திக்காலால்
வெட்டிவன்றடக்கைதன்னாலெடுத்தெங்கும்விரைவின்வீசப்
பட்டிலன்றானேதன்போர்க்கரியினைப்படுத்துவீழ்த்தான். (௨௨௬)

தன்கரிதானேகொன்றுதடக்கையாற்படுத்துவீழ்த்த
மின்கரிதென்னமின்னுமெயிற்றினன்வெருளிநோக்கிப்
பொன்கரிதென்னுங்கண்கள்பொறியுக நீலன்புக்கான்
வன்கரமுறுக்கிமார்பிற்குத்தினன்மத்தன்மாண்டான். (௨௨௭)

இடப வயமத்த யுத்தம்.

உன்மத்தன்வயிரமார்பினுருமொத்தகாஞ்சென்றுற்ற
வன்மத்தைக்கண்டுமாண்டமதமத்தமலையைப்பார்த்தும்
சன்மத்தின்றன்மையானுந்தருமத்தைத்தன்னிவாழ்ந்த
கன்மத்தின்கடைக்கூட்டானும்வயமத்தன்கடிதின்வந்தான். (௨௨௮)

பொய்யினும்பெரியமெய்யான்பொருப்பினைப்பழித்ததோளான்
வெய்யனென்றுரைக்கச்சாலத்திண்ணியான்வில்லின்செல்வன்
பெய்கழலரக்கன்சேனையார்த்தெழப்பிறங்குபல்பேய்
அய்யிருநூறுபூண்டவாழியந்தேரின்மேலான். (௨௨௯)

ஆர்க்கின்றானுலகையெல்லாமதிர்க்கின்றானுருமுமஞ்சப்
பார்க்கின்றான்பொன்றினாரைப்பழிக்கின்றான்பகழிமாரி
தூர்க்கின்றான்குரங்குச்சேனை தூக்கின்றான்றுணிவைநோக்கி
ஏற்கின்றாரில்லையென்னாவிடபன்வந்தவனோடேற்றான். (௨௩0)

சென்றவன்றன்னைநோக்கிச்சிரித்துநீசிறியையுன்னை
வென்றவழும்மையெல்லாம்விளிப்பெனோவிரிஞ்சன்றானே
என்றவனெதிர்ந்தபோதுமிராவணன்மகனையின்று
கொன்றவன்றன்னைக்கொன்றேகுரங்கின்மேற்கொதிப்பேனென்றான். (௨௩௧)

வாய்கொண்டுசொற்றற்கேற்றவலிகொண்டுபலியுண்வாழ்க்கைப்
பேய்கொண்டுவெல்லவந்தபித்தனேமிடுக்கைப்பேணி

௨௨௫. கையுடைமலை - யானை

நோய்கொண்டுமருந்துசெய்யாவொருவனின்னுன்மையெல்லாம்
ஓய்கின்றாய்காண்டியென்னுவுரைத்தனனிடபனெல்கான். (உகூஉ)

ஓடுதியென்னவோடாதுரைத்தியேலுன்னோடின்னே
ஆடுவென்வினையாட்டென்னுவயிலெயிற்றரக்கனம்பொற்
கோடுறுவயிரப்போர்விற்காலொடுபுருவங்கோட்டி
ஈடுறவிடபன்மார்பத்திரைந்துபகழியெய்தான். (உகூங)

அசம்புடைக்குருதிபாயுமாகத்தான்வேகத்தாலத்
தசம்புடைக்கொடுந்தேர்தன்னைத்தடக்கையாலெடுத்துவீசப்
பசுங்கழற்கண்ணபேயும்பறந்தனபாரவைநோக்கி
விசும்பிடைச்செல்லுங்காரின்றுரைபோனன்றமெய்யான். (உகூச)

தேரொடுங்கடலின்வீழ்ந்துசிலையுந்தன்றலையுமெல்லாம்
நீரிடையழுந்திப்பின்னுநெருப்பொடுகிமிரவந்தான்
பாரிடைக்குதியாமுன்னமிடபனும்பதகநீபோய்
ஆரிடைப்புகுதியென்னுவந்தரத்தார்த்துவந்தான். (உகூரு)

அல்வினைத்தழுவிநின்றபகலெனவரக்கன்றன்னைக்
கல்லினும்வலியதோளாற்கட்டியிட்டிறுக்குங்காலைப்
பல்லிடைப்பிலவாயூடும்பசும்பெருங்குருதிபாய
வில்லுடைமேகமென்னவிழுந்தனனுயிர்விண்செல்ல. (உகூசு)

சுக்கிரீவகும்ப யுத்தம்.

குரங்கினுக்கரசும்வென்றிக்கும்பனுங்குறித்தவெம்போர்
அரங்கினுக்கழகுசெய்யவாயிரஞ்சாரிபோந்தார்
மரங்கொடுந்தண்டுகொண்டுமலையெனமலையாநின்றார்
சிரங்களுங்காமுமெல்லாங்குலைந்தனர்கண்டதேவர். (உகூஎ)

வேறு.

கிடைத்தாருடலிற்கிழிசோரியைவாரித்
துடைத்தார்விழியிற்றழன்மாரிசொரிந்தார்
உடைத்தாரொடுஞ்பங்கழலார்ப்பவுலாவிப்
புடைத்தார்பொருகின்றனர்கோளரிபோல்வார். (உகூஅ)

தண்டங்கையின்வீசியதாகவரக்கன்
அண்டங்கள்வெடிப்பனவென்னவடித்தான்
கண்டதுங்கதுமாமரமேகொடுகாத்தான்
விண்டங்கதுதீர்ந்ததுமன்னன்வெகுண்டான். (உகூகூ)

பொன்றப்பொருவேனினியென்றுபொருதான்
ஒன்றப்புகுகின்றதொர்காலமுணர்ந்தான்
நின்றப்பெரியோனினையாதமுனீலன்
குன்றொப்பதொர்தண்டுகொணர்ந்துகொடுத்தான். (உசo)

உகூஉ. நோய்கொண்டு - நோய்தெரிந்து.

உகூகூ. மராமரம் என்றும் பாடம்.

அத்தண்டுகொடுத்ததுகைக்கொடமைந்தான்
ஒத்தண்டமுமண்ணுநடுங்கவுருத்தான்
பித்தன்றடமார்பொடுதோள்கள்பிளந்தான்
சித்தங்கணடுங்கியரக்கர்திகைத்தார். (உசக)

அடியுண்டவரக்கனருங்கனன்மின்று
இடியுண்டதோர்மால்வரையென்னவிழுந்தான்
முடியம்மிவனென்பதோர்முன்னம்வெகுண்டான்
ஒடியும்முனதோனெனமோதியுடன்றான். (உசஉ)

தோளிற்புடையுண்டயர்சூரியன்மைந்தன்
தாளிற்றடுமாறறவிர்ந்துதகைந்தான்
வாளிக்கடுவல்விசையாலெதிர்மண்டி
ஆளித்தொழிலன்னவன்மார்பினறைந்தான். (உசங)

அடியாயிரகோடியின்மேலுமடித்தார்
முடிவானவன்யாரெனவானவர்மொய்த்தார்
இடியோடிடிகிட்டியதென்னவிரண்டும்
பொடியாயினதண்டுபொருந்தினர்புக்கார். (உசச)

மத்தச்சினமால்களிறென்னமலைந்தார்
பத்துத்திசையுஞ்செவிடெய்தினபல்கால்
தத்தித்தழுவித்திரடோள்கொடுதள்ளிக்
குத்தித்தனிகுத்தெனமார்புகொடுத்தான். (உசரு)

நிலையிற்சுடரோன்மகன்வன்கைநெருங்க
வலையிற்படுகம்மியர்கூடமலைப்ப
உலையிற்படிரும்பெனவன்மையொடுங்க
மலையிற்பிளவுற்றதுதீயவன்மார்பம். (உசசு)

செய்வாயிகலென்றவனின்றுசிரித்தான்
அய்வாயரவம்முழைபுக்கெனவையன்
கய்வாய்வழிசென்றவனுருயிர்க்கக்கப்
பய்வாய்நெடுநாவைமுனிந்துபறித்தான். (உசஎ)

அங்கதநிகும்ப யுத்தம்.

அக்காலநிகும்பனனற்சொரிகண்ணன்
புக்கானினியெங்கடபோகுவதென்று
மிக்கானெதிரங்கதனுற்றுவெகுண்டான்
எக்காலமுமில்லதோர்பூசலிழைத்தார். (உசஅ)

சூலப்படையானிடைவந்துதொடர்ந்தான்
ஆலத்தினும்வெய்யவனங்கதனங்கோர்

---

உசஅ. எங்கட - எங்கு அடா.

தாலப்படைகைக்கொடுசென்றுதடுத்தான்
நீலக்கிரிமேனியிர்பொற்கிரிநேர்வான். (உ௪௯)

எறிவானிகல்சூலமெடுத்தலுமின்னே
முறிவானிகலங்கதனென்பதன்முன்னே
அறிவானடன்மாருதியற்றமுணர்ந்தான்
பொறிவானுருதீயெனவந்துபுகுந்தான். (உ௫௦)

நிதம்பனை அனுமன் கொல்லுதல்.

தடையேதுமில்சூலமுனிந்துசலத்தால்
விடையேயிகராங்கதன்மேல்விடுவானை
இடையேதடைகொண்டுதனேடவிழங்கைப்
புடையேகொடுகொன்றடன்மாருதிபோனான். (உ௫௧)

நின்றார்கடடுப்பவரின்மைநெளிந்தார்
பின்றாதவர்பின்றியிரிந்துபிரிந்தார்
வன்றாண்மரம்வீசியவானரவீரர்
கொன்றார்மிகுதானையரக்கர்குறைந்தார். (உ௫௨)

ஓடிப்புகுவாயினெருக்கினுலந்தார்
கோடிக்கதிகத்தினுமேலுளர்குத்தால்
பீடிப்புறுபுண்ணுடலோடுபெயர்ந்தார்
பாடித்தலையுற்றவரெண்ணிலர்பட்டார். (உ௫௩)

தண்ணீர்தருகென்றனர்தாவுறவோடி
உண்ணீரறவாவியுலர்ந்தனருக்கார்
கண்ணீரொடுமாவிகலுழ்ந்தனர்காலால்
மண்ணீரமுறக்கடிதூர்புகவந்தார். (உ௫௪)

விண்மேனெடிதோடினராருயிர்விட்டார்
மண்மேனெடுமால்வரையென்னமறிந்தார்
எண்மேலுகிமிர்ந்துளரீருடயங்கப்
புண்மேலுடைமேனியினார்திசைபோனார் (உ௫௫)

அறியும்மவர்தங்களையையவிவம்பைப்
பறியும்மெனவந்துபறித்தலுமாவி
பிறியும்மவரெண்ணிலர்தம்மனைபெற்றார்
குறியும்பதிகின்றிலர்சிந்தைகுறைந்தார். (உ௫௬)

பரிபட்டுவிழச்சிலர்கின்றுபதைத்தார்
கரிபட்டுருளச்சிலர்கால்கொடுசென்றார்
நெரிபட்டழிதேரிடையேபலர்நின்றார்
எரிபட்டமனைக்குளிருந்தவரொன்ன. (உ௫௭)

உ௫௦. அற்றம் - அபயம். உ௫௭. எரிபட்டமனை - தீபட்டெரிகிற வீடு.

மண்ணின்றலைவானரமேனியர்வந்தார்
புண்ணின்றவுடற்பொறையோர்சிலர்புக்கார்
கண்ணின்றகுரங்குகலந்தனவென்னா
உண்ணின்றவரக்கர்மலைக்கவலந்தார். (௨௫௮)

வேறு.

இருகணுந்திறந்துநோக்கியயலிருந்திரங்குகின்ற
உருகுதங்காதலோரையுண்ணுநீருதவுமென்றார்
வருவதன்முன்னமாண்டார்சிலர்சிலர்வந்ததண்ணீர்
பருகுவாரிடையேபட்டார்சிலர்சிலர்பருகிப்பட்டார். (௨௫௯)

மக்களைச்சுமந்துசெல்லுந்தாதையர்வழியினாவி
உக்கனரென்னவீசித்தம்மைக்கொண்டோடிப்போனார்
கக்கினர்குருதிவாயாற்கண்மணிசிதறிக்காலால்
திக்கொடுநெறியுங்காணார்திரிந்துசென்றுயிருந்தீர்ந்தார். (௨௬௦)

இன்னதோர்தன்மையெய்தியிராக்கதரிரிந்துசிந்திப்
பொன்னகர்புக்காரிப்பாற்பூசல்கண்டோடிப்போன
துன்னருந்தூதர்சென்றார்தொடுகழலரக்கர்க்கெல்லாம்
மன்னவனடியில்வீழ்ந்தார்மழையினீர்வழங்குகண்ணார். (௨௬௧)

நோக்கியவிலங்கைவேந்தனுற்றதுநுவன்மினென்றான்
போக்கியசேனைதம்மிற்புகுந்துளவிறையும்போதா
ஆக்கியபோரினையதிகாயன்முதல்வராய
கோக்குலக்குமாரரெல்லாங்கொடுத்தனராவியென்றார். (௨௬௨)

அதிகாயனாதியர் இறந்தாரெனக்கேட்ட இராவணனது தன்மை.

ஏங்கியவிம்மன்மானமிரங்கியவிரக்கம்வீரம்
ஓங்கியவெகுளிதுன்பமென்றிவையொன்றிற்கொன்று
தாங்கியதரங்கமாகக்கரையினைத்தள்ளித்தள்ளி
வாங்கியகடல்போனின்றானருவிநீர்வழங்குகண்ணான். (௨௬௩)

திசையினைநோக்குநின்றதேவரைநோக்கும்வந்த
வசையினைநோக்குங்கொற்றவாளினைநோக்கும்பற்றிப்
பிசையுறுங்கையைமீசைசுறுக்கொளவுயிர்க்கும்பேதை
நசையிடைக்கண்டானென்னநகுமழுமுனியுநாணும். (௨௬௪)

மண்ணினையெடுக்கவெண்ணும்வானினையிடிக்கவெண்ணும்
எண்ணியவுயிர்களெல்லாமொருகணத்தெற்றவெண்ணும்
பெண்ணெனும்பெயரவெல்லாம்பிளப்பெனென்றெண்ணுமெண்ணிப்
புண்ணிடையெரிபுக்கென்னமானத்தாற்புழுங்கிளையும். (௨௬௫)

---

௨௬௧. பூசல் - யுத்தம், சண்டை.

தானமாலை புலம்பல்.

ஒருவருமுரையார்வாயினுயிர்த்திலருள்ளமோய்வார்
வெருவருந்தகையராகிவிம்மினரிருந்தவேலை
தருவனமனையதோளான்றன்னெதிர்தானமாலை
இரியவிட்டலறியோயாப்பூசலிட்டேங்கிவர்தாள். (௨௬௬)

மலைக்குவட்டிடிவீழ்ந்தென்னவளைகளோடாரமேங்க
முலைக்குவட்டெற்றுங்கையாண்முழைதிறந்தன்னவாயாள்
தலைக்குவட்டணைந்தசெக்கர்சரிந்தனகுழல்கடத்தி
உலைக்குவட்டுருகுசெம்பொத்துதிரநீர்வழங்குங்கண்ணாள். (௨௬௭)

வீழ்ந்தனளரக்கன்றண்மேன்மென்மைத்தோணிலத்தைமேவப்
போழ்ந்தனள்பெரும்பாம்பென்னப்புரண்டனள்பொருமிப்பொங்கிச்
சூழ்ந்தனைகொடியாயென்னுத்துடித்தருந்துயரவெள்ளத்
தாழ்ந்தனள்புலம்பலுற்றாளழக்கண்டுமெறிந்திலாதாள். (௨௬௮)

வேறு.

மாட்டாயோவிக்காலம்வல்லோர்வலிதீர்க்க
மீட்டாயோவீரமெலிந்தாயோதோளாற்றல்
கேட்டாயுணர்ந்திலையோவென்னுரையுங்கேளாயோ
காட்டாயோவென்னுடையகண்மணியைக்காட்டாயோ. (௨௬௯)

இந்திரற்குந்தோலாதான்மகனையீன்றாளென்
றந்தரத்துவாழ்வாருமேத்துமளியத்தேன்
மந்தரத்தோளென்மகனைவாட்டாமனிசன்றன்
உந்துசிலைப்பகழிக்குண்ணக்கொடுத்தேனே. (௨௭௦)

அக்கனுலர்தானதிகாயன்றானுலர்தான்
மிக்கதிறத்துள்ளார்களெல்லாரும்வீடினார்
மக்களினினின்றுள்ளான்மண்டோதரிமகனே
திக்குவிசயமினியொருகாற்செய்யாயோ. (௨௭௧)

ஏதையாசிந்தித்திருக்கின்றாயெண்ணிறந்த
கோதையார்வேலரக்கர்பட்டாரைக்கூவாயோ
பேதையாய்க்காமம்பிடிப்பாய்பிழைப்பாயோ
சீதையாலின்னும்வருவசிலவேயோ. (௨௭௨)

உம்பியுணர்வுடையான்சொன்னவுரைகேளாய்
நம்பிகுலக்கிழவன்கூறுநலமோராய்
கும்பகருணனையுங்கொல்வித்தென்கோமகனை
அம்புக்கிரையாக்கியாண்டாயரசைய. (௨௭௩)

௨௭௩. உம்பி - தம்பி, விபூஷணன்.

என்றுபலபலவும்பன்னியெடுத்தழைத்துக்
கன்றுபடப்பிழைத்ததாய்போற்கவல்வாளை
நின்றவுருப்பசியுமேனகையுநேர்ந்தெடுத்துக்
குன்றுபுரையுநெடுங்கோயில்கொண்டணைந்தார். (௨௭௪)

தானநகரத்தரக்கர்தலைமயங்கித்
போனம்மகவுடையார்போலப்புலம்பினார்
ஏனைமகளிர்நிலையென்னாகும்போயிரங்கி
வானமகளிருந்தம்வாய்திறந்துமாழ்கினார். (௨௭௫)

தாரகலத்தண்ணறனிக்கோயிருசாதி
போரவுலகுற்றதுற்றதாற்பேரிலங்கை
ஊரகலமெல்லாமரந்தையுவாவுற்ற
ஆர்கலியேயொத்ததழுதகுரலோசை. (௨௭௬)

௧௭ வது, அதிகாயன்வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௨௭௬.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.



பதினெட்டாவது

## நாகபாசப்படலம்.



குழுமிக்கொலைவாட்கணரக்கியர்கூந்தலுழத்
தழுவித்தலைபெய்திதங்கைகொடுமார்பினெற்றி
அழுமித்தொழிலியாதுகொலென்றொருயிர்ப்புமுற்றான்
எழிலித்தனியேறெனவிந்திரசித்தெழுந்தான். (௧)

எட்டாகியதிக்கையும்வென்றவனின்றுமீடு
பட்டான்கொலதன்றெனிற்பட்டழிந்தான்கொல்பண்டு
சுட்டானிவகன்பதியைத்தொடுவேலையோடும்
கட்டான்கொலிதற்கொருகாரணமென்கொலென்றான். (௨)

கேட்டானிடையுற்றதென்னென்றுகினைத்தல்யாரும்
மாட்டாதுநடுங்கினர்மாற்றமறந்துநின்றார்
ஓட்டாநெடுந்தேர்கடிதோட்டியிமைப்பினுற்றான்
காட்டாதனகாட்டியதாதையைச்சென்றுகண்டான். (௩)

இராவணன் இந்திரசித்தினிடம் அதிகாயாதியர் மாணமுரைத்தல்.

கண்டானிறையாறியநெஞ்சினன்கைகள்கூப்பி
உண்டாயதெனிவ்வழியென்றலுமும்பிமாரைக்

---

-- -ன்ன - கன்றிரக்க.

கொண்டானுயிர்காலனுங்கும்பநிகும்பரோடும்
விண்டானடைந்தானதிகாயனும்வீரவென்றான். (௪)

சொல்லாதமுன்னஞ்சுடரைச்சுடர்தூண்டுகண்ணான்
பல்லாலதரத்தையதுக்கிவிண்மீதுபார்த்தான்
எல்லாருமிறந்தனரோவெனவேங்கினைந்தான்
வில்லாளரையெண்ணில்விரற்குமுன்னிற்கும்வீரன். (௫)

ஆர்கொன்றவரொன்றலும்பேரதிகாயனென்னும்
பேர்கொன்றவன்வென்றியிலக்குவன்பின்புநின்றார்
ஊர்கொன்றவனாற்பிறராவெனவுற்றவெல்லாம்
தார்கொன்றையினான்கிரிசாய்த்தவன்றானுரைத்தான். (௬)

கொன்றாரவரோகொலைசூழ்கெனநீகொடுத்தாய்
வன்றானையர்மானுடர்வன்மையறிந்துமன்னா
என்றாலுமெனைச்செலவேவலையிற்றதென்னா
நின்றானெடிதுன்னிமுனிந்துநெருப்புயிர்ப்பான். (௭)

அக்கப்பெயரோனைநிலத்தொடரைத்துளானை
விக்கற்பொருதூதுவனென்றுவிளம்பிவிட்டாய்
புக்கத்தலையெய்தநினைந்திலைபுந்தியில்லாய்
மக்கட்டுணையற்றனையிற்றதுன்வாழ்க்கைமன்னோ. (௮)

என்னின்றுநினைத்துமியம்பியுமெண்ணியுந்தான்
கொன்னின்றபடைக்கலத்தெம்பியைக்கொன்றுளானை
அந்நின்றநிலத்தவனாக்கையைநீக்கியல்லால்
மன்னின்றநகர்க்கினிவாரலென்வாழ்வும்வேண்டேன். (௯)

இந்திரசித்துச் சூளுரைத்தல்.

மாற்றாவுயிரெம்பியைமாற்றியமானுடன்றன்
ஊற்றார்குருதிப்புனல்பார்மகளுண்டிலாளேல்
ஏற்றானிகலிந்திரனீரிருகாலெனக்கே
தோற்றான்றனக்கென்னெடுஞ்சேவகந்தோற்கவென்றான். (௧௦)

வெங்கண்ணெடுவானரத்தானையைவீற்றுவீற்றாய்ப்
பங்கம்முறநூறியிலக்குவனைப்படேனேல்
அங்கந்தரவஞ்சியென்னானைகடக்கிலாத
செங்கண்ணெடுமான்முதற்றேவர்சிரிக்கவென்னை. (௧௧)

பாம்பிற்றருவெம்படைபாசுபதத்தினோடும்
தேம்பற்பிறைசென்னிவைத்தான்றருதெய்வவேதி
ஓம்பித்திரிந்தேற்கினியின்றுதவாதுபோமேற்
சோம்பித்துறப்பென்னுயிர்சோறுமுகந்துவாழேன். (௧௨)

அ. புந்தி - புத்தி.

மருந்தேங்கரெம்பிதன்னுருயிர்வெளவினானை
விருந்தேயெனவந்தகற்கிகிலன்வில்லுமேந்திப்
பொருந்தேவர்குழாநகைசெய்திடப்போந்துபாரின்
இருந்தேனெனினானவ்விராவணியல்லனென்றான். (கங)

ஏகாவிதுசெய்தெனதின்னலைநீக்கிடெந்தைக்
காகாதனவும்முளவோவெனக்காற்றலார்மேல்
மாகால்வரிவெஞ்சிலையோடும்வளைத்தபோது
சேகாகுமென்றெண்ணியிவ்வின்னவிற்சிந்தைசெய்தேன். (க௪)

இந்திரசித்து போர்க்கோலங் கொள்ளுதல்.

என்றானைவணங்கியிலங்கயில்வாளுமார்த்திட்
டொன்றானுமறாவுருவாவுடற்காவலோடும்
பொன்றாழ்கணையின்னெடும் புட்டில்புறத்துவீக்கி
வன்றாள்வயிரச்சிலைவாங்கினன்வாளைவென்றோன். (கரு)

வயிரந்நெடுமால்வரைகொண்டுமலர்க்கண்வந்தான்
செயிரொன்றுமுறாவகையிற்றிறற்கொன்றுசெய்த
உயர்வெஞ்சிலையஞ்சிலைபண்டவன்றன்னையோட்டித்
துயரின்றலைவைத்திவன்கொண்டதுதோற்றமீதால். (கசு)

தோளிற்கணைப்புட்டிலுமிந்திரன்றோற்றநாளே
ஆளித்திறலன்னவன்கொண்டனவாழியேழும்
மாளப்புனல்வற்றினும்வாளியறாதவன்கட்
கூளிக்கொடுங்கூற்றி னுறையதோர்கூடுபோல்வ. (கஎ)

பல்லாயிரகோடிபடைக்கலம்பண்டுதேவர்
எல்லாருமுனைத்தலையாவருமீந்தமேரு
வில்லாளன்கொடுத்தவிரிஞ்சனளித்தமெய்ம்மை
அல்லாற்புரியாதனயாவையுமாய்ந்துகொண்டான். (கஅ)

இந்திரசித்தின் சதுரங்காதிய.

நூறாயிரம்யாளியினேன்மைதெரிந்தசீயத்
தேறாமவையன்னவையாயிரம்பூண்டதென்ப
மாறாயொரிலங்கைநிகர்ப்பதுவானுளோரும்
தேறாததுமற்றவனேறியதெய்வமாத்தேர். (ககூ)

பொன்சென்றறியாவுவணத்தனிப்புள்ளினுக்கும்
மின்சென்றறியாமழுவாளன்விடைக்குமேனான்
பின்சென்றதல்லதொருமாண்சிறப்புற்றபோதும்
முன்சென்றறியாதுமூன்றுலகத்தினுள்ளும் (உ0)

---

கரு. புட்டில் - அம்பறாத்தூணி.

ஏயாத்தனிப்போர்வலிகாட்டியவிந்திரன்றன்
சாயாப்பெருஞ்சாய்கெடத்தாம்புகளாற்றடந்தோள்
போயார்த்தவன்வந்தனன்வந்தனனென்றுபூசற்
பேயார்த்தெழுந்தாடுநெடுங்கொடிபெற்றதம்மா. (௨௧)

செதுகைப்பெருந்தானவருன்னோடுந்தேய்த்தநேமி
யிதுகைத்திசையானையையோட்டியதென்னலாமே
மதுகைத்தடந்தோள்வலிகாட்டியவானவேந்தன்
முதுகைத்தழும்பாக்கியமொய்யொளிமொட்டதம்மா. (௨௨)

அத்தேரினையேறியதொப்பனவாயிரந்தேர்
ஒத்தேய்வனசேமமதாய்வரவுள்ளம்வெம்போர்ப்
பித்தேறினனென்னநடந்தனன்பின்பலான்மற்
றெத்தேவரையும்முகங்கண்டறியாதவீட்டான். (௨௩)

அன்றுன்னொடுபோகியதானையறிந்துகூற
என்றுலரிதேனுமியம்புவான்மீகனென்னும்
நன்றுன்மனறயானதுநாற்பதுவெள்ளமென்னச்
சொன்னான்பிறர்யாரஃதுணர்ந்துதொகுக்கவல்லார். (௨௪)

தூமக்கணரக்கனுந்தொல்லமர்யார்க்குந்தோலா
மாபக்கனுமந்நெடுந்தேர்மணியாழிகாக்கத்
தாமக்குடைமீதுயரப்பெருஞ்சங்கம்விம்ம
நாமக்கடற்பல்லியநாற்கடன்மேலுமார்ப்ப. (௨௫)

தேராயிரமாயிரகோடிதன்மாடுசெல்லப்
போரானைபுறத்தினவற்றினிரட்டிபோதத்
தாரார்புரவிக்கடல்பின்செலத்தானைவீரப்
பேராழிமுகஞ்செலச்சென்றனன்பேர்ச்சியில்லான். (௨௬)

வேறு.

நின்றனனிலக்குவன்களத்தைநீங்கலன்
பொன்றினனிராவணன்புதல்வன்போர்க்கினி
அன்றவனல்லனேலமரர்வேந்தனை
வென்றவன்வருமெனவிரும்புஞ்சிந்தையான். (௨௭)

விபீடணன் இலக்குமணனுக்கு இவன் இந்திரசித்தேனன்முதலிய

யாரிவன்வருபவனியம்புவாயென
வீரவெந்தொழிலினான்விளம்பவீடணன்
ஆரியவிவனிகலமரர்வேந்தனைப்
போர்கடந்தவனின்றுவலிதுபோரென்றான். (௨௮)

எண்ணினதுணர்த்துவதுளதொன்றெம்பிரான்
கண்ணகன்பெரும்படைத்துணைவர்காத்திட

கண்ணினதுணையொடுபொருதனன்றிது
திண்ணிதினுணர்தியாற்றெளியுஞ்சிந்தையால். (௨௯)

மாருதிசாம்பவன்வானரேந்திரன்
தாரைசேய்நீலனென்றினையதன்மையார்
வீரர்வந்துடனுறவிமலநீடெடும்
போர்செயத்தகுதியாற்புகழின்பூணினுய். (௩0)

பல்பதினுயிரந்தேவர்பக்கமா
எல்லையில்சேனைகொண்டெதிர்ந்தவிந்திரன்
ஒல்லையினுடைந்தனனுயிர்கொண்டுய்ந்துளான்
மல்லலந்தோளினுயமிழ்தின்வன்மையால். (௩௧)

இனியவைமறையுமோவிந்திரன்புயப்
பணிவரையுளநெடும்பாசப்பஃறழும்
பனுமனைப்பிணித்துளனுனபோதவன்
தனுமறைவித்தகந்தடுக்கற்பாலதோ. (௩௨)

என்றவனிறைஞ்சலுமினையவள்ளலும்
நன்றெனமொழிதலுநனுகினனரோ
வன்திறன்மாருதியிலங்கைக்கோமகன்
சென்றனனிளவன்மேலென்னுஞ்சிந்தையான் (௩௩)

கூற்றமுங்கட்புலம்புதைப்பக்கொத்தெழு
தோற்றமுமிராவணிதுணிபுநோக்குறு
மேற்றிசைவாயிலைவிட்டுவெங்கடுங்
காற்றெனவணுகினன்கடிதின்வந்தரோ. (௩௪)

அங்கதன்முன்னரேயாண்டையானயல்
துங்கவன்றோளினுரெவருஞ்சுற்றினர்
செங்கதிரோன்மகன்முன்புசென்றனன்
சங்கநீர்க்கடலெனத்தழீஇயதானையான். (௩௫)

அசுரவானரயுத்தம்.

இருதிரைப்பெருங்கடலிரண்டுதிக்கினும்
பொருதொழில்வேட்டுவந்தார்த்துப்பொங்கின
வருவனபோன்றனமனத்தினுற்சினம்
திருகினவெதிரெதிர்செல்லுஞ்சேனையே. (௩௬)

கண்ணினன்மனத்தினுற்கருத்தினுற்றெரிந்
தெண்ணினுற்பெறுபயனெய்துமின்றெனு
நண்ணினரிமையவர்நங்கைமாரொடும்
விண்ணினுடுறைவிடம்வெறுமைகூரவே. (௩௭)

௩௨. தழும்பு - குறி.

ஒத்திருதானையுமுடற்றவுற்றுழி
அத்தனைவீரருமார்த்தவார்கலி
நலத்தொலிமுரசொலிநடுக்கலாற்றலை
பெர்த்தினர்செவிகளைப்புரந்தராதியர். (௩௮)

எற்றுமின்பற்றுமினெறிமினெய்ம்மினென்
றுற்றனவுற்றனவுரைக்குமோதையும்
முற்றுறுகடையுகத்திடியின்மும்மடி
பெற்றனபிறந்தனசிலையின்பேரொலி. (௩௯)

கற்படமரம்படக்காலவேல்பட
விற்படுகணைபடவீழும்வீரர்தம்
எற்படுமுடல்படவிரண்டுசேனையும்
பிற்படநெடுநிலம்பிளந்துபேருமால். (௪௦)

எழுத்தொடர்மரங்களாலெற்றமுற்றிய
விழுத்தலைமுழுவதுஞ்சிதறிவீழ்ந்தன
வழுத்தியபெருஞ்சினத்தரக்கராக்கைகள்
கழுத்துளதலையிலகளத்திலுடுவ. (௪௧)

வெட்டியதலையனநரம்புவீசமேல்
முட்டியகுருதியகுரங்கின்மொய்யுடல் -
சுட்டுயர்நெடுவனந்தொலைந்தபின்னெடுங்
கட்டைகளெரிவனபோன்றுகாட்டுவ. (௪௨)

பிடித்தனநிருதரைப்பெரியதோள்பெயர்த்
தொடித்தனகால்விசைத்துதைத்தவுந்தின
கடித்தனகழுத்தறக்கைகளாலெடுத்
தடித்தனவுரைத்தனவார்த்தவானரம். (௪௩)

வான்களிற்கவிக்குலவீரர்வார்கழற்
றான்களைத்துணித்தனர்தலையைத்தள்ளினர்
தோள்களைப்பிரித்தனருடலைத்துண்டவன்
போழ்களிற்புரட்டினர்நிருதர்பொங்கினர். (௪௪)

மரங்களிலரக்கரைமலைகள்போன்றுயர்
சிரங்களைச்சிதறினவுயிரைச்சிந்தின
கரங்களைக்கழல்களையொடியக்காதின
குரங்கெனப்பெயர்கொடுதிரியுங்கூற்றமே. (௪௫)

சுடர்த்தலைநெடும்பொறிசொரியுங்கண்ணன
அடற்றலைநெடுமரமற்றகையன

௪௦. கற்பட - மலை உடைய.

உடற்றலைவயிரவேலுருவவுய்த்தவர்
மிடற்றினைக்கடித்துடன்விளிந்துபோவன. (௪௬)

அடர்ந்தனகிரிகளையசனியேறெனத்
தொடர்ந்தனமழைபொழிதும்பிக்கும்பங்கள்
இடந்தனமூளைகளினிதினுண்டன
கடந்தனபசித்தழல்கரடிகாதுவ. (௪௭)

கொலைமதகரியனகுதிரைமேலன
வலமணித்தேரனவாளின்மேலன
சிலைகளின்குடுமியசிரத்தின்மேலன
மலைகளிற்பெரியனகுரங்குவாவுவ. (௪௮)

வேறு.

தண்டுகொண்டரக்கர்தாக்கச்சாய்ந்துகுசிலையசந்தில்
துண்டங்களாகவாளிற்றுணிந்தபேருடலைத்தூவிக்
கொண்டெழுமலைகளோடுங்குரக்கினப்பிணத்தின்குப்பை
மண்டுவெங்குருதியாறம்மறிகடன்மடுத்தமாதோ. (௪௯)

பனிவென்றபதாகையென்றும்பல்லுளைப்பரிமாவென்றும்
தனுவென்றும்வாளியென்றுந்தண்டென்றுந்தனிவேலென்றும்
சினவென்றிமதமாவென்றுந்தேரென்றுந்தெரிந்ததில்லை
அனுமன்கைவயிரக்குன்றாலரைப்புண்டவரக்கர்தானை. (௫0)

பொங்குதேர்புரவியானைபொருநழனிருதரென்னும்
சங்கையுமில்லாவண்ணந்தன்னுளைதழுவிக்கூற்றம்
எங்குளவுயிரென்றெண்ணியிளைக்கையாற்கிளைத்ததென்ப
அங்கதன்மரங்கொண்டெற்றவளறுபட்டழிந்ததானை. (௫௧)

தாக்கியதிசைகடோறுந்தலைத்தலைமயங்கித்தம்மின்
றூக்கியகளிறுந்தேரும்புரவியுமூழில்செய்ய
ஆக்கியசெருவைநோக்கியமரரோடசுரர்போரைத்
தூக்கியமுனிவரென்னேயிதற்கதுதோற்றமென்றார். (௫௨)

எடுத்ததுநிருதர்தானையிரிந்ததுகுரங்கினீட்டம்
தடுத்தனர்முகங்கடாங்கித்தனித்தனிதலைவர்தள்ளிப்
படுத்தனரரக்கர்வேலைபட்டதும்படவும்பாரார்
கடுத்தனர்கடுத்தபின்னுங்காத்தனர்கவியின்வீரர். (௫௩)

சூலமுமழுவுந்தாங்கித்தோளிருநான்குந்தோன்ற
மூலம்வந்துலகையுண்ணுமுருத்திர

---

௫௪. மூலம் - முடிவுகாலம், சர்வசம்மாரகாலம்.

நீலனின்றுழியேநின்றனிரந்தரங்கணங்களோடு
காலனென்றொருவன்யாண்டும்பிரிந்திலன்பாசக்கையான். (௫௪)

காற்றலன்புனலோவல்லன்கனலல்லனிரண்டுகையால்
ஆற்றலஞற்றுகின்றவருஞ்சமமிதுவேயாகில்
ஏற்றமென்பலவுஞ்சொல்லியென்பதமிழந்தேனென்னக்
கூற்றமுங்குலுங்கியஞ்சவெங்கதக்குமுதன்கொன்றான். (௫௫)

மறிகடல்புடைசூழ்வைப்பின்மானவன்வாளிபோன
செறிபணைமரமேநின்றமரங்களிற்றெரியச்செப்புங்
குறியுடைமலைகடம்மிற்குலவரைக்குலமேகொள்ளா
எறிதலோடறைதல்வேட்டவிடவனன்றிடந்திலாத. (௫௬)

வாம்பரிமதமாமான்றேர்வருனெயிற்றரக்கர்மாயப்
பாம்பினும்வெய்யோர்சாலப்படுகுவர்பயமின்றின்றே
தூம்புறழ்குருதிமண்டத்தொடர்நெடுமரங்கள்சுற்றிச்
சாம்பவன்கொல்லச்சாம்புமென்றுரையமரர்தந்தார். (௫௭)

பொருங்குலப்புரவியானதிரைகளுங்கலம்பொற்றேரும்
இருங்களியானையானமகரமுமிரியல்போக
நெருங்கியபடைகளானமீன்குலமிரிந்துசிந்தக்
கருங்கடல்கலக்குமத்திற்பனசனுங்கலக்கிப்புக்கான். (௫௮)

மயிந்தனுமிவனுமைழக்குலங்கிழித்துவானத்
துயர்ந்தெழுமேருவைவேந்தருடன்பிறந்தவரையொத்தார்
கயங்குடைந்தாடும்வீரக்களிறொத்தான்கவையன்காலில்
பெயர்ந்திலனுற்றதல்லாற்கேசரிபெரும்போர்பெற்றான். (௫௯)

பெரும்படைத்தலைவர்யாரும்பெயர்ந்திலர்பிணத்தின்குப்பை
வரம்பிலபரம்பியார்த்துமலைகின்றபொழுதின்வந்துற்
றிரிந்தனகவியுங்கூடியெடுத்தனவெடுத்தலோடும்
சரிந்ததுநிருதர்தானைதாக்கினனரக்கன்றானே. (௬0)

வேறு.

இந்திரசித்தின் போர்த்திறம்.

பூணெறிந்தகுவடனையதோள்களிருபுடைபரந்துயரவடல்வலித்
தூணெறிந்தனையவிரல்கள்கோதையொடுசிலையெறிந்ததொருதொழில்படச்
சேணெறிந்துதிமிர்திசைகளோடுமலைசெவிடெறிந்துடையமிடல்வலோன்
நாணெறிந்துமுறைமுறைதொடர்ந்துகடலுலகம்யாவையுநடுக்கினான். (௬௧)

ங்கவேறுகடல்போன்முழங்கிமிர்தேர்கடாய்நெடிதுசெல்கென
யங்காதிபானுங்கவானவர்களஞ்சவெஞ்சினவனந்தன்மாச்

௫௬. வடுத்திலாத என்றும் பாடம்.

சங்கபாலகுளிகாதிவாலெயிறுதந்தநிவிடமுமிழ்ந்துசார்
வெங்கணாகமெனவேகமாயுருமுமஞ்சவெங்கணைகள்சிந்தினன். (௯௨)

சுற்றும்வந்துகவிவீரர்வீசியசுடர்த்தடங்கல்வரைதோன்மரம்
இற்றெறிந்துபொடியாயுதிர்ந்தனவெழுந்துசேணிடையிழிந்தபோல்
வெற்றிவெங்கணைபடப்படத்தலைகள்விண்ணினூடுதிசைமீதுபோய்
அற்றெழுந்தனவிழுந்துமண்ணிடையழுந்துகின்றனவனந்தமால். (௯௩)

சிலைத்தடம்பொழிவயக்கடும்பகழிசெல்லவொல்கினர்சினத்தினால்
உலைத்தெறிந்திடவெடுத்தகுன்றுதொறுடற்பரங்கள்கொடொதுங்கினார்
நிலைத்துநின்றுசினமூண்டுசெல்லவெஃதிர்சென்றுசென்றுறநெருக்கலால்
மலைத்தலங்களொடொத்தலங்கழலலூடுசென்றபலவாளியே. (௯௪)

முழுத்தமொன்றிலொருவெள்ளவானரமுடிந்துமான்வனதடிந்துபோய்க்
கழுத்தகையயிமிர்காலவாலபலகண்டமானபடிகண்டுகோர்
எழுத்தொடர்ந்தபடர்தோள்களாலெறியவெற்றவுற்றனவெழுந்துமேல்
விழுத்தகைபந்தலையவேணுமால்வரைகள்வீசிவீசியுடன்வீழுமால். (௯௫)

அற்றபைந்தலையரிந்துசென்றனவயிற்கடுங்கணைவெயிற்கள்போல்
புற்றடைந்தகொடுவெவ்வராவினெடுநாகலோகமதுபுக்கவால்
வெற்றவெள்ளிடைவிரிந்துபோவதொருமேடுபள்ளம்வெளியின்மையால்
உற்றசெங்குருதிவெள்ளமுள்ளதிரையோதவேலையொடுமொத்ததால். (௯௬)

விழிக்குமேல்விழியயிற்கின்மார்பிடையமீளுமேன்முதுகைமேனியைக்
கழிக்குமேலுயரிலேனுமேனெடியகால்கள்வீசியிர்கையவாய்த்
தெழிக்குமேலகவுநாவுசிந்தையினவுன்னுமேற்சிரம்யாவையும்
பழிக்குமேனியகுரக்கின்மேலவன்விடுங்கொடும்பகழிபாயவே. (௯௭)

மொய்யெடுத்தகணைமாரியாலிடைமுடிந்ததொன்றுமுறைகண்டிலார்
எய்விடத்தெறியுநாணினோசையலதியாதுமொன்றுசெவியுற்றிலார்
மெய்யெடுத்தகவிவெள்ளம்யாவையும்விழுந்துபோனவெனும்விம்மலால்
கய்யெடுத்தனகுரங்கினோடுமுறைகண்டுதேவர்கள்கலங்கினார். (௯௮)

சுக்கிரீவனது போர்த்திறம்.

கண்டவானரமகந்தகோடிமுறைகண்டமானபடிகண்டவக்
கண்டமாறொருவரின்மைகண்டுகணைமாறினன்விடுதலின்மையாய்த்
தண்டகாலையில்விலக்கினனிரவிகாதல்காதுவதொர்காதலால்
கண்டகார்சிறையமீதுபர்த்தொளிர்மராமரஞ்சலவுகையினன். (௯௯)

உடைந்துதன்படையுலைந்துசிந்தியுயிரொல்கவெல்செருவுடற்றலால்
கடைந்தவெள்ளமுதுகொள்ளும்வள்ளலெனமேனிமிர்ந்ததொர்கறுப்பினன்
இடைந்துசென்றவனையெய்தியெய்தரியகாவல்பெற்றுகவியற்றுவான்
மிடைந்துநின்றபடைவேலைகாறனைவிசினனிருதர்கடிசினர். (௱)

௯௩. தேர்ம்மரம் என்றும் பாடம்.

சுற்றிநின்றபடைசிந்தியோடவோர்மராமரங்கொடுதுகைத்தனான்
வெற்றிகண்டுவலிநன்றுநன்றெனவியந்துவெங்கணைதெரிந்தவன்
நெற்றியின்றலையிரண்டுமார்பிடையொரஞ்சுநஞ்செனநிறுத்தவன்
பற்றிவந்தமரம்வேறுவேறறநுறுக்கினன்பொடிபரப்பினான். (௭௧)

அக்கணத்தநுமனாலகாலமெனலாயதோர்வெகுளியாயினான்
புக்கனைத்துலகமுங்குலுங்கவிமிர்தோள்புடைத்துருமுபோலுரு
இக்கணத்தவனிறக்குமென்பதொருகுன்றெடுத்துமிசையேவினான்
உக்கதக்கிரிசொரிந்தவாளிகளினூழிலாதசிறுபூழியாய். (௭௨)

அநுமவிந்திரசித்தர் வீரவசனங்கள்.

நில்லடாசிறிதுநில்லடாவுனைநினைத்துவந்தனன்முனைக்குநான்
வில்லெடாமையினதாண்மைபேசியுயிரோடுநின்றுவிளையாடினாய்
கல்லடாநெடுமரங்களோவருகருத்தினேன்வலிகடப்பநீ
சொல்லடாவெனவியம்பினானிகலரக்கனையனிலைசொல்லினான். (௭௩)

வில்லெடுக்கவுரியார்களையசிலவீரரிங்குளர்மெல்லியோய்
கல்லெடுக்கவுரியானுநின்றனனதின்றுநாளையிடைகாணலாம்
எல்லெடுத்தபடையிந்திராதியருணங்கிடைந்துயிர்கொடேகுவார்
புல்லெடுத்தவர்களல்லம்வேறுசிலபோரெடுத்தெதிர்புகுந்துளேம். (௭௪)

என்னொடேபொருதியோவதன்றெனினிலக்குவப்பெயரினெம்பிரான்
தன்னொடேபொருதியோவுனக்குத்தலைவனின்றதனிவள்ளலாம்
மன்னொடேபொருதியோவுரைத்ததுமறுக்கிலோமெனவழங்கினான்
பொன்னொடேபொருவினல்லதொன்றொடுபொதுப்படாவுபர்புயத்தினான்.

எங்குநின்றனனிலக்குவப்பெயரவ்வேழைவெம்பியதிகாயனும்
சிங்கம்வந்தவனைவென்றுதன்னுயிரெனக்குவைத்ததொர்சிறப்பினான்
அங்கவன்றனைமலைந்துகொன்றுமுனிவாறவந்தனனதன்றியும்
உங்கடன்மையினடங்குமோவுலகொடுக்கும்வெங்கணைதொடுப்பினே. (௭௬)

ஆருமென்படைஞரெய்தலின்றியயலேகயானுமிகல்வில்லுமோர்
தேரினின்றுமடங்கலுந்திரள்சிரந்துணிப்பனிதுதிண்ணமால்
வாருமுங்களுடன்வானுளோர்களையுமண்ணுளோரையும்வரச்சொலு
போருமின்றொருபகற்கணேபொருதுவெல்வென்வென்றலதுபோகிலேன். ()

என்றுவெம்பகழியேழுநூறுமிருநூறும்வெஞ்சிலைகொடேவினான்
குன்றுநின்றனையவீரமாருதிதன்மேனிமேலவைகுழக்களாய்ச்
சென்றுசென்றுருவலோடும்வாளெயிறுதின்றுசீறிபொருசேமவன்
குன்றுநின்றதுபறித்தெடுத்தவனையெய்தினொய்தினிதுகூறினான். (௭௮)

௭௪. கல்லெடுக்கவுரியான் - பிதிர்க்கடன்செய்யுங்காலத்து, பாடாணத் தாபனஞ் செய்தற்குரியவிபீடணன். கல்லெடுக்க வுரியெனும் நின்றனேன் என்றும் பாடம்.

தம்பியென்றுலகிலுள்ளயாவையவையேவையுந்தொகுபுதன்னுதாள்
வெம்புவெஞ்சினமடக்கலொன்றின்வலிதன்னைநின்றெளிதின்வெல்லுமோ
நம்பிதம்பியெனதெம்பிரான்வருதுணைத்தரிக்கிலைகவித்தியேல்
அம்பின்மூர்த்தியுனதாவியுண்ணுமிதுகாவடாசிலைவலாண்மையால். (௭௯)

செருப்பயிற்றியதடக்கையாளிசெலவிட்டகுன்றுதிசையானையின்
மருப்பையுற்றதிரடோளிராவணன்மகன்றன்மார்பினுயர்வச்சிரப்
பொருப்பையுற்றதொர்பொருப்பெனக்கடிதொடிந்திடிந்துதிசைபோயதால்
நெருப்பையுற்றதொரிரும்புகூடமுறநீறுபட்டதுநிகர்த்ததால். (௮௦)

விலங்கன்மேல்வரவிலங்கவீசியவிலங்கனீறுபடுவேலையில்
சலங்கமேனியிரவெஞ்சினந்திருகிவஞ்சன்மேனிகர்தருக்கினான்
வலங்கொள்பேருலகமேருவோடெனமறிக்குமாருதிதன்வாசநா
றலங்கன்மார்பினொடுதோளினோடுருவவாயிரஞ்சரமழுத்தினான். (௮௧)

ஒன்றுபோல்வனவொராயிரம்பகழியூடுபோயுருவவாடகக்
குன்றுகால்குடையமேலுயர்ந்திடைகுலுங்குகின்றனையகொள்கையான்
மன்றனாறுதடமேனிமேலுதிரவாரிசோரவருமாருதி
நின்றதேறமளவின்கண்வெங்கண்விழிநீலன்வந்திடைநெருங்கினான். (௮௨)

நீலனின்றதொருநீலமால்வரைநெடுந்தடக்கையினிடந்துநேர்
மேலெழுந்தெரிவிசும்புசெல்வதொருவெம்மையோடுவரவீசலும்
சூலமந்தகனெறிந்ததன்னதுதுணிந்துசிந்தைவிடைசொல்லுறுங்
காலமொன்றுமறியாமலம்புகொடுகல்லினைநெடியவில்லினான். (௮௩)

ஊகமெங்குமுயிரோடுநின்றனவுமோடவானவர்களுள்ளமும்
மோகமெங்குமுளவாகமேருவினுமும்மடங்குவலிதிண்மைசால்
ஆகமெங்கும்வெளியாகவெங்குருதியாறுபாயவனலஞ்சவாய்
நாகவெங்கணைகுவாளிபாய்தொறுநடுங்கினான்மலைபிடுங்கினான். (௮௪)

மேருமேருவெனவல்லதல்லதெனவேரினோடுநெடுவெற்பெலாம்
மாரின்மேலுமுயர்தோளின்மேலும்வரவாவிகாதலன்வழங்கினான்
சேருமேயவைதனுக்கைநிற்கவெதிர்செல்லுமேகடிதுசெல்லினும்
பேருமேகொடியவாளியான்முறிபெறுக்கலாவவைநுறுக்கினான். (௮௫)

நெற்றிமேலுமுயர்தோளின்மேலுநெடுமார்பின்மேலுநிமிர்தாளினும்
புற்றினூடுநுழைநாகமன்னபுகைவேகவாளிகள்புகப்புகத்
தெற்றிவாளெயிறுதின்றுகைத்துணைபிசைந்துகண்களெரிதீயுக
வற்றினோடுதிரவாரிசோர்வுறமயங்கினானிலமுயங்கினான். (௮௬)

மற்றைவீரர்கடமார்பின்மேலுமுயர்தோளின்மேலுமழைமாரிபோல்
கொற்றவெங்கணையுலக்கவெய்தவைகுளிப்பநின்றுடல்குலுங்கினார்

௮௦. திசையானை - அட்டதிக்கில் காவலாயுள்ள யானை.

இற்றவிர்தனபெரும்பதாதியுயிருள்ளவெங்கணுமிரிந்தவப்
பெற்றிகண்டிளையவள்ளலொன்னெரிபிறந்தகண்ணனிவைபேசினன். (அஎ)

வேறு.

பிழைத்ததுகொள்கைபோதப்பெரும்படைத்தலைவர்யாரும்
உழைத்தனர்குருதிவெள்ளத்துலந்ததுமூலப்பிற்றன்றே
அழைத்திவன்றன்னையானையாருயிர்கொளப்படாதே
இழைத்ததுபழுதேயன்றேவீடணவென்னச்சொன்னான். (அஅ)

விபீடணன் ஆலோசனை கூறுதல்.

அய்யவீதன்னதேயாலாயிரகோடிதேவர்
எய்தினரெய்தினரேயீடுபட்டிரிந்ததல்லால்
செய்திலரிவனையொன்றுநீயிதுதீர்ப்பினல்லால்
உய்திறனுண்டோவேறிவ்வுலகினுக்குயிரோவென்றான். (அக)

இந்திரசித்து இலக்குமணனைக் காண்டல்.

என்பதுசொல்லக்கேட்டவிந்திரவில்லினோடும்
பொன்பொருமேகமொன்றுவருவதுபோல்கின்றானை
முன்பனைமுன்புநோக்கியிவன்கொலாம்பரதன்முன்னோன்
தன்பெருந்தம்பியென்றாளுமெனச்சாரன்சொன்னான். (கo)

தீயவனிவனறன்மேற்செல்வதன்முன்னஞ்செல்கென்
றேயினரொருவரின்றியிராக்கதத்தலைவரெங்கள்
நாயகன்மகனைக்கொன்றாய்நண்ணினைநாங்கள்காணப்
போயினியுய்வதெங்கேயென்றெரிவிழித்துப்புக்கார். (கக)

இலக்குமணன் போர்த்திறம்.

கோடிநூறியைந்தகூட்டத்திராக்கதர்கொடித்திண்டேரும்
ஆடன்மாக்களிறுமாவுங்கடாவினரார்த்துமண்டி
மூடினார்மூடினாரைமுறைமுறைதுணித்துவாகை
சூடினானிராமன்பாதஞ்சூடியதோன்றறம்பி. (கஉ)

அதிர்ந்தனவுலகமேழுமனற்பொறியசனியென்னப்
பிதிர்ந்தனமலையும்பாரும்பிளந்தனபிணத்தின்மேன்மேல்
உதிர்ந்தனதலைகண்மண்டியோடினவுதிரசீத்தம்
விதிர்ந்தனவமரர்கைகள்விளைந்ததுகொடியவெம்போர். (கங)

விட்டனன்விசிகம்வேகம்விடாதனவீரன்மார்பில்
பட்டனவுகலமெங்கும்பரந்தனபதாகைக்காட்டைச்
சுட்டனதூகாசிதுணித்தனபனைக்கைமாவை
அட்டனகூற்றமென்னவடர்ந்தனவகந்தமம்மா. (கச)

---

அஎ. வள்ளல் - வரையாது கொடுப்போன்.

உலக்குநருலக்கின்றூ ரையெண்ணுவானுற்றவிண்ணோர்
கலக்குறுகண்ணர்நோக்கிக்கடையுறக்காணலாற்றார்
விலக்கரும்பகழிமாரிவிளைக்கின்றவிளைவையுன்னி
இலக்குவன்சிலைகொடேகொலெழுமழைபயின்றதென்றார். (கரு)

மீளியொண்கணைகடோறுமூர்ந்தியவேழமொற்றை
வாளியின்றலையபாரின்மறிவனமலையிற்சூழ்ந்த
ஆளியின்றப்பின்வீரர்பொருகளத்தார்த்தவாழித்
தூளியின்றொகையவள்ளல்சுடுகணைத்தொகையுமம்மா. (கசு)

பிறவியிற்பெரியநோக்கிற்பிசிதமுண்டுழலும்பெற்றிச்
சிறையனவென்னநோக்கித்தேவருந்திகைக்கத்தேற்றித்
துறைதொறுந்தொடர்ந்துவானம்வெளியறத்துவன்றிவீழும்
பறவையிற்பெரிதுபட்டார்பிணத்தின்மேற்படிவமாதோ. (கஎ)

திறந்தருகவியின்சேனைசெறிகழனிருதன்சேற
இறந்தனகிடந்தவென்னமெழுபதிற்பாதிமேலும்
பறந்தலைமுழுதும்பட்டவஞ்சகர்படிவமூடி
மறைந்தது குருதியோடிமறிகடன்மடுத்திலாத. (கஅ)

கயயற்றார்கால்களற்றார்கழுத்தற்றார்கவசமற்றார்
மெய்யற்றார்சுடர்கள்சோரவிசையற்றார்விளிவுமற்றார்
மய்யற்றார்க்கரியுந்தேரும்வாசியுமற்றுமற்றார்
உய்யச்சாய்ந்தோடிச்சென்றாருயிருள்ளாராகியுள்ளார். (க௯)

இலக்குமண விந்திரசித்தர்களின் யுத்தந்திறம்.

வற்றியகடலுணின்றமலையெனமருங்கின்யாரும்
சுற்றினரின்றித்தோன்றுந்தசமுகன்றோன்றறுன்னித்
தெற்றினபுருவத்தோன்றன்மனமெனச்செல்லுந்தோரான்
உற்றனனிளையகோவையநுமனுமுடன்வந்துற்றான். (க00)

தோளின்மேலாதியையவென்றடிதொழுதுநின்றான்
ஆளிபோன்மொய்ம்பினனுமேறினனமாரார்த்தார்
காளியேயனையகாலன்கொலையனகனலின்வெய்ய
வாளிமேல்வாளிதூர்த்தார்மழையின்மேன்மழைவந்தன்னார். (க0க)

இடித்தனசிலையினாண்களிரிந்தனதிசைகளிற்று
வெடித்தனமலைகள்விண்டுபிளந்தனவிசும்புமேன்மேல்
பொடித்தனவிவ்வுலமெங்கும்பொழிந்தனபொறிகள்பொங்கிக்
கடித்தனகணைகளோடுகணைகடம்மயில்வாய்கவ்வி. (க0உ)

அம்பினோடம்பொன்றொன்றையறுக்கமற்றறுக்கிலாத
வெம்பொறிகதுவவிண்ணில்வெந்தனகரிந்துவீழ்ந்த.

---

க0க. காளியே அனைய காலன் - மாகாளியை ஒத்த காலன்.

உம்பருமுணர்வுசிந்தியொடுங்கினருலகமியாவும்
கம்பமுற்றலைந்தவேலைக்கலமெனக்கலங்கிற்றண்டம். (௧௦௩)

அரியினம்பூண்டதேருமநுமனுமரந்தசாரி
புரிதலினிலங்கையூருந்திரிந்ததுபுலவரோயும்
எரிகணைப்படலமூடவிலருளரென்னுந்தன்மை
தெரிகிலர்செவிடுசெல்லக்கிழிந்தனதிசைகளெல்லாம். (௧௦௪)

நாண்பொருவரிவிற்செங்கைநாமநுளவின்றகல்வி
மாண்பொருவகையிற்றன்றாவலிக்கிலையவதிவானம்
சேண்பெரிதென்றுசென்றதேவருமிருவர்செய்கை
காண்பரிதென்றுகாட்சிக்கையுறவெய்திற்றன்றே. (௧௦௫)

என்செய்தாரென்செய்தாரென்றியம்புவாரினையதன்மை
முன்செய்தாரியாவரென்பார்முன்னேதுபின்னேதென்பார்
கொன்செய்தார்வீரரின்னதிசையினுமென்றுங்கொள்ளார்
பொன்செய்தார்மவுலிவிண்ணோருணர்ந்திலர்புகுந்ததொன்றும். (௧௦௬)

ஆயிரகோடிபல்லமயிலெயிற்றரக்கனெய்தான்
ஆயிரகோடிபல்லத்தவைதுணித்தறுத்தானையன்
ஆயிரகோடிநாகக்கணைதொடுத்தரக்கனெய்தான்
ஆயிரகோடிநாகக்கணைகளாலறுத்தானண்ணல். (௧௦௭)

கோட்டியின்றலையகோடிகோடியம்பரக்கன்கோத்தான்
கோட்டியின்றலையகோடிகோடியாற்குறைத்தான்கொண்டல்
மீட்டொருகோடிகோடிவெஞ்சினத்தரக்கன்விட்டான்
மீட்டொருகோடிகோடிகொண்டவைதடுத்தான்வீரன். (௧௦௮)

கங்கபத்திரமோர்கோடிகைவிசைத்தரக்கனெய்தான்
கங்கபத்திரமோர்கோடிகணைதொடுத்திளவல்காத்தான்
திங்களிற்பாதிகோடியிலக்குவன்றெறிந்துவிட்டான்
திங்களிற்பாதிகோடிதொடுத்தவையரக்கன்றீர்த்தான். (௧௦௯)

கோரையின்றலையகோடிதொடுத்தவையிளவல்கொன்றான்
பாரையின்றலையகோடிபரப்பினனிளவல்பல்கால்
பாரையின்றலையகோடியரக்கனும்பதைக்கவெய்தான். (௧௧௦)

தாமரைத்தலையவாளிதாமரைக்கணக்கிற்சார்ந்த
தாம்வரத்துரந்துமுந்தித்தசமுகன்றனையனூர்த்தான்
தாமரைத்தலையவாளிதாமரைக்கணக்கிற்சார்ந்த
தாம்வரத்தடுத்துவீழ்த்தான்றாமரைக்கண்ணன்றம்பி. (௧௧௧)

---

௧௧௧. தாமரைக்கண்ணன் - இராமன்.

வச்சிரப்பகழிகோடிவளையெயிற்றரக்கனெய்தான்
வச்சிரப்பகழிகோடிதூரத்தவையரகன்மாய்த்தான்
முச்சிரப்பகழிகோடியிலக்குவன்முடுகவிட்டான்
முச்சிரப்பகழிகோடிதொடுத்தவைதடுத்தான்முன்பன். (ககஉ)

அஞ்சலியஞ்சுகோடிதொடுத்திகலரக்கனெய்தான்
அஞ்சலியஞ்சுகோடிதொடுத்தவையறுத்தானையன்
குஞ்சரக்கன்னங்கோடியிலக்குவன்சிலையிற்கோத்தான்
குஞ்சரக்கன்னங்கோடிதொடுத்தவையரக்கன்காத்தான். (ககங)

எய்யவுமெய்தவாளிவிலக்கவுமுலகமெல்லாம்
மொய்க்கணைக்கானமாகிமுடிந்ததுமுழங்குவேலை
பெய்கணைப்பொறிகளாலேவளர்ந்ததுபிறந்தகோபம்
கய்மிகக்கனன்றதல்லாற்றனந்திலர்காளைவீரர். (ககச)

வீழியின்கனிபோன்மேனிகிழிபடவனுமன்வீரச்
சூழெழுவனையதோண்மேலாயிரம்பகழிதூவி
ஊழியினிமிர்ந்தசெந்தீயுருமினையுமிழ்வதென்ன
எழிருநூறுவாளியிலக்குவன்கவசத்தெய்தான். (ககரு)

முற்கொண்டானரக்கனென்றுமுனரிவாண்முகங்கடேவர்
பிற்கொண்டாரினையகோவைப்பியற்கொண்டான்பெருந்தோணின்றும்
கற்கொண்டார்கிரியினூலுமருவிபோற்குருதிகண்டார்
விற்கொண்டாரிவனேயென்றுவெருக்கொண்டார்முனிவர்மேலார். (ககசு)

சீறுநூறெறிந்தசிந்தையிலக்குவன்சிலைக்கைவாளி
நூறுநூறேவிநொய்தினுடங்குளைமடங்கன்மாவும்
வேறுகூறியற்றிவீரக்கொடியையுமறுத்துவீழ்த்தி
ஆறுநூறம்புசெம்பொற்கவசம்புக்கழுந்தவெய்தான். (ககஎ)

காளமேகத்தைச்சார்ந்தகதிரவனென்னக்காந்தித்
தோளின்மேன்மார்பின்மேலுஞ்சுடர்விடுகவசஞ்சூழ
நீளநீள்பவளவல்லிநிரையொளிதிமிர்வதென்ன
வாளிவாய்தோறும்வந்துபொடித்தனகுருதிவாரி. (ககஅ)

பொன்னுறுதடந்தேர்பூண்டமடங்கன்மாப்புரண்டபோதும்
மின்னுறுபதாகையோடுசாரதிவீழ்ந்தபோதும்
தன்னிறத்துருவவாளிதடுப்பிலசார்ந்தபோதும்
இன்னதென்றறியானன்றுனினையதோர்மாற்றஞ்சொன்னான். (கககூ)

இலக்குமணனை இந்திரசித்து மெச்சிப்பேசுதல்.

அந்நானல்லனுகினுானனனையனன்றேல்
பின்னான்பிரமனென்பார்ப்பேசகபிறந்துவாழும்

ககஉ. வளை எயிறு - வளைந்தகோரப்பல்.

மன்னர்கம்பதியின்வர்துவரிசிலைபிடித்தகல்வி
இந்நான்றன்னேடொப்பார்யாருளரிளையரென்றான். (௧௨0)

வாயிடைநெருப்புக்காலவுடனெடுங்குருதிவாரத்
தீயிடைநெய்வார்த்தன்னவெகுளியானுயிர்தீர்ந்தாலும்
ஓய்விடமில்லான்வல்லையோரிமையொடுங்காமுன்னம்
ஆயிரம்புரவிபூண்டவாழியந்தேரினானன். (௧௨௧)

வேறு.

ஆசையெங்கணுமம்புகவெம்புபோர்
ஓசைவிம்மவுருத்திரனும்முடல்
கூசவாயிரகோடிகொலைக்கணை
வீசிவிண்ணைவெளியிலதாக்கினான். (௧௨௨)

அத்திறத்திலநகனுமாயிரம்
பத்திபத்தியினெய்குவபல்கணை
சித்திரத்தினிற்சிந்தியிராவணன்
புத்திரற்குமோராயிரம்போக்கினான். (௧௨௩)

ஆயிரங்கணைபாய்ந்தனவாற்றருங்
காயெரித்தலைநெய்யெனக்காந்துறாத்
தூயவன்சுடர்சூழொளிநெற்றியில்
தீயவெங்கணைநூறுசெலுத்தினான். (௧௨௪)

நெற்றிமேலொருநூறுநெடுங்கணை
உற்றபோதினும்யாதுமொன்றுற்றிலன்
மற்றவன்றொழிலோன்மணிமார்பிடை
முற்றவெங்கணைநூறுமுடிக்கினான். (௧௨௫)

நூறுவெங்கணைமார்பினுழைதலின்
ஊறுசோரியொடுள்ளமுஞ்சோர்தரத்
தேறலாந்துணையுஞ்சிலையூன்றியே
ஆறிநின்றனனாற்றலிற்றேற்றிலான். (௧௨௬)

அனுமன் இந்திரசித்தன் தேரைக் காலாலுதைந்துத் தள்ளுதல்.

புதையுநன்மணிபொன்னுருளச்சொடு
சிதையவாயிரம்பாய்பரிசிந்திட
வதையின்மற்றொருகூற்றெனமாருதி
உதையினாலவன்றேரையுருட்டினான். (௧௨எ)

பேயொராயிரம்பூண்டதுபெய்ம்மணி
ஏயதேரிமைப்பின்னிடையேறினான்.

௧௨௨. ஆசை - திசை. ௧௨௪. தூயவன் - இலக்குமணன்.

தூயவன்சுடர்த்தோளிணைமேற்சுடர்
தீயவெங்கணையைம்பதுசிந்தினன். (கஉஅ)

எறியேறியிழிந்ததல்லாலிகல்
வேறுசெய்திலன்வெய்யவன்வீரனும்
ஆறுகோடிப்பகழியினையிரு
நூறுதேரொருநாழிகைநூறினன். (கஉகூ).

ஆசிகூறினரார்த்தனராய்மலர்
வீசிவீசிவணங்கினர்விண்ணவர்
ஊசனீங்கினருத்தரிகத்தொடு
தூசுவீசினர்நன்னெறிதுன்னினர். (கஙo)

அக்கணத்திலோராயிரமாயிரம்
மிக்கவெங்கணரக்கரவ்வீரனோ
டொக்கவின்பமொருவழியூணினர்
புக்குமுந்தினர்போரிடைப்பொன்றுவார். (கஙக)

தேரர்தேரினிவுளியர்செம்முகக்
காரர்காரினிடிப்பினர்கண்டையின்
தாரர்தாரணியும்விசும்புந்தவழ்
பேரர்பேரிமுழக்கன்னபேச்சினர். (கஙஉ)

பார்த்தபார்த்ததிசைதொறும்பன்மழை
போர்த்தவானமெனவிடிபோர்த்தெழ
ஆர்த்தவோசையுமம்பொடுவெம்படை
தூர்த்தவோசையும்விண்ணினைத்தூர்த்தவால். (கஙங)

ஆளியார்த்தனவாளரியார்த்தன
கூளியார்த்தனகுஞ்சரமார்த்தன
வாளியார்த்தனதேரிவர்மண்டிலம்
தூளியார்த்திலதாற்பிணர்துன்னலால். (கஙச)

வந்தணைந்ததொர்வாளரிவாவுதேர்
இந்திரன்றனைவென்றவனேறினன்
சிந்தினன்சரமாரிதிசைத்திசை
அந்திவண்ணனொரம்பினகற்றினன். (கஙரு)

சுற்றும்வந்துபார்ந்துதொடர்ந்தவர்
எற்றுகின்றனவெய்தவெறிந்தன
அற்றுதிர்ந்தனவாயிரம்வன்றலை
ஒற்றைவெங்கணையோடுமுருண்டவால். (கஙசு

சுடர்கிடந்தனபாம்பெனக்கோண்மதித்
திடர்கிடந்தனசிந்தினதேர்த்திரள்
படர்கிடந்தனர்பல்படைக்கையினர்
கடர்கிடந்தனபோன்றகளத்தினே. (கஙஎ)

குண்டலங்களுமாரமுங்கோவையும்
கண்டநாணுங்கழலுங்கவசமும்
சண்டமாருதம்வீசத்தலத்துகும்
விண்டலத்தினின்மீனெனவீழ்ந்தவால். (கஙஅ)

அரக்கன்மைந்தனையாரியனம்பினுல்
கரக்கறுநியெதிர்பொருகண்டகர்
சிரக்கொடுங்குவைக்குன்றுதிரட்டினுன்
இரக்கமெய்திவெங்காலனுமெஞ்சவே. (கஙக)

சுற்றிவால்கொடுதூவுந்துகைக்கும்விட்
டெற்றும்வானினெடுத்தெறியும்மெதிர்
உற்றமோதுமுதைக்குமுறுக்குமால்
கொற்றவில்வியன்றேறியகூற்றமே (கசο)

பார்க்குமஞ்சவுறுக்கும்பகட்டினுல்
தூர்க்கும்வேலையைத்தோள்புடைகொட்டிநின்
றூர்க்குமாயிரந்தேர்பிடித்தங்கையால்
ஈர்க்குமையனன்றேறியயானையே. (கசக)

மாவும்யானையும்வாளுடைத்தானையும்
பூவுநீரும்புனைதளிரும்மெனத்
தூவுமள்ளிப்பிசையுந்துகைக்குமால்
சேவகன்றெரிந்தேறியசியமே. (கசஉ)

உரகம்பூண்டவுருவைபொருந்தின
இரதமாயிரமேயெனுமாத்திரை
சரதமாகத்தரைப்படச்சாடுமால்
வாதனன்றுவந்தேறியவாசியே. (கசங)

அவ்விடத்தினிலாய்மருந்தாலழல்
வெவ்விடத்தினையுண்டவர்மீண்டென
எவ்விடத்தினும்வீழ்ந்தவினத்தலைத்
தெவ்விடக்கும்வலியவர்தேறினுர். (கசச)

தேறினுர்கனெருப்புகச்சீறினுர்
ஊறினுர்வந்திளவலையொன்றினுர்

---

கசο கொற்றவில்லி - வெற்றிபொருந்திய விற்படையினனுன இலக்குமணன்.

மாறுமாறுமலையுமர்க்களும்
நூறுமாயிரமுங்கொடூறினர். (௧௪௫)

விகடமுற்றமாளெடுவெற்பினம்
புகடவுற்றபொருதெனபோவன
நுகடவத்தொழில்செய்துறைக்கம்மியர்
சகடமொத்தனதாரணிதேரெலாம். (௧௪௬)

வாலிமைந்தனோர்மாமரம்வாங்கினன்
காலின்வந்தவரக்கனைக்காவிது
போலுமுன்னுயிருண்பதுபுக்கென
மேனிமிர்ந்துகெருப்புகவீசினன். (௧௪௭)

ஏழித்ததுசெய்தவனீண்டெழிற்
சீரழித்தவனுமெனத்தேவர்கள்
ஊரழித்தவுயர்வரைத்தோளவன்
தேரழித்ததிமைப்பினிற்சென்றதால். (௧௪௮)

அந்தவேலையினூர்த்தெழுந்தாடினர்
சிந்தைசீரினுயர்ந்தனர்தேவர்கள்
தந்தைதந்தைபண்டுற்றசழக்கெலாம்
எந்தைதீர்த்தனனென்பதோரேம்பலால். (௧௪௯)

அழிந்ததேரினின்றந்தாத்தக்கனைத்
தெழுந்துமற்றோரிரதமூற்றேறினன்
கழிந்துபோகலைகில்லெனக்கைக்கனை
பொழிந்துசென்றனன்றீயெனப்பொங்கினன். (௧௫0)

இந்திரன்மகன்மைந்தனையின்றுயிர்
தந்துபோகெனச்சாரலுற்றான்றனை
வந்துமற்றையவானரவீரரும்
முந்துபோர்க்குமுறைமுறைமுற்றினர். (௧௫௧)

மாமுழங்குன்றுமடிந்தவரக்கர்தம்
சிரமுந்தேரும்புரவியுந்திண்கரிக்
காமுமாளியும்வாரிக்கடியவன்
சாமுந்தாழ்த்தாவீசினர்தாங்கினர். (௧௫௨)

அனையகாலையிலாயிரமாயிரம்
வினையவெங்கணரக்கரைவின்னவர்
தினையுமாத்திரத்தாருயிர்நீக்கினன்
மனையும்வாழ்வுமறக்குமாற்றினன். (௧௫௩)

ஆனையுக்தடர்தேருந்தன்னுருயிர்த்
தானையும்பரியும்பட்டதன்மையை
மானவெங்கணாக்கன்மனக்கொள்ளாப்]
போனவென்றியன்றீயெனப்பொங்கினன். (கருச)

சிர்த்தடம்பெருஞ்சில்லியக்தேரினர்
காத்துநின்றவிருவரைக்கண்டனன்
ஆர்த்ததம்பெருஞ்சேனைகொண்டண்டமேல்
ஈர்த்தசோரிப்பரவைநின்றீர்த்தலால். (கருரு)

நேர்செலாதிடைநின்றனர்நீணெடுங்
கார்செலாவிருள்கீறியகண்ணகன்
தேர்செலாதுவிசும்பிடைசெல்வதோர்
பேர்செலாதுபிணத்தின்பிறக்கமே. (கருசு)

அன்றுதன்னயனின்றவரக்கரை
ஒன்றுவாண்முகநோக்கியொருவிலான்
என்றுநம்படைநாற்பதுவெள்ளமும்
கொன்றுநின்றபடியெனக்கூறினன். (கருஎ)

ஆயவீருமையவமர்த்தலை
வீயுநாற்பதுவெள்ளநெடும்படை
மாயவெங்கணைமாரிவழங்கினை
ஓய்வில்வெஞ்செருவொக்குமென்றோதினர். (கருஅ)

வந்துநேர்ந்தனர்மாருதிமேல்வரும்
அந்திவண்ணனுமாயிரமாயிரம்
சிந்தினன்கணைதேவரைவென்றவன்
நூந்தநுந்தமுறைமுறைநூறினன். (கருகூ)

ஆறுமேழுமறுபதுமைம்பதும்
நூறுமாயிரமுங்கணைநூக்கிவர்
தூறினரையுணர்வுதொலைத்துயிர்
தேறினரைநெடுகிலஞ்சேர்த்தினன் (ககo)

கதிரின்மைந்தன்முதலினோர்காவலர்
உதிரவெள்ளத்தினுலகியொதுங்கலும்
எதிரினின்றவிராவணியீடுற
வெதிரின்காட்டெரிபோற்சாம்வித்தினன். (ககக)

உளைவுதோன்றவிராவணியொல்கினன்
கிளையினின்றவிருவர்கிளைத்தலும்

கருசு. பிணத்தின்பிறக்கம் - பிணத்தினச்சம்., ககக. இராவணி - இராவ

அளவில்சேனையவிதாவாரியற்
கிளையவீரன்சடுசரமேவினான். (௧௧௨)

வேறு.

தெரிகணைமாரிபெய்யத்தேர்களுஞ்சினைக்கைமாவும்
பரிகளுந்தாமுமன்றுபட்டவர்கிடக்கக்கண்டார்
இருவருமின்றார்மற்றங்கிராக்கதரென்னும்பேரார்
ஒருவருமின்றரில்லையுள்ளவரோடிப்போனார். (௧௧௩)

ஓடினாராக்கர்தண்ணீருண்ணசையுலர்ந்தநாவர்
தேடினரெதிர்ந்துகையான்முகிலினைமுகந்துதேக்கிப்
பாடுறுபுண்கடோறும்பசும்புனல்பாயப்பாய
வீடினர்சிலவர்சில்லோர்பெற்றிலர்விளிந்துவீழ்ந்தார். (௧௧௪)

வெங்கணைதிறந்துமெய்யர்விளிந்திலர்விரைந்துசென்றார்
செங்குழற்கற்றைசோரத்தெரிவையாற்றத்தெய்வப்
பொங்கிரும்பள்ளிபுக்காரவருடல்பொருந்தப்புல்லி
அங்கவராவியோடுந்தம்முயிர்போக்கியற்றார். (௧௧௫)

பொறிக்கொடும்பகழிமார்பர்போயினாரிடங்கள்புக்கார்
மறிக்கொளுஞ்சிறுவர்தம்மைமற்றுளசுற்றந்தம்மைக்
குறிக்கொளுமென்றுகூறியவர்முகந்துழையநோக்கி
நெறிக்கொளுங்கூற்றைநோக்கியாருயிரொறுத்துநீத்தார். (௧௧௬)

தாமரைக்கண்ணன்றம்பிதன்மையீதாகின்மெய்ம்மை
வேமரைக்கணத்தினிவ்வூரிராவணிவிளிதன்முன்னம்
மாமரக்காணிற்குன்றின்மறைந்திருமறையவல்லை
போமெனத்தமரைச்சொல்லிச்சிலருடனுறந்துபோனார் (௧௧௭)

வரையுண்டமதுகைமேனிமருமத்துவள்ளல்வாளி
இரையுண்டுதுயிலச்சென்றார்வாங்கிடினிறப்பெனென்றார்
பிரையுண்டபாலினுள்ளம்பிறிதுறப்பிறர்முன்சொல்லா
உரையுண்டாகல்லோரென்னவுயிர்த்துயிர்த்துழைப்பதானார். (௧௧௮)

தேரிடைச்செல்லார்மானப்புரவியிற்செல்லார்செங்கட்
காரிடைச்செல்லார்காலிற்காலெனச்செல்லார்காவல்
ஊரிடைச்செல்லார்காணுவுயிரின்மேலுடையவன்பால்
போரிடைத்திரியாநின்றாடுங்கினர்புறத்தும்போகார். (௧௧௯)

நொய்தினிற்சென்றுகூடியிராவணியுனவைநோக்கி
வெய்தினிற்கொன்றுவீழ்ப்பலென்பதோர்வெகுளிவீங்கிப்
பெய்துழிப்பெய்யுமாரியனையவன்பிணங்குகூற்றின்
கய்யினிற்பெரியவம்பாற்கவசத்தைக்கழித்துவீழ்த்தான். (௧௨௦)

கவசத்தைக்கழித்துவீழ்ப்பக்காப்புறுகடனின்ருகி
அவசத்தையடைந்தவீரனறிவுறுந்துணையின்வீரத்
தவசத்தின்புரவித்திண்டேர்கடிதுறத்தூண்டியாமித்
திவசத்தின்முடித்தும்வெம்போரெனச்சினந்திருகிச்சென்ருர். (கள௧)

மாருதிமேலுமையன்மார்பினுந்தோளின்மேலும்
தேரினரிருவர்சென்ருர்சிந்தினபகழிசிந்தி
ஆரியன்வாகைவில்லுமச்சுடைத்தேருமத்தேர்
ஊர்குவாருயிருங்கொண்டான்புரவியினுயிருமுண்டான். (களஉ)

இருவருமிழந்தவில்லாரெழுமுனைவயிரத்தண்டர்
உருமெனக்கடிதினேடியநமனையிமைப்பினுற்ருர்
பொருகனற்பொறிகள்சிந்தப்புடைத்தனர்புடைத்தலோடும்
பருவலிக்கரத்திறுற்றண்டிரண்டையும்பறித்துக்கொண்டான். (களக)

தண்டவன்கையதாயதன்மையைத்தறுகணுளர்
கண்டனர்கண்டுசெய்யலாவதொன்ருறுங்காணுர்
கொண்டனனெறிந்துநம்மைக்கொல்லுமென்றச்சங்கொண்டார்
உண்டசெஞ்சோறுநோக்காருயிருக்கேயுதவிசெய்தார். (களச)

காற்றுவந்தசைத்தலாலுங்காலமல்லாமையாலும்
கூற்றுவந்தாவிகொள்ளுங்குறியின்மைகுறித்தலாலும்
தேற்றம்வந்தெய்தநின்றமயக்கமுநோவுந்தீர்ந்தார்
ஏற்றமும்வலியும்பெற்ருரெழுந்தனர்வீரரெல்லாம். (களரு)

அங்கதன்குமுதனீலன்சாம்பவனருக்கன்மைந்தன்
பங்கமின்மயிர்தன்றம்பிசதவலிபனசன்முன்ஞச்
சிங்கவேறனையவீரர்யாவருஞ்சிகரமேந்தி
மங்கலம்வானேர்சொல்லமழையெனவார்த்துவந்தார். (களசு)

அத்தனையோருங்குன்றமளப்பிலாவசனியேற்ருே
டொத்தனநெருப்புவீசுமுருமெனவொருங்கவுய்த்தார்
இத்தனைபோலுஞ்செய்யுமிகலெனுமுறுவலெய்தி
சித்திரவில்வலோனுஞ்சின்னபின்னங்கள்செய்தான். (களள)

சூரியாத்தமனகாலம் ஆதல்.

மரங்களுமலையுங்கல்லுமழையெனவழங்கிவந்து
நெருங்கினர்நெருங்கக்கண்டுமொருதனிநெஞ்சும்வில்லும்
சரங்களுந்துணையாய்நின்றநிசாசரன்றனிமைநோக்கி
இரங்கினனென்னமேல்பாற்குன்றுபுக்கருக்கனின்ருன். (களஅ)

வாழியவேதான்குமனுமுதல்வந்ததூலும்
வேழ்வியுமெய்யுந்தெய்வவேதியர்வினைவுமஃதே

ஆழியங்கமலக்கையானுகியப்பரமனென்னு
ஏழையருள்ளமென்னவிருண்டனதிசைகளெல்லாம். (கஎக)

காதமேயனையகம்பநாழிகையொன்றுநான்கு
பாகமேகாலமாகப்படுத்தியேபட்டானன்றேல்
வேகவானரக்கர்காலம்விளைந்ததுவிசும்பின்மீதா
ஏகுமேல்வெல்வனென்பதிராவணற்கிளவல்சொன்னான். (கஅ0)

அத்தனைவீரர்மேலுமாண்டகையனுமன்மேலும்
எத்தனைகோடிவாளிமழையெனவெய்யாநின்ற
வித்தகவில்லினானைக்கொல்வதுவிரும்பிவீரன்
சித்திரத்தேரைத்தெய்வப்பகழியாற்சிதைத்துவீழ்த்தான். (கஅக)

இந்திரசித்து வானத்தின் மறைதல்.

அழித்ததேரழுந்தாமுன்னமம்பொடுகிடந்துவெம்பி
உழைத்துயிர்விடுவதல்லாலுறுசெருவென்றேமென்று
பிழைத்திவர்போவரல்லர்பாசத்தாற்பிணிப்பினென்னா
விழித்திமையாதமுன்னம்வில்லொடும்விசும்பிற்சென்றான். (கஅஉ)

பொன்குலாமேனிமைந்தன்றன்னொடுபுகழ்தற்கொத்தான்
வன்கலாமியற்றிநின்றான்மற்றொருமனத்தனாகி
மின்குலாங்கழற்கால்வீரன்விண்ணிடைவிரைந்ததன்மை
என்கொலாமென்னவஞ்சிவானவரிரியல்போனார். (கஅங)

தாங்குவிற்கரத்தன்றாணிதழுவியபுறத்தன்றன்னின்
ஓங்கியுற்றெறியாநின்றவெகுளியினுயிர்ப்பன்றீயன்
தீங்கிழைப்பவர்கட்கெல்லாஞ்சிரியன்மாயச்செல்வன்
வீங்கிருட்பிழம்பினும்பர்வேகத்தின்மீதிலானான். (கஅச)

இந்திரசித்தன் மாயையால் அணுவுருக்கோடல்.

தணிவறப்பண்டுசெய்ததவத்தினுந்தருமத்தாலும்
பிணியறுப்பவரிற்பெற்றவரத்தினும்பிறப்பினாலும்
மணிநிறத்தரக்கன்செய்தமாயமந்திரத்தினாலும்
அணுவெனச்சிறியதாங்கோராக்கையுமுடையனானான். (கஅரு)

வாங்கினான்மலரின்மேலவானவன்வானக்கங்கை
தாங்கினானுலகந்தாங்குஞ்சக்கரத்தவனென்றாலும்
நீங்குவான்றோளைநீக்கிவீழ்த்தலான்மீள்கிலாத
ஓங்குவானவனுமற்றொருதனிப்படையுன்னி. (கஅசு)

---

கஎக. கையானுகியம்பரமனென்னு - என்றும் பாடம்.
கஅ0. நான்குபாகம் - கால்நாழிகையளவு.

ஓயினகாலத்தார்த்தாரமர்த்தொழிலஞ்சியப்பால்
போயினனென்பதுன்னிவானரவீரர்போல்வார்
நாயகற்கிளையகோவுமன்னதேவினைத்தூக்கான்
மாயையைத்தெரியவுன்னார்போர்த்தொழின்மாற்றிநின்றார். (௧௮௭)

அதுகணத்தனுமன்றோணின்றையனுமிழிந்துவெய்ய
கதுவலிச்சிலையைவென்றியங்கதன்கையதாக்கி
முதுகுறச்சென்றுநின்றகணையெலாமுறையின்வாங்கி
விதுவிதுப்பாற்றலுற்றான்விளைகின்றதுணர்ந்திலாதான். (௧௮௮)

விட்டனனரக்கன்வெய்யபடையினைவிடுத்தலோடும்
எட்டினோடிரண்டுதிக்குமிருடிரிந்திரியவோடிக்
கட்டினதென்பமன்னோகாகுத்தற்கிளையகாளை
வட்டவான்வயிரத்திண்டோண்மலைகளையுளையவாங்கி. (௧௮௯)

இறுகுறப்பிணித்தலோடும்யாவையுமெதிர்ந்தபோதும்
மறுகுறக்கடவானல்லன்மாயமென்றுணர்வானல்லன்
உறுகுறைத்துன்பமில்லானொடுங்கினன்செய்வதோரான்
அறுகுறைக்களத்தைநோக்கியந்தாமதனைநோக்கும். (௧௯0)

காலுடைச்சிறுவன்மாயக்கள்வனைக்கணத்தின்காலை
மேல்விசைத்தெழுந்துநாடிப்பிடிப்பெனென்றுறுக்கும்வேலை
ஏல்புடைப்பாசமேனாளிராவணன்புயத்தைவாலி
வால்பிணித்தென்னச்சுற்றிப்பிணித்ததுவயிரத்தோளை. (௧௯௧)

மற்றையோர்தமையுமெல்லாம்வாளெயிற்றரவம்வந்து
சுற்றினவயிரத்துணின்மலையினிற்பெரியதோள்கள்
இற்றனவிற்றவென்னவிறுக்கினவிளகாவுள்ளம்
தெற்றெனவுடையவீரரிருந்தனர்செய்வதோரார். (௧௯௨)

மலையெனவெழுவர்வீழ்வர்மண்ணிடைப்புரள்வர்வானில்
தலைகளையெடுத்துநோக்கித்தழலெழவிழிப்பர்தாவி
அலைகிளர்வாலாற்பாரினடிப்பர்வாய்மடிப்பராண்மைச்
சிலையவற்கிளையகோவைநோக்குவாருள்ளந்தீவர். (௧௯௩)

வீடணன்முகத்தைநோக்கிவினையுண்டேயிதனுக்கென்பர்
மூடினகங்குன்மாலையிருளினைமுனிவர்மொய்ம்பில்
ஈடுறத்தக்கபோலாநம்மெதிரென்னாவேந்தல்
ஆடகத்தோளைநோக்கிநகைசெய்வர்வீழுவாஞ்சார். (௧௯௪)

அரிதுதீர்க்கவல்லாரஞ்சனைபயந்தவள்ளல்
மாருதிபிழைத்தான்கொல்லோவென்றனர்மறுகிநோக்கி

௧௯௧. காலுடைச்சிறுவன் - அனுமன்.

வீரனைக்கண்டுபட்டதிதுகொலாமென்றுவிம்மி
வார்கழற்றம்பிதன்மைகாணுமோவன்னவென்பார். (ககரு)

என்சென்றதன்னசொல்லினெறூழ்வலியாக்கனெய்தான்
மின்சென்றதன்னவானத்துருமினம்வீழ்வவென்னப்
பொன்சென்றவடிம்பின்வாளிபுகையொடுபொறியுஞ்சிந்தி
முன்சென்றமுதுகிற்பாயப்பின்சென்றமார்பமுற்ற. (ககசு)

மலைத்தலைக்காலமாரிமறித்தெறிவாடைமோதத்
தலைத்தலைமயங்கிவீழுந்தன்மையிற்றலைகள்சிந்தும்
கொலைத்தலைவாளிபாயுங்குன்றனகுவவுத்தோளார்
நிலைத்திலருலைந்துசாய்ந்தார்கிளர்த்ததுகுருதிநீத்தம். (ககஎ)

ஆயிரகோடிமேலுமம்புதனுகத்தூடு
போயினபோதுமொன்றுந்துடித்திலன்பொடித்துமானத்
தீயெரிசிதறுஞ்செங்கணஞ்சனைச்சிங்கமேனி
நாயகன்றம்பிக்குற்றதுயர்சுடநடுங்குகின்றான். (ககஅ)

வேறுளவீரரெல்லாம்வீழ்ந்தனருருமின்வெய்ய
நூறுமாயிரமும்வாளியுடலிடைநுழையச்சோரி
ஆறுபோலொழுகவண்ணலங்கதனாந்தவாளி
ஏறினமெய்யனேனுமிருந்தனனிடைந்திலாதான். (ககக)

கதிரவன்காதன்மைந்தன்கழலினம்பசுங்காயன்ன
எதிரெதிர்பகழிதைத்தயாக்கையனெரியுங்கண்ணன்
வெதிர்நெடுங்கானமென்னவேகின்றமனத்தன்மெய்யன்
உதிரவெங்கடலுட்டாதையுதிக்கின்றான்றனையுமொத்தான். (உ00)

வெப்பாரும்பாசம்வீக்கிவெங்கணைவளைக்குமெய்யன்
ஒப்பாருமில்லான்றம்பியுணர்ந்திருந்தின்னலுய்ப்பான்
இப்பாசமாய்க்குமாயம்யான்வல்லெனென்பதோர்ந்தும்
அப்பாசம்வீசவாற்றாதழிந்தாலறிவுபோன்றான். (உ0க)

அம்பெலாங்கதிர்களாகவழிந்தழிந்திழியுமாகச்
செம்புனல்வெயிலிற்றோன்றத்திசையிருளிரியச்சீறிப்
பம்புபேரொளியநாகம்பற்றியபடிவத்தோடும்
உம்பர்நாடிறந்துவீழ்ந்தவொளியவனேயுமொத்தான். (உ0உ)

மயங்கினன்வன்னறம்பிமற்றையோர்முற்றுமண்ணை
முயங்கினர்மேனியெல்லாமூடினராக்கன்மூரித்
தயங்குபோற்றலானுந்தன்னுடைறைத்தவாளிக்
குயங்கினனுளைந்தான்வாயாலுதிரநீருமிழாநின்றான். (உ0௩)

சொற்றிலெனினையதொன்றுறவன்றிலென்மனிசனுண்மை
மற்றாமனையதோனாய்வாம்புடைத்தன்றுமன்றே. (உஅஅ)

இளையவன்றன்மையீதாலிராமனதாற்றலெண்ணின்
தளையவிழலங்கன்மார்பநம்வயிற்றங்கிற்றன்றால்
விளைவுகண்டுணர்தலல்லால்வென்றிமேல்விளையுமென்ன
உளையதன்றென்னச்சொன்னானுற்றதுணர்கிலாதான். (உஅகூ)

வென்றதுபாசத்தாலுமாயையின்விளைவினாலும்
கொன்றதுகுரக்குவீரர்தம்மொடக்கொற்றத்தோளை
நின்றனனிராமனின்னுநிகழ்ந்தவாநிகழ்கமேன்மேல்
என்றனனென்னக்கேட்டவிராவணனிதனைச்சொன்னான். (உகூ0)

இராவணன் இந்திரசித்திற்கு இலக்குமணாதியர் எழுந்தமைகூறல்.

வார்கழற்காலமற்றவ்விலக்குவன்வயிரவில்லின்
பேரொலியரவம்விண்ணைப்பிளந்திடக்குரங்குபோர்த்த
காரொலிமடங்கவல்லேக்கம்பிக்கக்களத்தினார்த்த
போரொலியொன்றுமையவறிந்திலைபோலுமென்றான். (உகூக)

அய்யவெம்பாசந்தன்னாலார்ப்புண்டாரசனியென்னப்
பெய்யும்வெஞ்சரத்தான்மேனிபிளப்புண்டாருணர்வுபோந்தார்
உய்யுமொன்றுரைத்ததன்மையோவொழிகவொன்றோ
செய்யுமென்றெண்ணத்தெய்வஞ்சிறிதன்றோதெரியினம்மா. (உகூஉ)

ஈதுரைநிகழும்வேலையெய்துவதறியப்போய
தூதுவர்விரைவின்வந்தார்புகுந்தடிதொழுதலோடும்
யாதவணிகழ்ந்ததென்னவிராவணனியம்பவீறின்
றோதியகல்வியாளர்புகுந்தனதுரைக்கலுற்றார். (உகூங)

தூதர் நடந்தவைகூறல்.

பாசத்தாற்பிணிப்புண்டாரைப்பகழியாற்களப்பட்டாரைத்
தேசத்தாரசன்மைந்தனிடையிருள்சேர்ந்துநின்றே
ஏசத்தானிரங்கியேங்கியுலகெலாமெரிப்பனென்றான்
வாசத்தார்மாலைமார்பவானுறைகலுழன்வந்தான். (உகூ௪)

அன்னவன்வரவுகாணவயிலெயிற்றரவமெல்லாம்
சின்னபின்னங்களானபுண்ணொடுமயர்வுதீர்ந்தார்
முன்னையின்வலியராகிமொய்க்களநெருங்கிமொய்த்தார்
இன்னதுநிகழ்ந்ததென்றாரரக்கனீதெடுத்துச்சொன்னான். (உகூ௫)

இராவணன் கலுழனை இகழ்தல்.

ஏற்றருந்தடந்தோளாற்றலென்மகனெய்தபாசம்
காற்றிடைக்கழித்துத்தீர்த்தான்கலுழனுங்காண்மின்காண்மின்

உஅகூ. தங்கிற்றன்றால்-தங்கிற்று, ஆல்-அசை.

போவதுபுரிதிரென்னப்புகறலும்பொருதூதர்
தேவமற்றிவர்கள்செய்கைகேளெனத்தெரியச்சொன்னார். (௨)

தூதர் சேனை வீரர்திறங்கூறல்.

ஆனையும்பரியுந்தேருமாக்கருமமைந்தவாளித்
தானையும்வீயவின்றதலைமகன்றனிமையோரார்
மானவன்வாளிவாளியென்கின்றமழலைவாயார்
போனவர்மீளவந்துபுகுந்தனர்போலுமென்றார். (௩)

வேறு.

சேனைகள்மீது இராவணன் சீற்றங்கோடல்.

அற்றவர்கூறலுமாரழலிற்றாய்
முற்றியகோபமுருங்கமுனிந்தான்
இற்றிதுவோவிவர்சேவகமென்னாப்
பற்றுமினென்றனன்வெம்மையயின்றான். (௪)

என்றலுமெய்தினர்கிங்கரரென்பார்
பின்றலிலோரைவலிந்துபிடித்தார்
நின்றனராயிடைநீலகிறத்தான்
கொன்றிடுவீரவிர்கொண்மினிதென்றான். (௫)

சேனைகள் மூக்கறுப்பான் இராவணன் கட்டளையிடல்.

ஏற்றமினிச்செயல்வேறிலையீர்வீர்
காற்றுநகர்த்துயர்காரியைகாமக்
கோற்றருதிண்பணைகொட்டினிர்கொண்டோர்
சாற்றுமினஞ்சினரென்றுரைதந்தே. (௬)

மாலி தடுத்துரைத்தல்.

அக்கணனேயயில்வாளினர்கோரா
மிக்குயர்காரியையீரவிரைந்தார்
புக்கனரப்பொழுதிற்புகழ்தக்கோய்
தக்கிலதென்றனன்மாலிதடுத்தான். (௭)

அஞ்சமமஞ்சியெழீந்துனாரார்
வெஞ்சமம்வேறலும்வென்றியதன்றாய்த்
துஞ்சலுமென்றிவைதொல்லையவன்றே
தஞ்செனவாருளராண்மைதகைந்தார். (௮)

அந்தரமொன்றுமறிந்திலையன்றே
வந்தனகம்வயினொத்தனைமன்னா
தந்திரம்வானவர்தானவரொன்றும்
இந்திரனஞ்சினனென்னுநியன்றே. (௯)

௪. அற்று - அப்போது.

இருளறுங்கினன்வந்துவணங்கிக்
கருணைபெறுந்துணையும்முயிர்கால்வான்
இருணிறவஞ்சகரெங்குளரென்றாய்
பருணிதர்தண்டமிதன்றுபகர்ந்தால். (௧0)

பத்தொருநான்குபகுத்தபரப்பின்
அத்தனைவெள்ளமரக்கரவிந்தார்
ஒத்தொருமூவர்பிழைத்தனருய்ந்தார்
வித்தகர்யாரினிவீரம்விளைப்பார். (௧௧)

பாசமுமிற்றதுபாதியின்மேலும்
காசமுமுற்றதுகம்பிகடந்தாய்
பூசன்முகத்தொருகான்முனைபோதா
நீசரைவெட்டுதியோநெடுநாசி. (௧௨)

வாழியிலக்குவனென்னின்மறுக்குற்
றாழியரக்கர்தம்வாயிலடைப்பார்
ஏழுகடற்றுணையோவினிநாசி
ஊழியறுத்திடினும்முலவாதால். (௧௩)

தூதுகடந்தவனைத்தொழுதக்கான்
ஓதுநெடுஞ்செருவஞ்சியுடைந்தார்
நீதிலர்நின்றவர்சேனையினின்றார்
பாதியின்மேலுளர்நாசிபடைத்தார். (௧௪)

விட்டிலைசீதையையாமெனின்வீரர்
ஒட்டியபோருளதோவொருநாளே
வெட்டுதிநாசியைவெந்தொழில்வல்லோர்
பட்டிலரென்றிலையென்றுபகர்ந்தான். (௧௫)

ஆறினபின்னரழிந்தனரன்றூர்
தேறினரன்னதுசிந்தையுணர்ந்தார்
சிறியநெஞ்சினர்செங்கணரொன்றோ-
கூறினர்தக்கிலசெய்கைகுறித்தார். (௧௬)

நின்மகனை இந்திரசித்துமாயையாலோடி ஒளிந்திலனேவெனல்.

உன்மகனெல்கியொதுங்கினனென்றே
மின்னகுவாளிடையேகவிரைந்தான்
அன்னதின்மாயையியற்றியகன்றான்
இன்னசெய்தினனுய்ந்தனனென்றாய். (௧௭)

இப்பகலொன்றினினுனையினல்லால்
முப்பகதீர்கிலமாவிமுடிப்பேம்

௧௧. அவிந்தார் - உயிர்நீங்கினர்.

வெப்பகலாவெரிவெந்தழல்வெந்த
செப்பகல்வெண்ணெயினேன்மைதெரிந்தோய். (௧௮)

விட்டனையெம்மைவிடுத்தினிவெம்போர்
பட்டனரென்றுபடுத்தனரொன்றோ
கெட்டனரென்பதுகேளலையென்னு
ஓட்டினராவிமுடிக்கவுவந்தார். (௧௯)

இராவணன் சேனைகளை ஏவுதல்

அன்னவர்தம்மொர்டுமையிருவெள்ளம்
மின்னுபடைக்கையரக்கரைவிட்டான்
சொன்னதொகைக்கமையானைசுடர்த்தேர்
துன்னுவயப்பரியோடுதொகுத்தான். (௨௦)

செய்யழல்வேள்விநெடும்பகைநேர்வின்
தய்வருசூரியசத்துருவென்பான்
பெய்கழன்மாலிபிசாசனெனும்பேர்
வெய்யவன்வச்சிரம்வென்றவெயிற்றன். (௨௧)

என்றவரோடுமெழுந்துலகேழும்
வென்றவனேவலின்முன்னம்விரைந்தார்
சென்றனமால்கரிதேர்பரிசெல்லக்
குன்றினமென்னநடந்தனர்கோட்பால். (௨௨)

விண்ணைவிழுங்கியதூளியவிண்ணோர்
கண்ணைவிழுங்குதலிற்கரைகாணார்
எண்ணைவிழுங்கியசேனையர்யாரும்
பண்ணைவிழுங்கவுணர்ந்திலர்பண்பால். (௨௩)

கால்கிளர்தேரொடுகால்வரையோடு
மேல்கிளர்பல்கொடிவெண்டிரைவீச
மால்கடலானதுமாமழைவானப்
பால்கிளர்மீனிடையாடியபண்பால். (௨௪)

பேரிகலித்தனபேருலகைச்சூழ்
ஏரிகலித்தனவாமெனயானைக்
காரிகலிக்கடலோடுகலித்த
மாரிகலித்தெனவாசிகலித்த. (௨௫)

சென்றனசென்றகவட்டொடுசெல்லா
நின்றுபிணங்கியகலவியினில்லா
ஒன்றினையொன்றுதொடர்ந்தனவோடைக்
குன்றுநடந்தனபோற்கொலையானை. (௨௬)

௨௩. எண்ணை விழுங்கிய - அளவைகடந்த.

மாகநெடுங்காம்வானின்வழங்கா
மேகநெடும்புனல்வாரினமேன்மேல்
போகவிலங்கினவுண்டனபோலாங்
காகநெடுங்களியானைகளிப்பால். (உஎ)

எரிக்தெழுபல்படையின்னொளிவீரர்
அருங்கலமின்னொளிதேர்பரியானை
பொருந்தியபண்ணொளிதாரொளிபொங்க
இரிந்தனபேரிருளெண்டிசைதோறும். (உஅ)

இராமன் வருபவன் யாவனென விபீடணன் பதிலுரைத்தல்.

எய்தியசேனையையீசனெதிர்ந்தான்
வெய்திவண்வந்தவன்மாயையின்வெற்றி
செய்தவனேகொறெரித்தியிதென்றான்
அய்யமில்வீடணனன்னதுரைத்தான். (உக)

வேறு.

முழைக்குலச்சியம்வெம்போர்வேட்டதுமுனிந்ததென்னப்
புழைப்பிறையெயிற்றுப்பேழ்வாயிடிக்குலம்பொடிப்பவார்த்துத்
தழைப்பொறிவாளிப்புட்டில்கட்டிவிற்றூங்கிச்சார்வான்
மழைக்குரற்றேரின்மேலான்மாபெரும்பக்கன்மன்னோ. (௩௦)

வேறு.

சிகைநிறக்கனல்பொழிதெறுகட்செக்கரான்
பகைநிறத்தவருயிர்பருகும்பண்பினால்
கைநிறப்பெருங்கடல்வாயைாக்குவான்
புகைநிறக்கண்ணவன்பொலம்பொற்றேரினன். (௩க)

பிச்சரிற்றிகைத்தனன்பெற்றபோரினன்
முச்சிரத்தயிலினன்மூரித்தேரினன்
இச்சிரமும்மதேயெனவக்தெய்துவான்
வச்சிரத்தெயிற்றவன்மலையின்மேனியான். (௩உ)

காலையுமனத்தையும்பிறகுகாண்பதோர்
வாலுளைப்புரவியின்மடித்தவாயினன்
வேலையினார்ப்பினன்விண்ணைமீக்கொளும்
சூலமொன்றுடையவன்பிசாசன்றேன்றினன். (௩௩)

சூரியன்பகைஞனச்சுடர்பொற்றேரினன்
சீரினுமுழக்கினனெருப்பின்வெம்மையான்
ஆரியவேள்வியின்பகைஞனுமரோ
சோரியுங்கனலியுஞ்சொரியுங்கண்ணினன். (௩௪)

௩உ. பிச்சர் - பைத்தியம்பிடித்தோர்.

சாலிவன்கதிர்நிகர்புரவித்தானையான்
மூலிவெங்கொடுமையிற்றவத்தின்முற்றினன்
சூலியும்வெருக்கொளத்தேரிற்றோன்றவான்
மாலியென்றடிமுறைவணங்கிக்கூறினன். (௧௫)

அசுரவானர யுத்தம்.

ஆர்த்தெதிர்கடந்ததவ்வரியின்றானையும்
நீர்த்திரைவாழ்த்தியுற்றிரண்டுசேனையும்
போர்த்தொழில்புரிந்தனர்புலவர்போக்கிலார்
வேர்த்துயிர்பதைத்தனர்நடுங்கிவிம்மியே. (௧௬)

கல்லெறிந்தனகடையுருமிற்காலென
வில்லெறிந்தனகணைவிசும்பின்மேகத்த
செல்லெறிந்தனவெனச்சிதறிவீழ்ந்தன
பல்லெறிந்தனதலைமலையின்பண்பென. (௧௭)

கடம்படுகரிபடக்கவினமாப்பட
இடம்படுசில்லியினீர்த்ததேர்பட
உடம்படுமரக்கரையாக்கனுச்சியில்
படம்படுமெனப்படுங்கவியின்கற்படை. (௧௮)

கொலையொடுங்காரொடும்புயத்தின்குன்றொடும்
நிலைநெடுங்காலொடுமயிர்த்தவாலொடும்
மலையொடுமாத்தொடுங்கவியின்வன்னெடுந்
தலையொடும்போம்விசைத்தெறிந்தசக்கரம். (௧௯)

ஆண்டகைக்கவிக்குலத்தலைவராக்கையைக்
கீண்டனபுலியினைக்கிழித்தமாக்கரி
தாண்டுவகுலப்பரிமனத்திற்றுவவ
தூண்டினர்கைவிசைத்தெறிந்ததோமரம். (௨0)

சில்லியத்தேர்க்கொடிசிதையச்சாரதி
பல்லுடைநெடுந்தலைமடியப்பாதகர்
வில்லொடுகழுத்திறப்பகட்டைவீட்டுமால்
கல்லெனக்கவிக்குலம்வீசுங்கல்லரோ. (௨௧)

காகமுந்தினமலைமுழையிற்கட்செவி
உரகமுந்தினவெனவொளிக்குமொள்ளிலை
அரகமுந்தினகவித்தலைவராக்கையில்
துரகமுந்தினநெடுந்தெறியுஞ்சூலமே. (௨௨)

வால்பிடித்தடிக்கும்வானரத்தைமால்கரி
கால்பிடித்தடிக்குமக்கரியினைக்கவி

---

௧௮. அனந்தன் - ஆதிசேஷன்.

தோல்பிடித்தாக்கரையெதியுஞ்சூர்முக
வேல்பிடித்தெறிவாம்முகலைவெங்கணார். (சங)

முற்படுகவிக்குலமுடுகவீசிய
கற்படக்களம்படுமரக்கர்க்கார்க்கடல்
பற்படுதலைபடப்படுவர்பாதகர்
விற்படுகணைபடக்குரங்கின்வேலையே. (சச)

எயிற்றொடுநெடுந்தலையிட்டகல்லொடும்
வயிற்றிடைபுகப்பலபகலும்வைகிய
பயிற்றியராயினுந்தெரிக்கும்பண்பிலார்
அயிர்ப்பர்தங்கணவரையணுகியர்சலார். (சரு)

நிச்சுறுகிரிபடக்கிளர்பொற்றேர்க்கிழை
அச்சிறச்செல்கிலவாடல்வாம்பரி
எச்சுறுதயரிடையெய்தவீந்தன
முச்சிறுவாழ்க்கையின்முண்டுளோரென. (சசு)

வீயவர்யாவரும்வீயவெங்கரி
சேயறங்குருதியிற்றிரிவசேர்வில
நாயகராளொடுமவியநவ்விதம்
பாயொடுவேலையிற்றிரியும்பண்பின. (சஎ)

படையொடுமேலவர்மடியப்பல்பரி
இடையிடைதரவிழுந்திழிந்தபண்பன
கடனெடுங்குருதியகனலிகாலுற
வடவையைநிகர்த்தனவுதிரவாயன. (சஅ)

வேறு.

தூமக்கண்ணனுமதுமனுமெதிரெதிர் தொடர்ந்தார்
தாமத்தங்கதன்மாபெரும்பக்கனைத்தடுத்தான்
சேமத்திண்சிலைமாலியுநீலனுஞ்செறுத்தார்
வாமப்போர்வயப்பிசாசனும்பனசனுமலைந்தார். (சகூ)

சூரியன்பெரும்பகைஞனுஞ்சூரியன்மகனும்
நேரெதிர்ந்தனர்நெருப்புடைவேள்வியின்பகையும்
ஆரியன்றனித்தம்பியுமவரெதிரடர்ந்தார்
வீரவச்சிரத்தெயிற்றனுமிடபனுமிடைந்தார். (ருo)

வெங்கண்வெள்ளெயிற்றரக்கரிற்கவிக்குலவீரச்
சிங்கமன்னபோர்த்தலைவரிற்றலைவராய்த்தெரிந்தார்
அங்கமர்க்களத்தொருவரோடொருவர்சென்றடர்ந்தார்
பொங்குவெஞ்செருத்தேவருநடுக்குறப்பொருதார். (ருக)

ருo. ஆரியன் தனித்தம்பி - இலக்குமணன்.

இன்னகாலையினீரைந்துவெள்ளம்வந்தேற்ற
மின்னும்வெள்ளெயிற்றரக்கர்தஞ்சேனையைவீரன்
அன்னவெஞ்சமத்தாறுவெள்ளத்தையுமவித்தான்
சொன்னநாலையுமிலக்குவன்பகழியாற்றொலைத்தான். (௧௨)

உப்புடைக்கடன்மடுத்தனவுதிரவோதம்
அப்பொடொத்தனகடுத்திலவார்கலிமுழுதும்
செப்புருக்கெனத்தெரிந்ததுமீன்குலஞ்செருக்கித்
துப்பொடொத்தனமுத்தினங்குன்றியிற்றோன்ற. (௧௩)

தத்துநீர்க்கடன்முழுவதுங்குருதியாய்த்தழங்கச்
சித்திரக்குலப்பன்னிறமணிகளுஞ்சேர்ந்த
ஒத்துவேறுருத்தெரியலவுயர்மதத்தோங்கல்
மத்தகத்துகுதாளமும்வளைசொரிமுத்தும். (௧௪)

அதிரவெஞ்செருவன்னதொன்றமைக்கின்றவளவில்
கதிரவன்கொழுஞ்சேயொளிக்கற்றையங்கரத்தான்
எதிரவல்லிருட்கரியிறத்தெழுமுறைமூழ்கி
உதிரவெள்ளத்துளெழுந்தவனுமெனவுதித்தான். (௧௫)

அரக்கரென்றபேரிருளினையிராமனுமிரவி
துரக்கவெஞ்சுடர்க்கதிரவன்புறத்திருடுரக்கப்
புரக்கும்வெய்யவரிருவரையுடையவர்போல
நிரைக்குநல்லொளிபரந்தனவுலகெலாநிமிர. (௧௬)

நிலைகொள்பேரிருணீங்கலுநிலத்திடைநின்ற
மலையும்வேலையும்வரம்பிலவயின்றொறும்பரந்து
தொலைவிலாதவைதோன்றுவபோன்றனசோரி
அலைகொள்வேலையுமருப்பிணக்குன்றமுநிரம்ப. (௧௭)

போர்க் களந்திறம்.

நிலந்தவாதசெந்நீரிடைநிணக்கொழுஞ்சேற்றில்
புலர்ந்தகாலையிற்பொறிவரியம்பெனுந்தும்பி
கலந்ததாமரைப்பெருவனங்கதிரவன்கரத்தால்
மலர்ந்ததாமெனப்பொலிந்தனவுலர்ந்தவர்வதனம். (௧௮)

தேரும்யானையும்புரவியும்விரவினதேவர்
ஊருமானமுமுடுக்களுமுலகமுமலையும்
பேருமானவெங்காலத்துக்காற்பொரப்பிணங்கிப்
பாரின்வீழ்ந்தனபோன்றனகிடந்தனபரந்த. (௧௯)

எல்விசற்றியமதிநிகர்முகத்தியரெரிவீழ்
அல்விசற்றியகோதையர்களம்புகுந்தடைந்தார்

---

௧௩. ஆர்கலி - சமுத்திரம்.

புல்விமுற்றியவுயிரினர்பொருந்தினர்கிடந்தார்
வல்விசுற்றியமாமரகிகர்த்தனர்வயவர். (௬௦)

போர்க்களமெய்திய அரக்கியர் தன்மையுஞ் செயலும்.

வணங்குநுண்ணிடைமலைமுலைச்செச்சர்வார்கூந்தல்
அணங்குவெள்ளெயிற்றரக்கியர்களத்துவந்தடைந்தார்
குணங்கொளுந்துணைக்கணவர்தம்பசுந்தலைகொடாது
பிணங்குபேய்களைப்பிளந்தனர்தொடர்ந்தனர்பிடித்தார். (௬௧)

சடரும்வெவ்வினைத்தோளிதன்கொழுநனைத்தொடர்வான்
உடருமங்கமுங்கண்டுகொண்டொருவழியுய்யான்
குடருமீரலுங்கண்ணுமோர்குநரிகொள்ளத்
தொடரவாற்றலணைடிதுயிர்த்தாருயிர்துறந்தாள். (௬௨)

பெரியவாட்டங்கண்ணியோர்கணவன்றன்பெருந்தோள்
கரிகளீர்த்தனவணங்கவுமிணங்கவுநல்கா
திரியல்போவனதொடர்ந்தயலினப்படைகிடந்த
அரியகொந்திலவலத்தகச்சிறடியயர்ந்தாள். (௬௩)

கலங்கொளெஞ்சினர்தந்துணைக்கணவரைநாடி
விலங்கலன்னவான்பெரும்பிணக்குப்பையின்மேலார்
அலங்கலோதியாருந்துணைபிரிந்துநின்றயரும்
பொலங்கொண்மாமயில்வரையின்மேற்றிரிவனபோன்றார். (௬௪)

சிலவர்தம்பெருங்கணவர்தஞ்செருத்தொழிற்சினத்தால்
பலரும்வாய்மடித்துயிர்துறந்தார்களைப்பார்த்தார்
அலகில்வெள்ளெயிற்றுவிதழ்மறைத்துளதயலாள்
கலவியின்குறிகாண்டுமென்றுமெனக்கனன்றார். (௬௫)

கவசெய்வன்றலையிழந்ததர்கண்பரைகளுகி
அவசமெய்தியமடந்தையருருத்தெரிந்தறியார்
துவசமன்னதங்கூருகிர்ப்பெருங்குறிதோண்மேல்
கவசநீங்கினர்க்கண்டுகண்டாருயிர்கழித்தார். (௬௬)

மாரியாக்கியகண்ணியர்கணவர்தம்வயிரப்
போரியாக்கைகளுடியப்பொருகளம்புகுந்தார்
பேரியாக்கையின்பிணப்பெருங்குன்றிடைப்பிறந்த
சோரியாற்றிடையழுந்தினரின்னுயிர்துறந்தார். (௬௭)

வேறு.

அனும தூமாட்ச யுத்தம்.

வதைநின்றுயர்தாணெடுமொருதியும்
புகையின்பொருகண்ணவனும்பொருவார்

௬௨. குநரி - குள்ளநரி, நரியின்பேதம்.

மிகைசென்றிலர்பின்றிலர்வென்றிலால்
சிலைசென்றுதிரம்பியதீயுமிழ்வார். (௬௮)

அய்யஞ்சழல்வாளியழற்கொடியோன்
மெய்யஞ்சனைகான்முனைமேனியின்மேல்
வய்யஞ்சிலையாறுவழங்கினனால்
மொய்யஞ்சனமேகமுனிந்தனையான். (௬௯)

பாழிப்புயமம்புருவப்படலும்
வீழிக்கனிபோற்புனல்வீசவெகுண்
டாழிப்பெருந்தேரையழித்தனனால்
ஊழிப்பெயர்கார்திகரொண்டிறலான். (௭0)

சில்லிப்பொருதேர்சிதையச்சிலையோ
டெல்லிற்பொலிவிண்ணின்விசைத்தெழுவான்
வில்லிற்றிலக்குவன்வெங்கணையால்
புல்லித்தரையிட்டனனேர்பொருவான். (௭௧)

மலையிற்பெரியானுடன்மண்ணிடையிட்
டுலறக்கடாவியகால்கொடுதைத்
தலையிற்பருகிப்பகுவாயனல்கால்
தலைகைக்கொடெறிந்துதணிந்தனனால். (௭௨)

அங்கதமாபக்கயுத்தம்.

மாபக்கனுமங்கதனும்மலைவார்
தீபத்தினெரிந்தெழுசெங்கணினர்
கோபத்தினர்கொல்லவினைந்தடர்வார்
தாபத்தினுயிர்ப்பர்தொடர்ந்தனரால். (௭௩)

ஐம்பத்தொருவெங்கணையங்கதன்மா
மொய்ம்பிற்புகவுய்த்தனன்மொய்தொழிலான்
வெம்பிக்களியோடுவிளிந்தெழுதிண்
கம்பக்கரியுண்டைகடாயெனவே. (௭௪)

ஊரோடுமெடுத்தொளியோனையுதம்
காரோடுநிகர்க்கதநாகமனான்
தேரோடுமெடுத்துயர்திண்கையினால்
பாரோடுமெடுத்தெறிபண்பிடையே. (௭௫)

வில்லைச்செலவீசிவிழுந்தழியும்
எல்லிற்பொலிதேரிடைநின்றிழியாச்
சொல்லிற்பிழையாதொருசூலமவன்
மல்லிற்பொலிமார்பின்வழங்கினனால். (௭௬)

௭௬. எல்லி - சூரியன்.

குலம்மெனினன்றிதுதொல்லைவரும்
காலம்மெனவன்றுகருத்தினனாய்
ஞாலம்முடையானதுகாமறவோர்
ஆலமுடையம்பினைறுத்தனனால். (௭௭)

உளக்தானிலையாதமுனுற்றுத்தவாக்
கிளர்ந்தானையிரண்டுகிழித்துணையாப்
பிளர்த்தானுலகேழினொடேழுபெயர்க்
தளர்ந்தான்வலிகன்றெனவங்கதனே. (௭௮)

மாலியும் நீலனும் பொருதல்.

மாமாலியுநீலனும்வானவர்தம்
கோமானொடுதானவர்கோனிகலே
ஆமாறுமலைந்தனரென்றிமையோர்
பூமாரிபொழிந்து புகழ்ந்தனரால். (௭௯)

கல்லொன்றுகடாவியகாலையவன்
வில்லொன்றிருகூறுவிளைத்திடலும்
செல்லொன்றியவாளொடுதேரினனாய்
நில்லென்றிடைசென்றுநெருக்கினனால். (௮0)

அற்றத்தொழிலெய்தலுமக்கணனே
மற்றப்புறநின்றவன்வந்தணுகாக்
கொற்றக்குமுதன்னொருகுன்றுகொளா
எற்றப்பொருதேர்பொடியெய்தியதால். (௮௧)

தானார்மாநீலனெடுத்தனதன்
வானான்மடிவித்துவலித்தடர்வான்
தோளாசறவாளிதுரந்தனனால்
மீளாவிளைநூறும்விடைக்கிளையான். (௮௨)

மின்போன்மிளிர்வாளொடுதோள்விழவும்
தன்போர்தவிராதவனைச்சலியா
என்போலியர்போரெனினன்றிதுவோர்
புன்போரெனநின்றயல்போயினனால். (௮௩)

சீர்வீரையனுனெதிர்நேர்வாலும்
பேர்வீரனைவாசிபிடித்தவனை
யார்வீரதையின்னசெய்தார்களெனுப்
போர்வீரருவந்துபுகழ்ந்தனரால். (௮௪)

வேள்விப்பகையோடுவெகுண்டடரும்
தோள்வித்தகனங்கொர்சுடர்க்கணையால்

௮௧. அற்று - அப்போது.

வாழ்வித்தனையென்றவன்மார்பகலம்
போழ்வித்தனனுருயிர்போயினனல். (அ௬)

மல்லற்றடமார்பன்வடிக்கணையால்
எல்லுற்றுயர்வேள்வியிரும்பகைஞன்
வில்லற்றதுதேரொடுமேனிமிரும்
கல்லற்றகழுத்தொடுகால்களொடும். (அகூ)

தன்றாதையைமுன்புதடுத்தொருநாள்
வென்றானைவிலங்கலின்மேனியனைப்
பின்றாதவலத்துயர்பெற்றியனைக்
கொன்றான்கவியின்குலமானுடையான். (அஎ)

இடவன்றனிவெஞ்சமமுற்றெதிரும்
விடவெங்கணையிற்றவன்விண்ணதிரக்
கடவுங்கதழ்தேர்கடவாளிஞெடும்
படவங்கொருகுன்றுபடர்த்தினனல். (அஅ)

திண்டோழியச்சிலைவிட்டொருதன்
தண்டோடுமிழிந்துதலத்தினனய்
உண்டோவுயிரொன்னவுருத்துருமோ
டெண்டோளனுமுட்கிடவெற்றினனல். (அகூ)

அடியுண்டவனுவிகுலைந்தயரா
ஆடியுண்டமலைக்குவடிற்றனபோல்
முடியும்மெனுமெல்லையின்முந்தினனல்
செடியன்குறியன்னெனுநீர்மையினன். (கூ0)

இடைத்தானிகன்மாருதியைக்கிளர்வான்
அடைத்தானெனமீதுயராக்கையினைப்
படைத்தானொடும்புகழ்பைங்கழலான்
புடைத்தானவன்மார்புபொடிச்சிதற. (கூக)

எற்றிப்பெயர்வானையிடக்கையினல்
பற்றிக்கிளர்தண்டுபறித்தெறியா
வெற்றிக்கிளர்கைக்கொடுமெய்வலிபோய்
முற்றித்தனிகுத்தமுடித்தனனல். (கூ௨)

காத்தோர்மரம்வீசுறுகைக்கதழ்வன்
போத்தோர்புலிபோற்பனசன்புரளக்
கோத்தோடகெடுங்குருதிப்புனறின்
மாத்தோமரமார்பின்வழங்கினனல். (கூ௩)

கார்மேவினனோடன்மேவினனோ
பார்மேவினனோபகன்மேவினனோ

கூ0. இடியுண்டமலை - அடியிற்றுடையப்பட்டமலை.

ஆர்மேவினனேவினவென்றறியாம்
போர்மேவினன்வாசிபெறும்பொறியான். (௯௪)

நாறுயிரகோடிகொலன்றகொலென்
றாறுயிரவானவரும்மறிவின்
தேறுவகைநின்றுதிரிந்தனதால்
பாறுடகளத்தொருபாய்பரியே. (௯௫)

கண்ணிற்கடுகும்மனனிற்கடுகும்
விண்ணிற்படர்கால்வின்மிகக்கடுகும்
உண்ணிற்குமெனிற்புறனிற்குமுளாய்
மண்ணிற்றிரியாதவயப்பரியே. (௯௬)

மாப்புண்டரவாசியின்வட்டணைமேல்
ஆப்புண்டவனுந்தவனாயிலால்
பூப்புண்டரவாவிபுறத்தகலக்
கோப்புண்டனவானரவெங்குழுவே. (௯௭)

நாறும்மிருநாறொடிப்பளவில்
ஏறுந்நதிவேலினிறைப்பொழுதில்
சீறுங்கவிசேனைசிதைக்குமெனு
ஆறுந்திறலும்பருமஞ்சினரால். (௯௮)

தோற்றும்முருவொன்றெனவேதணியாக்
கூற்றின்கொலையாலுழல்கொள்கையினை
ஏற்றுஞ்சிலையாண்மையிலக்குவன்வெங்
காற்றின்படைகொண்டுகடர்தனனால். (௯௯)

குலையப்பொருளுலனெடுங்கொலையும்
உலைவுற்றிலவுய்த்தலுமோய்விலனுண்
டலையற்றகவுந்தரையுற்றிலனால்
இலையப்பரிகோளினிருக்கையினான். (௧00)

இன்றாதியமுண்டெனவின்னகைபால்
சென்றாதியதும்பிகடென்றிசையான்
வன்றாதருமெய்தினர்வஞ்சனையான்
றன்றாதருமெய்தினர்தன்னகர்வாய். (௧0௧)

ஏகித்தனிமன்னனிருந்துழிபுக்
கோகைப்பொருளின்றெனவுள்ளழியா
வேகத்தடல்வீரர்விளிந்தவெலாம்
சோகத்தொடிறைஞ்சினர்சொல்லினரால். (௧0௨)

௧௧-வது. படைத்தலைவர்வதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௧௫௪.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

## இருபதாவது

## மகரக்கண்ணன்வதைப்படலம்.



மகரக்கண்ணன் தன்னைப்போவா வேண்டுதல்.

சொன்னாவர்சொற்செவிபாற்றொடர்வோன்
இன்னாதமனத்தனிலங்கையர்கோன்
வெந்நாகவுயிர்ப்பினன்விம்மினனால்
அன்னானிலைகண்டயனின்றறைவான். (௧)

முந்தேயெனதாதையைமொய்யமர்வாய்
அந்தோவுயிருண்டவனாருயிர்மேல்
உந்தாயெனையாதுமுணர்ந்திலையோ
எந்தாயொருநீயிடர்கூருதியோ. (௨)

யானேசெலவெண்ணுவெனெய்தவவன்
தானோர்வதுநீதெனவேதனிவேன்
வானேநிலனேமுதன்மற்றுமெலாம்
கோனேயெனைவெல்வதொர்கொள்கையதோ. (௩)

வேறு.

அருந்துயர்க்கடலுளாவென்னம்மனையழுதகண்ணன்
பெருந்திருக்கழித்தவாற்றான்கணவனைக்கொன்றபேர்ந்தோன்
கருந்தலைக்கலத்தினல்லாற்கடனதுகழியேனென்றான்
பருந்தினுக்கினியவேலாயின்னருள்பணித்தியென்றான். (௪)

இராவணன் மகரக்கண்ணனை அனுப்புதல்.

அவ்வுரைமகரக்கண்ணனறைதலுமரக்கனைய
செவ்விதுசேறிசென்றுன்பழம்பகைதீர்த்தியென்றான்
வெவ்வழியவனும்பெற்றவிடையினன்றேர்மேற்கொண்டான்
வவ்வியவில்லான்போனான்வாம்பெற்றுவளர்ந்ததோளான். (௫)

தன்னுடைச்சேனைகோடியைந்துடன்றழுவத்தானை
மன்னுடைச்சேனைவெள்ளமோரைந்துமழையிற்பொங்கிப்
பின்னுடைத்தாகப்பேரிக்கடல்படப்பெயர்ந்ததுனி
பொன்னுடைச்சிமையத்துச்சிக்குச்சியும்புதையப்போனான். (௬)

சோணிதக்கண்ணனோடுஞ்சிங்கனுந்துரகத்திண்டேர்த்
தாண்முதற்காவல்பூண்டுசெல்கெனத்தக்கதென்று
வாண்முதற்றானையோடுமனைவருந்தொடரப்போனான்
காண்முதற்றிங்கடன்னைத்தழுவியவனையகண்பான். (௭)

---

௩. வானே நிலனே முதல் - பஞ்சபூதம் முதலியன.

ல்பெரும்பதாகைபற்றிமீமிசைதொடுத்தபந்தர்
ல்லவன்சடரோண்கற்றைமுற்றியகீழலியத்
தொல்சினயானையங்கைவிலாழிகீர்த்துவலைதுற்றச்
செல்பெருங்கவியின்சேனையமர்த்தொழிற்சிரமந்தீர்ந்த. (அ)

மூழங்கினயானைவாசியொலித்தனமூரசின்பண்ணை
தழங்கினவயவரார்த்தாரென்பதோர்முறைமைதன்னை
வழங்கினபதலையோதையண்டத்தின்வரம்பின்காறும்
புழுங்கினவுயிர்கள்யாண்டுங்கால்புகப்புரையின்றாக. (கு)

அசுரவானர யுத்தம்.

வெய்தினினூற்றதானைமுறைவிடாதுழில்வெம்போர்
செய்தனசெருக்கிச்சென்றுநெருக்கினர்தலைவர்சேர்த்தி
கய்யொடுகைகளூற்றுக்கலந்தனர்கல்லும்வில்லும்
எய்தனவெறிந்தயானையீர்த்தனகோத்தசோரி. (கo)

வானரவீரர்விட்டமலைகளையரக்கர்வவ்வி
மீனெடுமேகஞ்சிந்தவிசைத்தனர்மீட்டும்வீசக்
கானகமிடியுண்டென்னக்கவிக்குலமடியக்கவ்விப்
போனகநுகரும்பேய்கள்வாய்ப்புறம்புடைப்பாடார்ப்ப. (கக)

மய்ந்திறவரக்கர்வன்கைவயிரவாள்வலியின்வாங்கி
மெய்ந்நிறத்தெறிந்துகொல்வர்வானரவீரர்வீரர்
கய்ந்நிறத்தெடுத்தகல்லுமானுந்தங்கரத்தின்வாங்கி
மொய்ந்நிறத்தெறிவரெற்றிமுருக்குவரரக்கர்முன்பர். (கஉ)

வண்டுலாவலங்கன்மார்பன்மகரக்கணமகாதேபெறன்னத்
திண்டிறலரக்கன்கொற்றப்பொற்றடஞ்சில்லித்தேரைத்
தண்டலைமருதவைப்பிற்கங்கைகீர்தழுவுநாட்டுக்
கொண்டன்மேலோட்டிச்சென்றான்குரக்கினப்படையைக்கொன்றான். (கங)

இந்திரன்பகைஞனேகொலென்பதோரச்சமெய்தித்
தந்திரமிரிந்துசிந்தப்படைப்பெருந்தலைவர்தாக்கி
எந்திரமெறிந்தவென்னவேவுண்டுபுரண்டாரெய்திச்
சுந்தரத்தோளினானைநோக்கிநின்றினையசொன்னான். (கச)

என்னுடைத்தாதைதன்னையின்னுயிருண்டாயென்று
முன்னுடைத்தாயதீயமுழுப்பகைமூவர்க்கின்றி
நின்னுடைத்தாயதன்றேயின்றதுசிமிர்வனென்றான்
பொன்னுடைத்தாதைவண்டுகுடைக்துன்னும்பொலன்பொற்றாரான். (கரு)

நீயவன்பகர்ந்தமாற்றஞ்சேவகன்றெரியக்கேட்டான்
நீய்கான்புதல்வன்கொல்லாநெம்பகைதிமிரவந்தாய்

கக. போனகம் - உணவு.

யுயதுசடனேயன்றேவாண்பிறந்தமைந்தார்க்கைய
ரயதுசொன்னுயென்றுனிசையினுக்கிசைந்ததோளான். (௧௬)

மகரக்கண்ணன் போர்புரிதல்.

டருமிடித்தென்னவின்னுனொலிபடுத்துன்றேடெர்தை
செருமுடித்தென்கணின்றசினமுடித்தமைவெனென்னுக்
கருமுடித்தமைந்தமேகங்கான்முடித்தெழுந்தகாலம்
பெருமுடிக்கிரியிற்பெய்யுந்தாரைபோற்பகழிபெய்தான். (௧௭)

அம்புயக்கண்ணன்கண்டத்தாயிரம்பகழிநாட்டித்
தம்பிதன்கவசமீதேயிராட்டிச்சாயகங்கடாக்கி
வெம்பிகலநமன்மீதேதவெங்கணைமாரிவித்தி
உம்பர்தமுலகமுற்றுஞ்சரங்களாய்மூடியுய்த்தான். (௧௮)

சொரிந்தனபகழியெல்லாஞ்சடர்க்கடுங்கணைகடுவி
அரிந்தனனகற்றிமற்றையாண்டகையலங்கலாகத்
தெரிந்தொருபகழிபாயவெய்தனனிராமனேவ
சொரிந்தெழுபுருவத்தான்றன்னிறத்துற்றுநின்றதன்றே. (௧௯)

ஏவுண்டுதனக்கமெய்தாவிரத்தகப்பரிதியின்ற
பூவுண்டகண்ணன்வாயிற்புகையுண்டதுமிழ்வான்போல்வான்
தேவுண்டகீர்த்தியண்ணறிருவுண்டகவசஞ்சோரத்
தூவுண்டவயிரவாளியாயிரந்தூவியார்த்தான். (௨௦)

அன்னதுகண்டவானோரதிசயமுற்றுராழி
மன்னனுமுறுவலெய்திவாயம்போராறுவாங்கிப்
பொன்னெடுந்தடந்தேர்பூண்டபுரவியின்சூரங்கள்போக்கி
வின்னடுவறத்துப்பாகன்றலையையுமிலத்துவீழ்த்தான். (௨௧)

மகரக்கண்ணன் தீமழையும் காற்றும் வரச்செய்தல்.

மார்பிடைநின்றவாளிவாயிடைவெயினின்வாரும்
சோரியன்விசும்பினூடோரிமைப்பிடைத்தோன்றுகின்றான்
காருருமேறுங்காற்றுங்கனலியுங்கடைநாள்வையம்
பேர்வுறுகாலமென்னப்பெருக்கினன்றவத்திற்பெற்றான். (௨௨)

உருமுறையாகத்தகோடியுதிர்த்தனவூழிநாளின்
இருமுறைகாற்றுச்சீறியெழுந்துவிழுந்தவெங்கும்
கருமுறைநிறைந்தமேகங்கான்றனகல்லின்மாரி
பொருமுறைமயங்கிச்சுற்றுமிரியலிற்கவிகள்போன. (௨௩)

போயினதிசைகளெங்கும்புகையொடுநெருப்பும்போர்ப்பத்
தீயினமினையசெல்லுமாயமாமாரிசிந்த

௧௭. பெருமுடி — மேருவின் சிகரம்.

ஆயிரகோடிமேலுமவிர்தனகணைகளையன்
மாயமோவரமோவென்றான்வீடணன்வணங்கிச்சொன்னான். (௨௪)

நோற்றுடைத்தவத்தினேன்மைநோக்கினர்கருணைநோக்கிக்
காற்றுடைச்செல்வன்றானுமழையுடைக்கடவுடானும்
மாற்றலர்க்கதெய்வவரத்தினல்வந்தென்றான்
ஆற்றிகழ்க்கமலக்கண்ணனகற்றுவெனொடியினென்றான். (௨௫)

இராமன் அக்கினியாத்திர வாயுவாத்திரங்களால் தீமழையாதியதடுத்தல்.

காலவன்படையுந்தெய்வக்கடலவன்படையுஞ்சாலக்
கோலவன்சிலையிற்கோத்துக்கொடுங்கணையோடுங்கூட்டி
மேலவன்றுரத்தலோடும்விசும்பினின்றெரிந்துவெய்தின்
மாலிருங்கடலின்வீழ்ந்துமறைந்தனமழையுங்காற்றும். (௨௬)

மகரக்கண்ணன் மாயப்போர் புரிதல்.

அத்துணையரக்கனுக்கியந்தரவானமெல்லாம்
ஒத்தனவுருவேயாகித்தான்மறைந்தொளித்துச்சூலப்
பத்திகள்கோடிகோடிபரப்பினனதனைப்பார்த்த
வித்தகனொருவன்செய்தவினையமென்றினையசொன்னான். (௨௭)

மாயத்தால்வருத்தான்யாண்டும்வரம்பிலாவுருவத்தானைத்
தேயத்தானென்னுவண்ணங்கரந்தனன்றெரிந்திலாதான்
காயத்தாவினையனென்றுவினையலாங்கருத்தனல்லன்
தீயொத்தான்றிறத்தினென்னைசெயலெனச்சிந்தைநொந்தான். (௨௮)

இராமன் மகரக்கண்ணன் தலையையறுத்தல்.

அம்பின்வாயாறுசோருமரக்கன்றனருளில்யாக்கை
உம்பரிற்பரப்பித்தான்வேறொளித்தனனென்னவோர்வான்
செம்புனற்சுவடுநோக்கியிதுநெறியென்றுதேவர்
தம்பிரான்பகழிதுண்டத்தலையற்றுத்தலத்தனானான். (௨௯)

மாயைநீக்கம்.

அயில்படைத்துருமிற்செல்லுமம்பொடுமரக்கன்யாக்கை
புயல்படக்குருதிவீசிப்படியிடைப்புரடலோடும்
வெயில்கெடுத்திருளையோட்டுங்காலத்தின்வினைவிளைவும்
துயில்கெடக்கனவுமாய்ந்தாலொத்ததுசூழ்ந்தமாயை. (௩௦)

இரத்தாட்சன்யுத்தம்.

குருதியின்கண்ணன்வண்ணக்கொடிநெடுந்தேரன்கோடைப்
பரிதியினைவெட்டோன்றம்பகஞ்சுடர்மேகப்பண்பன்

௨௯. தம்பிரான் - தலைவன், இது சைவ சம்பிரதாயச்சொல்.

எரிகணைசிந்திக்காலினெய்தினான்றன்னோடேற்றான்
விரிகடற்றட்டான்கொல்லன்வெஞ்சினத்தச்சன்வெய்யோன். (௧௧)

அன்றவனுமவன்றணலங்கற்றோளிலங்கவாங்கி
ஒன்றலபகழிமாரியூழித்தீயென்னவுய்த்தான்
நின்றவனெடியதாங்கோர்தருவினாலகலநீக்கிச்
சென்றனன்கரியின்வாரிக்கெதிர்பட்டசியமன்னான். (௧௨)

கரத்தினிற்றிரியாநின்றமரத்தினைக்கண்டமாகச்
சரத்தினிற்றுணித்துவீழ்த்ததறுகணான்றன்னைநோக்கி
உரத்தினைச்சுருக்கிப்பாரினொடுங்கினான்றன்னையொப்பான்
சிரத்தினிற்குதித்தான்றேவர்திசைமுகங்கிழியவார்த்தார். (௧௩)

எரியும்வெங்குன்றினும்பரிந்திரவில்லிட்டென்னப்
பெரியவன்றலைமேனின்றபேரொழிலானன்சோரி
சொரியவன்கண்ணின்மூக்கிற்செவிகளின்மூளைதூங்க
நெரியவன்றலையைக்காலாலுதைத்துமாநிலத்திலிட்டான். (௧௪)

சிங்கபானசயுத்தம்.

அங்கவனுலந்தலோடுமழற்கொழுந்தொழுகுங்கண்ணான்
சிங்கன்வெங்கணையன்வில்லன்றுரணிதேரின்மேலான்
எங்கடாபோதியென்னுவெய்தினனெதிரிலாத
பங்கமின்மேருவாற்றற்பனசன்வந்திடையிற்பாய்ந்தான். (௧௫)

பாய்ந்தவன்றோளின்மார்பின்பல்லங்கணல்லபண்போ
டாய்ந்தனவசனிபோலவையிரண்டழுந்தவெய்தான்
காய்ந்தனன்கனவிசெய்யாற்கனன்றதுபோலக்காந்தி
ஏய்ந்தெழுதேரினோடுமிமைப்பிடையெடுத்துக்கொண்டான். (௧௬)

தேரொடுமெடுத்தலோடுநிலத்திடைக்குதித்தசெங்கண்
மேருவிற்றோற்றத்தான்றனுச்சிமேலதனைவீசப்
பாரிடைவிழுதலோடுந்தானவனும்பர்பாயச்
சோரியுமிருஞ்சோரத்துறைத்தனன்வயிரக்கோளான். (௧௭)

தராதலவேந்தன்மைந்தர்சரத்தினுங்கவியின்றானை
மராமரமலையென்றின்னவழங்கவும்வனைந்ததானை
பராவரும்வெள்ளம்பத்தும்பட்டனபட்டிலாதார்
இராவணன்றூதர்போனார்படைக்கலமெடுத்திலாதார். (௧௮)

௨௦-வது. மகரக்கண்ணன் வதைப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௨௧௧௨.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளே சரணம்.

௧௧. விரிகடற்றட்டான் - ஏன். கொல்லன் - கோபமுடையவன். அச்சன் - அச்சமுள்ளவன்.

இருபத்தோராவது

# பிரமாத்திரப்படலம்.

———[O]———

கரன்மகன்பட்டவாறுங்குருதியின்கண்ணன்காவற்
சிரனெரிந்துக்கவாறுஞ்சிங்கனிற்சிறுஞ்சேனைப்
பரமினியுலகுக்காகாதென்பதும்பகரக்கேட்டான்
வரன்முறைதவிர்த்தான்வல்லைதருதிரென்மகனையென்றான். (௧)

கூயினனுர்த்தையென்றார்குன்றெனக்குவிந்ததோளான்
போயினதிருதர்யாரும்பொன்றினர்போலுமென்றான்
ஏயினபின்னைமீள்வார்நீயலாதியாவரென்று
மேயதுசொன்னார்கேட்டான்றாதைபால்விரைவின்வந்தான். (௨)

வணங்கிநீயையகொய்தின்மாண்டனர்மக்களென்ன
உணங்கலையின்றுகாண்டிபுலப்பறுகுரங்கைநீக்கிப்
பிணங்களின்குப்பைமற்றையாருயிர்பிரிந்தயாக்கை
கணக்குழைச்சிதைதானுமமரருங்காண்பரென்றான். (௩)

வலங்கொடுவணங்கிவான்செலாயிரமடங்கல்பூண்ட
பொலங்கொடிநெடுந்தேரேறிப்போர்ப்பணைமுழங்கப்போனான்
அலங்கல்வானரக்கர்தானையறுபதுவெள்ளயானைக்
குலங்களுந்தேருமாவுங்குழாங்கொளக்குழீஇயவன்றே. (௪)

கும்பிகைதிமிலைசண்டைகுறடுமாப்பேரிகொட்டும்
பம்பைதார்முரசங்கஞ்சம்பாண்டில்போர்ப்பணவந்துரி
கம்பலியுறுமைதக்கைகாடிகைதுடிவேய்கண்டை
அம்பலிகளுவையூமைசகடையோடார்த்தவன்றே. (௫)

யானைமேற்பறைசாலீட்டத்தறைமணியார்த்ததாழி
மானமாப்புரவிப்பொற்றார்மாக்கொடிக்கண்டைமானச்
சேனையோர்கழலுந்தாருஞ்சேடகப்புளகச்சில்வி
ஆனகத்தோடுவானையரியெனவலைந்தவன்றே. (௬)

சங்கொலிவயிரிஞ்ஞைசையாகுளிதழங்குகாளம்
பொங்கொலிவரிகண்பீலிபோரொலிவேயின்பொம்மல்
சிங்கத்தின்முழக்கம்வாசிச்சிரிப்புத்தேரிடிப்புத்திண்கைம்
மங்குலினதிர்வுவானமழையொடுமலைந்தவன்றே. (௭)

பண்டருகிளவிச்செவ்விப்பல்லியத்தொழுகுநீத்தேன்
கண்டினிற்குயின்றவீணைகரம்பொடுகமழுந்தேறல்
வண்டினிற்பொலியுகல்யாழ்வழியுறுகறவம்வானத்
தண்டர்தஞ்செவியினுண்ணுமமிழ்தெனலாயவன்றே. (௮)

க. வரன்முறை - நியாயவழி.

வில்லொலிவயவரார்க்கும்விளியொலிதெழிப்பினுங்கும்
ஒல்லொலிவீரர்பேசுமுரையொலியுரப்பிற்றோன்றும்
செல்லொலிதிரடோள்கொட்டுஞ்சேணொலிநிலத்திற்செல்லும்
கல்லொலிதுரப்பமற்றைக்கடலொலிகரந்ததன்றே. (௯)

காற்கடலனையதானைநடந்திடக்கிடந்தபாரின்
மேற்கடந்தெழுந்ததுளிவிசும்பின்மேற்கொழுந்துவீச
மாற்கடற்சேனைகாணும்வானவர்மகளிர்மானப்
பாற்கடலனையவாட்கண்பனிக்கடல்படைத்ததன்றே. (௧௦)

ஆயிரகோடித்திண்டேரமரர்கோனகரமென்ன
மேயவர்சுற்றத்தானோர்கொற்றப்பொற்றேரின்மேலான்
தூயவர்சுடர்களெல்லாஞ்சுற்றுறநடுவட்டோன்றும்
காயகப்பரிதிபோன்றான்றேவரைநடுக்கங்கொண்டான். (௧௧)

இந்திரசித்துக் கிரவுஞ்சயூகம் வகுத்தல்.

சென்றுவெங்களத்தையெய்திச்சிறையொடுதுண்டஞ்செங்கண்
ஒன்றியகழுத்துமேனிகாலுகிர்வாலோடொப்பப்
பின்றலில்வெள்ளத்தானைமுறைபடப்பரப்பிப்பேழ்வாய்
அன்றிலினுருவதாயவணிவகுத்தமைத்துநின்றான். (௧௨)

புரந்தரன்செருவிற்றந்துபோயதுபுணரியேழும்
உரந்தவிர்த்துழிபேருங்காலத்துளொலிக்குமோதை
கரந்ததுவயிற்றுக்காலவலம்புரிஙகையின்வாங்கிச்
சிரம்பொதிர்த்தமராஞ்சலூதினன்றிசையுஞ்சிந்த. (௧௩)

சங்கத்தின்முழக்கங்கேட்டகவிப்பெருந்தானைதன்னிச்
சிங்கத்தினுதம்வர்துசெவிப்புகவிலங்குசிந்தி
எங்குற்றவென்னுவண்ணமிரிந்தனதிருந்தவ்வேழை
பங்கத்தன்மலைவிலன்னசிலையொலிபரப்பியார்த்தான். (௧௪)

கீண்டனசெவிகணெஞ்சங்கிழிந்தனகிளர்ந்துசெல்லா
மீண்டனகால்கள்கையின்விழுந்தனமானும்வெற்பும்
பூண்டனநடுக்கம்வாய்கள்புலர்ந்தனமயிரும்பொங்க
மாண்டனமன்றேவென்றவானரமெவையுமாதோ. (௧௫)

படைப்பெருந்தலைவர்நிற்கப்பல்பெருந்தானைவேலை
உடைப்புறுபுனலினோடவூழிநாளுவரியோதை
இடைத்திடமுழக்கியார்த்துக்கிளர்ந்ததுகிருதர்சேனை
அடைத்ததுதிசைகளெல்லாமன்னவர்களத்தானார். (௧௬)

---

௧௨. அன்றில் - கிரவுஞ்சம்.

செங்கதிர்ச்செல்வன்சேயுஞ்சமீரணன்சிறுவன்றானும்
அங்கதப்பெயரினானுமண்ணலுமிளையகோவும்
வெங்கதிர்மவுலிச்செங்கண்வீடணன்முதலாவீரர்
இங்கிவர்நின்றாரல்லதிரிந்ததுகுரங்கினீட்டம். (கஎ)

மாருதியலங்கன்மாலைமணியணிவயிரத்தோண்மேல்
வீரனும்வாலிசேய்தன்விறல்கெழுசிகரத்தோண்மேல்
ஆரியற்கிளையகோவுமேவநின்றமரர்வாழ்த்தி
வேரியம்பூவின்மாரிசொரிந்தனரிடைவிடாமை. (கஅ)

விடையின்மேற்கலுழன்றன்மேல்வில்லினர்விளங்குகின்ற
கடையின்மேலுயர்ந்தகாட்சியிருவருங்கடுத்தார்கண்ணுற்
றடையின்மேருவைபுஞ்சாய்க்குமநுமனங்கதனன்றன்னார்
தொடையின்மேன்மலர்ந்ததாரர்தோளின்மேற்றோன்றும்வீரர். (ககூ)

நீலனைமுதலாயுள்ளநெடும்படைத்தலைவர்நின்றார்
தாலமுமலையுமேந்தித்தாக்குவான்சமையுங்காலை
ஞாலமும்விசும்புங்காத்தானிலக்கிழவன்மைந்தன்
மேலமர்விளைவைபுன்னிவிலக்கினன்விளம்பலுற்றான். (உ0)

கடவுளர்படைகளும்மேல்வெய்யவன்றூர்ந்தகாலம்
தடையுளவல்லதாகுந்தன்மையிரல்வீர்தாக்கிற்
கிடையுளதெம்பானல்கிப்பின்னிறைநிற்றிரீண்டிப்
படையுளதனையேயின்றெம்விற்றொழில்பார்த்திரென்றான். (உக)

இராமவிலக்குமணர் அசுரசேனைகளை யழித்தல்.

அருண்முறையவருநின்றாராண்டகைவீரராழி
உருண்முறைத்தேரின்மாவினோடைமால்வரையினூழி
இருண்முறைநிருதர்தம்மேலேவினரிமைப்பிலோரும்
மருண்முறையெய்திற்றென்பர்சிலைவழங்கசனிமாரி. (உஉ)

மப்பதன்முன்னம்வந்தவிராக்கதவெள்ளந்தன்னைக்
குமைத்தொழில்புரிந்தவீரர்தனுத்தொழில்குறித்தின்றெம்மால்
அமைப்பதென்பிறிதொன்றுண்டோமேருவென்றமைந்தவில்லால்
உமைக்கொருபாகனெய்தபுரங்களினொருங்கிவீழ்ந்த. (உங)

தேரின்மேற்சிலையினின்றவிந்திரசித்தென்றோதும்
வீருங்வீரன்கண்டான்விழுந்தனவிழுந்தவென்னும்
பாரின்மேனொக்கலன்றேறப்பட்டனர்பட்டாரென்னும்
போரின்மேனொக்கலிவ்விருவரும்பொருதபூசல். (உச)

யானைபட்டனவோவென்றானிரதமிற்றனவோவென்றான்
மானமாவற்றவெல்லாமறிக்தொழிந்தனவோவென்றான்

கஅ அரியற்கிளையகோ - இலக்குமணன்.

ஏனைவாளரக்கர்யாருமில்லையோவெடுக்கவென்றான்
வானுயர்பிணத்தின்குப்பைமறைத்தலின்மயக்கமுற்றான். (௨௫)

செய்கின்றாரிருவர்வெம்போர்சிதைகின்றசேனைநோக்கின்
அய்யர்தானில்லாவெள்ளமறுபதுமவிகவென்று
வய்கின்றாரல்லராகின்வரிசிலைவலத்தான்மான
எய்கின்றாரல்லர்தெவ்விந்திரசாலமென்றான். (௨௬)

அம்பின்மாமழையைநோக்குமுதிரத்தினாற்றைநோக்கும்
உம்பரினளவுஞ்சென்றபிணக்குன்றினுயர்வைநோக்கும்
கொம்பறவுதிர்ந்தமுத்தின்குப்பையைநோக்குங்கொன்ற
தும்பியைநோக்கும்வீரர்சுந்தரத்தோளைநோக்கும் (௨௭)

மலைகளைநோக்குமற்றவானுறக்குவிந்தவன்கட்
டலைகளைநோக்கும்வீரர்சரங்களைநோக்குந்தாக்கி
உலைகொள்வெம்பொறியினுக்கபடைக்கலத்தொழுக்கைநோக்கும்
சிலைகளைநோக்குநாணேற்றிடியினைச்செவியினோக்கும். (௨௮)

ஆயிரந்தேரையாடலானையையலங்கன்மாவை
ஆயிரந்தலையையாழிப்படைகளையறுத்துமப்பால்
போயினபகழிவேகத்தன்மையைப்புரிந்துநோக்கும்
பாயும்வெம்பகழிக்கொன்றுங்கணக்கிலாப்பரப்பைப்பார்க்கும். (௨௯)

அறுபதுவெள்ளத்தாயவரக்கர்தமாற்றற்கேற்ற
எறிவனவெய்வபெய்வவெற்றுறுபடைகள்யாவும்
பொறிவனம்வெந்தபோலச்சாம்பராய்ப்போவதல்லால்
செறிவனவில்லாவார்த்தைசித்தையாற்றெரியநோக்கும். (௩0)

வயிறலைத்தோடிவந்துகொழுநர்மேன்மகளிர்மாழ்கிக்
குயிறலைத்துக்கவென்னக்குழைகின்றகுழையைநோக்கும்
எயிறலைத்திடுக்கும்பேழ்வாய்த்தலையிலாவாக்கையீட்டம்
பயிறலைப்பறவைபாரிற்படிகலாப்படியைப்பார்க்கும். (௩௧)

அங்கதாரகந்தகோடியுளரொனுமனுமனென்பார்க்
கிங்கினியுலகமெல்லாமிடமிலைபோலுமென்னும்
எங்குமிம்மனிசரொன்பாரிருவரேகொல்லென்றுன்னும்
சிங்கவேறனையவீரர்கடுமையைத்தெரிகிலாதான். (௩௨)

ஆர்க்கின்றவமரர்தம்மைநோக்குமங்கவர்களள்ளித்
தூர்க்கின்றபூவைநோக்குந்துடிக்கின்றதோளைநோக்கும்
பார்க்கின்றதிசைகளெங்கும்படும்பிணப்பரப்பைப்பார்க்கும்
ஈர்க்கின்றகுருதியாற்றோடியானையின்பிணத்தைநோக்கும். (௩௩)

---

உஎ. உம்பர் - ஆகாயம் - தும்பி - யானை.

ஆயிரகோடித்தேருமரக்கருமொழியவல்லார்
மாயிருஞ்சேனையெல்லாமாய்ந்தவாகண்டும்வல்லைப்
போயினகுரங்குத்தானைபுகுந்திலதன்றேபொற்றேர்த்
தீயவன்றன்மேலுள்ளபயத்தினாற்கலக்கந்தீரா. (௧௪)

தளப்பருஞ்சேனைவெள்ளத்தறுபதுந்தலத்ததாக
வளப்பருந்தேரினுள்ளதாயிரகோடியாகத்
துளக்கமிலாற்றல்வீரர்பொருதபோர்த்தொழிலைநோக்கி
அளப்பருந்தானைக்கோட்டியஞ்சனைமதலையார்த்தான். (௧௫)

ஆரிடையநுமனார்த்தவார்கலியசனிகேளாத்
தேரிடைநின்றவீழ்ந்தார்சிலர்சிலர்படைகள்சிந்திப்
பாரிடையிழிந்துபோகப்பாரித்தார்பைம்பொனிஞ்சி
ஊரிடைநின்றவாருமுயிரினோடிரங்கான்றார். (௧௬)

அஞ்சினிர்போமினின்றோரார்ப்பொலிக்கிழியற்பாலிர்
வெஞ்சமம்விளைப்பதென்னோசீருமிவீரரோடு
துஞ்சினிர்போலுமன்றேயென்றவர்ச்சுளித்துநோக்கி
மஞ்சினிற்கரியமெய்யானிருவர்மேலொருவன்வந்தான். (௧௭)

அக்கணத்தார்த்துமண்டியாயிரகோடித்தேரும்
புக்கனநேமிப்பாடிற்கிழிந்தனபுவனமென்னத்
திக்கிடைநின்றயானைசிரம்பொதிறெறியச்சிந்தி
உக்கனவிசும்பின்மீன்களுதிர்ந்திடத்தேவருட்க. (௧௮)

வேறு.

இலக்குமணன் யாறெருவனே பொருகின்றேனெனல்.

மாற்றமொன்றிளையவன்வளைவிற்செங்கரத்
தேற்றினன்வணங்கிநின்றியம்புவானிகல்
ஆற்றினனரவுகொண்டசைப்பவாரமர்
தோற்றனனென்றுகொண்டுலகஞ்சொல்லுமால். (௧௯)

காக்கவுங்கிற்றிலன்காதனன்பரைப்
போக்கவுங்கிற்றிலனொருவன்போய்ப்பிணி
ஆக்கவுங்கிற்றிலன்வென்றியாருயிர்
நீக்கவுங்கிற்றிலனென்றுநின்றதால். (௨0)

இந்திரன்பகையெனுமிவனையென்சாம்
அந்தரத்தருந்தலையறுக்கலாதெனின்
வெந்தொழிற்செய்கையன்விருந்துமாய்மொடு
மைந்தரிற்கடையெனப்படுவன்வாழியாய். (௨௧)

௧௫. அஞ்சனைமதலை - அநுமன்

மின்னுடைமுன்னரிற்செறியினீர்மையான்
தன்னுடைச்சிரத்தையென்சாத்திற்றன்னினால்
பொன்னுடைவனைகழற்பொலன்பொற்றோளினாய்
என்னுடையடிமையுமிசையிற்றுமரோ. (௪௨)

நெடியனவுலகெலாங்கண்டுநிற்கவென்
அடுசரமிவன்றலையறுக்கலாதெனின்
முடியவொன்றுணர்த்துவெனுனக்குநான்முயல்
அடிமையின்பயனிகந்தறுவதாகென்றான். (௪௩)

வல்லவனவ்வுரைவழங்குமேல்வையுள்
அல்லனீங்கினமெனவமரரார்த்தனர்
எல்லையிலுலகமுமெவையுமார்த்தன
நல்லறமார்த்தனநமனுமார்த்தனன். (௪௪)

இராமன் நீயேபொருதியெனல்.

முறுவல்வாண்முகத்தினன்முளரிக்கண்ணனும்
அறிவைநீயடுவலென்றனைமதியாமெனின்
இறுதியுங்காவலுமியற்றுமீசரும்
வெறுவியர்வேறினிவிளைவதியாதென்றான். (௪௫)

சொல்லிதுகேட்டடிதொழுதுசுற்றிய
பல்பெருந்தேரொடுமரக்கர்பண்ணையைக்
கொல்வலிக்கன்னதுகாண்டிகொல்லென
ஒல்லையிலெழுந்தனனுவகையுள்ளத்தான். (௪௬)

அந்தணார்த்தனனசனியேறென
மங்குனின்றதிர்ந்தனவயவன்றேர்வரும்
சிங்கமூடுக்குறத்திருவினாயகன்
சங்கமொன்றொலித்ததுகடலுந்தன்னுற. (௪௭)

எழுமரச்சக்கரமீட்டிதோமரம்
முழுமுரட்டண்டுவேன்முசுண்டிமூவிலைக்
கழுவில்கப்பணங்கவண்கல்கன்னகம்
விழுமழைக்கிரட்டிவிட்டரக்கர்வீசினார். (௪௮)

இலக்குமணன் அசுரரைப் பொருதொழித்தல்.

மீனெலாம்விண்ணினின்றுருங்குவீழ்ந்தன
வானெலாமண்ணெலாமறைபவர்ந்தன
தானெலாந்துணிந்துபோய்த்தகர்ந்துசாய்ந்தன
வேனிலானனையவன்பகழிவெம்மையால். (௪௯)

௪௯. மீன் - நக்ஷத்திரம்.

ஆயிரந்தேரொருதொடையினச்சிறும்
பாய்பரிக்குலம்படும்பாகர்பொன்றுவர்
நாயகர்கெடுத்தலைதுமியுநாமறத்
தீயெழும்புகையெழுமுலகந்தீய்ந்தற. (௩௦)

அடியறுந்தேர்முரணுழியச்சறும்
வடிநெடுஞ்சிலையறும்வாசிமார்பறும்
கொடியறுங்குடையறுங்கொற்றவீரர்தம்
முடியறுமுரசறுமுகிலுஞ்சிந்துமால். (௩௧)

இன்னவோருறுப்பிலவையிவையதேர்பரி
மன்னவரிவருவர்படைஞர்மற்றுளோர்
என்னவோர்தன்மையுந்தெரிந்ததில்லையால்
சின்னபின்னங்களாய்மயங்கிச்சிந்தலால். (௩௨)

தந்தையர்தேரிடைத்தனயர்வன்றலை
வந்தனதாதையர்வயிரவான்சிரம்
சிந்தினகாதலர்தேரிற்சின்னமா
அந்தரத்தம்பொடுமெற்றெழுந்தன. (௩௩)

செம்பெருங்குருதியிற்றிகழ்ந்தசெங்கண்மீன்
கொம்பொடும்பாவையிற்றிரியுங்கொட்பெனத்
தும்பையின்றொடையலார்தடக்கைதுணிவாங்
கம்பொடுந்துணிந்தனசிலையொடற்றன. (௩௪)

தடிவனகொடுஞ்சரந்தன்னைத்தன்னுற
மடிவனகொடிகளுங்குடையுமற்றவும்
வெடிபடுகடனிகர்குருதிவெள்ளத்தில்
படிவனவொத்தனபறவைபன்மைய. (௩௫)

வேறு

சிந்துரங்களின்பருமமும்பகழியுந்தேரும்
குந்தவன்னெடுஞ்சிலைமுதற்படைகளுங்கொடியும்
இந்தனங்களாயிறந்தவர்விழிக்கனலிலங்க
வெந்தவெம்பிணம்விழுங்கினகழுதுகள்விரும்பி. (௩௬)

சில்லியூடறச்சிதறினசிலசிலகோத்த
வல்லியூடறமறிந்தனபுரவிகண்மறையப்
புல்லிமண்ணிடைப்புரண்டனசிலசிலபோரான்
வில்விசாதியொடும்படத்திரிந்தனவெறிய. (௩௭

அலங்குபன்மணிக்கதிரனகுருதியினழுந்த
விலங்குசெஞ்சுடர்விடுவனவளவின்றிமிடைந்த

௩௧. அக்கமும் என்னும் பாடம்.

குலங்கொள்வெய்யவுரமர்க்களத்தீயிடைக்குளித்த
இலங்கைமாநகர்மாளிகைநிகர்த்தனவிரதம். (௫௮)

இந்திரசித்துத்தனித்தல்.

ஆனகாலையினிராமனுமயின்முகப்பகழி
சோனைமாரியிற்சொரிந்தனனநுமனைத்தூண்டி
வானமானங்கண்மடிந்தெனத்தேரெலாமடிந்த
தானுந்தேருமேயாயினனிராவணன்றநயன். (௫௯)

பல்விலங்கொடுபுரவிகள்பூண்டதேர்ப்பரவை
வல்விலங்கல்போலரக்கர்தங்குழாத்தொடுமடிய
வில்விலங்கியவீரரைநோக்கினன்வெகுண்டான்
சொல்விலங்கலன்சொல்லினனிராவணன்றோன்றல். (௬௦)

இந்திரசித்து இராமவிலக்குமணர்களைப் பார்த்துரைத்தல்.

இருவிரென்றொடுபொருதிரோவன்றெனினேற்ற
ஒருவிர்வந்துயிர்தருதிரோவும்படையோடும்
பொருதுபொன்றுதல்புரிதிரோவுறுவதுபுகலும்
தருவலின்றுமக்கேற்றதொன்றெனச்சலித்தான். (௬௧)

இலக்குமணனிந்திரசித்தினை நின்னைக்கொல்ல யானே

சூளுரைத்துளேனெனல்.

வாளிற்றின்சிலைத்தொழிலினின்மல்லினின்மற்றை
ஆளுற்றெண்ணியபடைக்கலமெவற்றினுமமரில்
கோளுற்றான்றொடுகுறித்ததுசெய்துயிர்கொள்வான்
ஆளுற்றேனிதுசரதமென்றிலக்குவன்சொன்னான். (௬௨)

இந்திரசித்து இலக்குமணனைக்கொல்வேனெனல்.

முன்பிறந்தவன்றம்முனைமுறைதவிர்த்தனக்குப்
பின்பிறந்தவனுக்குவென்பின்பிறந்தோயை
முன்பிறந்தவனுக்குவனிதுமுடியேனேல்
என்பிறந்ததனுற்பயனிராவணற்கென்றான். (௬௩)

இந்திரசித்தின்சூளுரை.

இலக்குவன்னெனும்பெயருனக்கியைவதேயென்று
இலக்குவன்கணைக்காக்குவெனிதுபுகுந்திடையே
விலக்குவன்னெனவிடையவன்விலக்கினும்வீரம்
விலக்குவன்னினைக்காணுமுன்றமையனும்விழியால்.

இதன்பொருள், வன்கணைக்கு - (என்) வலிய அம்புக்கு, இலக்கு - எய்யுங்குறியாக, ஆக்குவென் - (உன்னைச்) செய்வேன், (ஆதலால்) இலக்குவனெ

னும் பெயர்-இலக்குவனெனச் சிறப்பித்துக்கூறும் பெயர், உனக்கியைவதே - உனக்குத்தக்கதே, என்று - என்று கூறி, இனி - இவ்வாறு யான் துணிந்த பின், விடையவன் - எங்கட்கு வேண்டிய வரங்களைத்தரும் இடபவாகனனாகிய சிவன், புகுந்திடையே - போர்க்கிடையே புகுந்து, விலங்கு உவனென - சிங்கவுருக்கொண்ட அத்திருமாலைப்போல, விலக்கினும் - என்போரைமறுத்தாலும், வினைவீரம் விலக்குவல் - இன்னினின்றும் வீரத்தை நீக்குவேன், உன்றமையனும் - உன்னை உயிரினும் மேலாகக்கொண்ட உன்னண்ணனும், விழியால் காணும் - கண்களால் அதைப் பார்ப்பான்.

னகரமூன்றும் விரித்தல். விலக்கென்பதில் ககரம் வலித்தல், இது காமடங்கலை யுணர்த்திற்று. இறைவனவ்வுருக்கொண்டு இரணியன் முதலிய இராக்கதர்குழுவைக் கொலைசெய்தானாகலின், காத்தலின்கன்மைபுரிகுநர் தன்னலம் துய்த்துப்பல்கலாற் படைத்தலையும், தீமைபுரிகுநர்துன்பந்துய்த்தழிதலால் அழித்தலையுந் தன்னுடைக்கிக்கொண்டு அவ்விருதொழிலுக்கு மிடைநிகரதாய் நிற்றலினாதனுடைய இறைவனை உவனென்று கட்டியும் தைத்தியர் காலனென்பவாகலின் அழித்தற்றரிய விடையவனுக் கவனை யுவமித்துக் கூறினன். இது தொழிலுவமை. தன்னுயிரினுஞ் சிறப்பாகக் கொண்டானென்பது உன் றமையனுமென்ற சொல்லாற்றலாற் போந்தபொருள். உம்மை சிறப்பு. காணுமென்றலை யமைந்திருக்க விழியாலெனவேண்டாது கூறியது நீ அதிகாயன் முதலிய போர்வீரரை வெற்றிகொண்டதைக் கண்டதெனத் தான்வேண்டி அவ்விழியின் சிறப்பைத் தோற்றுவித்தற்கு. வினை என்பது உருபுமயக்கம். (௧௪)

அறுபதாகியவெள்ளத்தினரக்கரையம்பால்
இறுவதாக்கியவிரண்டுவில்லிருங்கண்டிரங்க
மறுவதாக்கியவெழுபதுவெள்ளமுமான
வெறுவிதாக்குவெனுவகினைக்கணத்தினேர்வில்லால். (௧௫)

கும்பகன்னனென்றொருவனீரம்பிடைக்குறைத்த
தம்பியல்வனானிராவணன்மகனொருதமியேன்
எம்பிமாருக்குமென்சிறுதாதைக்குமிநவீர்
செம்புனீர்கொடுகடன்கழிப்பானின்றுதிர்க்கேன். (௧௬)

இந்திரசித்தினை இலக்குமணன் உங்களைவருத்தும் கடன் விபீடணன் செய்வானெனல்.

அரக்கரென்பதோர்பெயர்படைத்தவர்க்கெலாமடுத்த
புரக்குரன்கடன்செயவுளன்வீடணன்போந்தான்
கரக்குநர்க்கைக்குநீசெயக்கடவனகடன்கள்
இரக்கமுற்றுனக்கவன்செயுமென்றனனிளையோன். (௧௭)

### இந்திரசித்தின் பிரதாபயுத்தம்.

ஆனகாலையினயிலெயிற்றரக்கனெஞ்சழன்றான்
வானம்வையமுந்திசைகளும்யாவையுமறையப்
பானல்வேலையைப்பருகுவசுடர்முகப்பகழி
சோனைமாரியினிருமடிமும்மடிதூர்த்தான். (௬௮)

அங்கதன்றன்மேலாயிரமவற்றினுக்கிரட்டி
வெங்கண்மாருதிமேனிமேல்வேறுளவீரச்
சிங்கமன்னவராக்கைமேலுலப்பிலசெலுத்தி
எங்கும்வெங்கணையாக்கினனிராவணன்சிறுவன். (௬௯)

இளையமைந்தன்மேலிராமன்மேலிராவணிபகலில்
விளையும்வன்னெழிலிவானரவீரர்மேன்மெய்புற்
றுளையும்வெஞ்சரஞ்சொரிந்தனனுலகையொன்று
வளையமண்டிலப்பிறையெனநின்றதுவரிவில் (௭0)

பச்சிமத்தினுமுகத்தினுமருங்கினும்பகழி
உச்சிமுற்றியவெய்யவன்கதிரெனவுமிழக்
கச்சமுற்றவன்கைத்துணைக்கடுமையைக்காணூ
அச்சமுற்றனர்கண்புதைத்தொடுங்கினரமரர். (௭௧)

### இலக்குமணன் பிரதாபயுத்தம்.

மெய்யிற்பட்டனபடப்படாதனவெலாம்விலக்கித்
தெய்வப்பொற்கணைக்கத்துணைக்கத்துணைசெலுத்தி
அய்யற்காங்கிளங்கோளரியறிவிலானறைந்த
பொய்யிற்போம்படிபோக்கினன்கடிதினிற்புக்கான். (௭௨)

பிறகுநின்றனன்பெருந்தகையினைவலப்பிரியான்
அறமிதன்றெனவாக்கன்மேற்சார்தூர்த்தருளான்
இறவுகண்டிலரிருவருமொருவரையொருவர்
விரகின்வெந்தனவிசும்பிடைச்செறிந்தனவிசிகம். (௭௩)

மாடெரிந்தெழுந்திருவர்தங்கணைகளும்வழங்கக்
காடெரிந்தனகனவரையெரிந்தனகனக
வீடெரிந்தனவேலைகளெரிந்தனவிலங்கல்
ஊடெரிந்தனவூழியினெரிந்தனவுலகம். (௭௪)

படங்கொள்பாம்துணைதுறந்தவற்கிளையவன்பகழி
விடங்கொள்வெள்ளத்தின்மேலனவருவனவிலக்கி
இடங்கரேறனவெழுவலியரக்கன்றேரீர்க்கும்
மடங்கலையிருநூற்றைங்கூற்றின்வாய்மடுத்தான். (௭௫)

௭௪. ஊழியின் - பிரளயகாலத்திற்போல.

தோழிர்திடச்சேமத்தேர்பிறிதிலன்செறித்த
ஊழிர்திடத்தனிநின்றநிரவனைத்தான்
பாழித்ததுபுரமெனும்படியவன்பகையின்
ஊழிர்திடத்தார்த்தனன்கடுசரஞ்சொரிந்தான். (௭௬)

அற்றதேர்மிசைநின்றுபோரங்கதனலங்கற்
கொற்றத்தோளினுமிலக்குவன்புயத்தினுங்குளிக்க
முற்றவெண்ணிலாமுரட்கணைதூர்த்தனன்முரட்போர்
ஒற்றைச்சங்கெடுத்தூதினனுலகெலாமுலைய. (௭௭)

சங்கமூதியதசமுகன்றனிமகன்றரித்த
கங்கமார்பெருங்கவசமுமிற்றுடன்கழல
வெங்கொடுங்கணையையிரண்டேழுமெனவீசிச்
சிங்கவேறன்னவிலக்குவன்சிலையாணெறிந்தான். (௭௮)

கண்டகார்முகில்வண்ணனுங்கமலக்கண்களுழத்
துண்டவெண்பிறைநிலவெனமுறுவலுந்தோன்ற
அண்டமுண்டதன்வாயினாலார்மினென்றநன
விண்டதண்டமென்றுலைந்திடவார்த்தனர்வீரர். (௭௯)

இந்திரசித்து ஆகாயத்தில் மறைதலும், இலக்குமணன் பிரமாத்திரம்
விடுதற்குமுயறலும், இராமன் தடுத்தலும்.

கண்ணிமைப்பதன்முன்புபோய்விசும்பிடைக்கரந்தான்
அண்ணலுமற்றவனைக்கண்டிலனாகிப்
பண்ணவற்கிவன்பிழைக்கு மேற்படுக்குநாம்படையை
எண்ணமற்றிலையயன்படைதொடுப்பலென்றிசைத்தான். (௮௦)

ஆன்றவன்னதுபகறலுமறவனீமுனிந்தால்
ஈன்றவந்தனன்படைக்கலந்தொடுக்கவிவ்வுலக
மூன்றையுஞ்சுடுமொருவனுன்முடிகலதென்றான்
சான்றவன்னதுதவிர்ந்தனனுணர்வுடைத்தம்பி. (௮௧)

போர்கண்டதேவர்கள் இந்திரசித்தினைக்கண்டு நகைத்தல்.

மறைத்துபோய்நின்றவஞ்சனுமவருடைமனத்தை
அறிந்துதெய்வவான்படைக்கலத்தொடுப்பதற்கமைந்தான்
பிரிந்துபோவதேகருமமிப்பொழுதெனப்பெயர்ந்தான்
செறிந்ததேவர்களாவலங்கொட்டினர்சிரித்தார். (௮௨)

வானரர் ஆரவாரித்தல்.

செஞ்சரத்தொடுசெம்மழைவிசும்பின்மேற்செல்லா
மஞ்சன்மாமழையோவியமாமெனமாற

௮௧. செம்மழை-செக்கிறமான மேகம்போல. மஞ்சன்-வீரனுமிந்திரசித்து.

அஞ்சினனன்றனெனவறிந்தனரார்த்தார்
வெஞ்சினத்தருகளிப்பினர்வானரவீரர். (௮௩)

இந்திரசித்து இலங்கையுட்புகுதல்.

உடைந்தவானரச்சேனையுமோதநீருவரி
அடைந்ததாமெனவந்திரைத்தார்த்தெழுந்தாடித்
தொடர்ந்துசென்றதுகோற்றலன்யாவர்க்குந்தோன்றாக்
கடைந்தவேலைபோற்கலங்குறுமிலங்கையைக்கலந்தான். (௮௪)

எற்கொணான்முகன்படைக்கலமிவரென்மேல்விடாமுன்
முற்கொள்வேனெனுமுயற்சியன்மறைமுறைமொழிந்த
சொற்கொள்வேள்விபோய்த்தொடங்குவானமைந்தவன்றுணிவை
மற்கொடோளவருணர்ந்திலரவன்றிறமறந்தார். (௮௫)

அனுமனங்கதன்முனிவின்றிழிந்தனராகித்
தனுவும்வெங்கணைப்புட்டிலுங்கவசமுந்தடக்கைக்
கினியகோதையுந்துறந்தனரிருந்தனரிமையோர்
பனிமலர்த்தொகைபொழிந்தனர்வாழ்த்தொலிபரப்பி. (௮௬)

ஏற்பாடு.

ஆர்த்தசேனையினமலைபோய்விசும்பினையலைக்க
ஈர்த்ததேரொடுங்கடிதுசென்றனனன்றிரவி
தீர்த்தன்மேலவன்றிசைமுகன்படைக்கலஞ்செலுத்தப்
பார்க்கிலேன்முந்திப்படுவலென்பானெனப்பட்டான். (௮௭)

இராமன் விபீடணனை உணவுகொண்டுவர அனுப்புதல்.

இரவுநன்பகலும்பெருநொஞ்செருவியற்றி
உரவுநம்படைமெலிந்துளதருந்துதற்குணவு
வரவுதாழ்த்ததுவீடணவல்லையினேகித்
தரவுவேண்டினெனென்றனன்றாமரைக்கண்ணன். (௮௮)

இன்னதேகடிதியற்றுவெனெனத்தொழுதெழுந்தான்
பொன்னின்மோலியன்வீடணன்றமரொடும்போனான்
கன்னலொன்றிலோர்காவினின்வேலையைக்கடந்தான்
அன்னவேலையினிராமனிளையவற்குரைத்தான். (௮௯)

சேனைகாவல்நின்னதென இராமனிலக்குமணற்குரைத்து அந்திரபூசைக்கேகுதல்.

தெய்வவான்பெரும்படைகட்குவான்முறைதிருந்து
மெய்கொள்பூசனையியற்றினம்விடுமிதுவிதியால்
ஐயநானிவையாற்றினன்வருவதோரளவும்
கைகொள்சேனையைக்காவெனப்போர்க்களங்கடந்தான். (௯௦)

---

௮௮. தாழ்த்தல் - தாமதித்தல்.

இந்திரசித்து இராவணனிடம் போரில் நிகழ்ந்தவை யுரைத்தல்.

தந்தையைக்கண்டுபுகுந்துளதன்மையுந்தன்மேல்
முந்தைநான்முகன்படைக்கலந்தொடுக்குற்றமுறையும்
சிந்தையுட்புகச்செப்பினனனையவன்றிகைத்தான்
எந்தையென்னினிச்செயத் தக்கதிசையெனவிசைத்தான். (௧௧)

வசந்சனையாகப்பிரமாத்திரம் விடுதலே தகுதியென

இந்திரசித்துஇராவணனிடங் கூறுதல்.

தன்னைக்கொல்வதுதுணிவரேற்றனக்கதுதகுமேல்
முன்னர்க்கொல்லியமுயல்கவென்றறிஞரேமொழிந்தார்
அன்னப்போரவாறிவரும்வகைமறைந்தயன்றன்
வென்னப்போர்ப்படைவிடுதலேகலமிதுவிதியால். (௧௨)

தொடுக்கின்றேனென்பதுணர்வரேலப்படைதொடுத்தே
தடுப்பர்காண்பரேற்கொல்லவும்வலத்தரத்தவத்தோர்
இடுக்கொன்றாகின்றதில்லைநல்வேள்வியையியற்றி
முடிப்பலன்னவர்வாழ்வையோர்கணத்தென்றுமுடித்தான். (௧௩)

என்னையன்னவர்மறந்தனர்நின்றிகலியற்றத்
துன்னுபோர்ப்படைமுடிவிலாதவர்வயிற்றூண்டிப்
பின்னைநின்றதுபுரிவலென்றனையவன்பேச
மன்னன்முன்னின்றமகோதரன்செம்மொழிவழங்கும். (௧௪)

இராவணன் மகோதரனை நீ போர்புரியச் செல்லுதியெனல்.

வெள்ளநூறுடைவெஞ்சினச்சேனையைவீர
அள்ளிலைப்படையகம்பனைமுதலியவரக்கர்
எள்ளிலெண்ணிலர்தம்மொடுமிரைத்தனைபோகிக்
கொள்ளைவெஞ்செருவியற்றுதிமனிசரைக்குறுகி. (௧௫)

மாயையென்றனவல்லனயாவையும்வழங்கித்
தீயிருட்பெரும்பரப்பினைச்செறிவுறத்திருத்தி
நீயொருத்தனேயுலகொருமூன்றையுநிமிர்வாய்
போயுருத்தவருயிர்குடித்துதவெனப்புகன்றான். (௧௬)

என்றகாலையினென்றுகொலேவுவதென்று
நின்றவாளெயிற்றரக்கனுமுவகையினிமிர்ந்தான்
சென்றுதேர்மிசையேறினனிராக்கதர்செறிந்தார்
குன்றுசுற்றியமதகரிக்குலமன்னகுறியார். (௧௭)

கோடிகோடிநூறாயிரமாயிரங்குறித்த
ஆடல்யானைகளணிதொறுமணிதொறுமமைந்த

௧௫. எள்ளிலெண்ணினர் - கணக்கில்லாதவர்.

ஓடுதேர்க்குலமுலப்பிலவோடிவந்துற்ற
கேடில்வாம்பரிக்கணக்கையுங்கடந்தனகிளர்ந்த. (௯௯)

படைக்கலங்களும்பருமணிப்பூண்களும்பகுவாய்
இடைக்கலந்தனவெயிற்றினம்பிறைகளுமெறிப்பப்
புடைப்பரந்தனவெயில்களுநிலாக்களும்புரள
விடைக்குலங்கள்போலிராக்கதப்பதாதியுமிடைந்த. (௧௧)

கொடிக்குழீஇயனகொழுந்தெழுந்தெழுந்துமேற்கொள்ள
இடிக்குழீஇயனமழைப்பெருங்குலங்களையிரிந்த
அடிக்குழீஇயிடுமிடந்தொறும்பிதிர்ந்தெழுந்தார்ந்த
பொடிக்குழீஇயண்டம்படைத்தவன்கண்ணையும்புதைத்த. (௪௦௦)

ஆனையென்னுமாமலைகளினிழிதருமருவி
வானயாறுகள்வாசிவாய்நுரையொடுமயங்கிக்
கானமாமரங்கலலொடுமீர்த்தனகடிதில்
போனபோதரும்பெருமையபுணரியுட்புக்க. (௪௦௧)

தடித்துமின்குலம்விசும்பிடைத்தயங்குவசலத்தின்
மடித்தவாயினர்வாளெயிற்றரக்கர்தம்வலத்தின்
பிடித்தநின்படைவிதிர்த்திடவிதிர்த்திடப்பிறழ்ந்து
பொடித்தவெம்பொறிகொதித்துமேற்போவனபோன்ற. (௪௦௨)

சொன்னதுறடைவெள்ளமன்றிராவணன்றுரந்த
அன்னசேனையைவாயினூடுமிழ்கின்றவமைதி
முன்னம்வேலையைமுழுவதுங்குடித்ததுமுறையி
தென்னமீட்டுமிழ்குறுமுனியொத்ததவ்விலங்கை. (௪௦௩)

சங்கபேரியுங்காளமுந்தாளமுந்தலைவர்
சிங்காதமுஞ்சிலையினுஞ்செறிவிசைகளுஞ்சினமாப்
பொங்குமோதையும்புரவியின்குழுதையும்பொலிதேர்
வெங்கணேலமுமாலெனவிழுங்கியவனை. (௪௦௪)

அசுரவானர யுத்தம்.

புக்கதாற்பெரும்போர்ப்படைப்பறந்தலைப்புறத்தில்
தொக்கதானைவானரத்தானையுந்துவன்றி
ஒக்கவார்த்தனவுருக்கினதெழித்தனவுருமின்
மிக்கவான்படைவிடுகணைமாமலைவிலக்கி. (௪௦௫)

குன்றுகோடியுங்கோடிமேற்கோடியுங்குறித்த
வென்றிவானரவீரர்கண்முகந்தொறும்விலங்கல்
ஒன்றினால்வருமைவருமிராக்கதருலந்தார்
பொன்றிவீழ்ந்தனபொருகரிபாய்பரிபொலந்தேர். (௪௦௬)

௪௦௩. குறுமுனி - அகத்தியன்

மழுவுஞ்சூலமும்வலயமுநாஞ்சிலும்வாளும்
எழுவுமீட்டியுந்தோட்டியுமெழுமுனைத்தண்டும்
கழுவும்வேலொடுகணையமும்பகழியுங்காத்த
குழுவினோடுபட்டுருண்டனவானரக்குலங்கள். (௧0௭)

முற்கரங்களுமுசலமுமுசுண்டியுமுளையும்
சக்கரங்களும்பிண்டிபாலத்தொடுதண்டும்
கற்பணங்களுங்கணையமுங்கவண்விடுகல்லும்
வெற்பினங்களைநுறுக்கினகவிகளைவீழ்த்த. (௧0௮)

கதிரயிற்படைக்கலம்வரன்முறைமுறைகடாவ
அதிர்பிணப்பெருங்குன்றுகள்படப்படவழிந்த
உதிரமுற்றபேராறுகடிசைத்திசையோட
எதிர்கடக்கிலகவிக்குலமரக்கருமியங்கார். (௧0௯)

யாவராங்கிகல்வானராயினரெவரும்
தேவராகவினவரொடும்விசும்பிடைத்திரிந்தார்
மேவுகாதலின்மெலிவுறுமரம்பையர்விரும்பி
ஆவியொன்றிடவிழைவினர்பிரிவுநோயகன்றார். (௧௧0)

காக்குமாயமும்வஞ்சமுங்களவுமேகடனா
இரக்கமேமுதற்றருமத்தினெறிக்கென்றுமிழியா
அரக்கரைப்பெருந்தேவர்களாக்கினவமலன்
சரத்தின்மேலினிப்பவித்திரமுளவெனத்தகுமே. (௧௧௧)

அந்தகன்பெரும்படைக்கலமந்திரத்தமைந்தான்
இந்துவெண்ணெயிற்றரக்கரும்யானையுந்தேரும்
வந்தவந்தனவானரமிடம்பெறுவண்ணம்
சிந்தினான்சாயிலக்குவன்முகத்தொறுந்திரிந்தான். (௧௧௨)

அனுமனது கண்டப்போர்.

கும்பகன்னனுண்டிட்டதுவயிரவான்குன்றின்
வெம்புவெஞ்சுடர்விரிப்பதுதேவரைமேனான்
தம்பையின்றலைதரந்ததுசுடர்மணித்தண்டொன்
றிம்பர்ஞாலத்தைநெளிப்பதுமாருதியெடுத்தான். (௧௧௩)

வேறு.

காற்றன்றிதுகனலென்றனவிமையோரிடைகாணா
ஏற்றங்கடுவிசையோடுயர்கோலைநீடியவியல்பால்
சீற்றத்தனியுருவாயிடைதேருதநொர்மாறாய்க்
கூற்றங்கொடுமுனைவந்தெனக்கொன்றானிகனின்றான். (௧௧௪)

௧௧௨. முகத்தொறும் - திசைதொறும்.

வெங்கண்மதமலைமேல்விரைபரிமேல்விடுதேர்மேல்
சங்கர்தருபடைவீரர்களுடன்மேலவர்தலைமேல்
எங்கும்முளனொருவனெதிர்த்திருநான்மறைதெரிக்கும்
செங்கண்ணவனிவனேயெனத்திரிந்தான்கலைதெரிந்தான். (௧௧௫)

கிளர்ந்தாரையுங்கிடைத்தாரையுங்கிழித்தான்கனல்விழித்தான்
களர்ந்தாரொருகுழம்பாம்வகையரைத்தானுருக்கரைத்தான்
வளர்ந்தானிலைபுணர்ந்தாருலகொருமூன்றையும்வலத்தால்
அளந்தான்முனமிவனேயெனவிமையோர்களுமயிர்த்தார். (௧௧௬)

மத்தக்கரிநெடுமத்தகம்வகிர்பட்டுகமணிமேல்
முத்திற்பொலிமுழுமேனியன்முகில்விண்டொடுமெய்யான்
ஒத்தக்கடையுகமுற்றுழியுறுகால்பொரவுமீன்
தொத்தப்பொலிகனகக்கிரிவெயில்சுற்றியதொத்தான். (௧௧௭)

இடித்தானிலம்விசும்போடெனவிட்டானடியெழுந்தான்
பொடித்தான்கடற்பெருஞ்சேனையைப்பொலந்தண்டுதன்வலத்தால்
பிடித்தான்மதகரிதேர்முதற்பிழம்பானவைகுழம்பா
அடித்தானுயிர்குடித்தானெடுத்தார்த்தான்பகைதீர்த்தான். (௧௧௮)

ஆறாயிரமதமால்கரியொருநாழிகைநுவல்போ
தாறாய்நெடுங்கடுஞ்சோரியினாறும்வகையரைப்பான்
ஏறாயிரமெனலாயெழுவயவீரரையிடறித்
தேரூர்தருகொலைமேவியதிசையானையிற்றிரிந்தான். (௧௧௯)

தேரேறினர்பரியேறினர்விடையேறினர்சினவெங்
காரேறினர்மழையேறினர்கலையேறினர்பலவெம்
போரேறினர்புகழேறினர்புகுந்தார்புடைவளைந்தார்
நேரேறினர்விசும்பேறிடநெரித்தான்கதைதிரித்தான். (௧௨௰)

வேறு.

அரிகுலமன்னனீலனங்கதன்குமுதன்சாம்பன்
பருவவிப்பனசனென்றிப்படைத்தலைவீரர்யாரும்
பொருசினர்திருகிவெற்றிப்போர்க்களமருங்கிற்புக்கார்
ஒருவரையொருவர்காணாருயர்படைக்கடலினுள்ளார். (௧௨௧)

தொரும்படையரக்கர்வெள்ளத்துறைதுறையள்ளத்துவி
ரும்படைத்தலைவர்கொல்லுசாசிங்கடந்ததென்ன
மிரும்படைக்கடலுட்செல்லுமாருதிவீரவாழ்க்கை
அகம்பனைக்கிடைத்தான்றண்டாலரக்கரையரைக்குங்கையான். (௧௨௨)

மலைப்பெருங்கழுதையைஞ்ஞூற்றிரட்டியான்மனத்திற்செல்லும்
தலைத்தடத்தோன்வில்லன்குருகனென்னுந்தன்மைக்

௧௧௮. மதகரி - மும்மதங் கொண்டயானை.

கொலைத்தொழிலவுணன்பின்னையிராக்கதவேடங்கொண்டான்
சிலைத்தொழிற்குமரன்கொல்லைத்தொல்லைநாட்செருவிற்றீர்ந்தான். (௧௨௩)

பாகசாதனனுமற்றைப்பகையடுர்திகிரிபற்றும்
ஏகசாதனனுமூன்றுபுரமும்பண்டெரித்துளோனும்
போகதாமொருவர்பற்றிக்குரங்கொடுபொரக்கற்றாரோ
ஆகசுற்றாவியுண்பதிதனின்மேற்றாகுமென்றான். (௧௨௪)

யான்றடேனென்னின்மற்றிவ்வெழுதிரைவளாகமென்னும்
வான்றடாதரக்கனென்னும்பெயரையுமாய்க்குமென்னா
வூன்றடாகின்றவாளிமழைதுறந்துருத்துச்சென்றான்
மீண்டொடாகின்றதிண்டோளநுமனும்விரைவின்வந்தான். (௧௨௫)

தேரொடுகளிறுமாவுமரக்கருநெருக்கித்தெற்றிக்
காரொடுகனலுங்காலுங்கிளர்ந்ததோர்காலமென்ன
வாரொடுதொடர்ந்தபைம்பொற்கழலினான்வருதலோடும்
ஆரொடுந்தொடர்ந்ததண்டைச்சுழற்றினான்வயிரத்தோளான். (௧௨௬)

எற்றினவெறிந்தவெல்லையெய்தினவெய்தபெய்த
முற்றினபடைகள்யாவுமுறைமுறைமுறித்துசிந்தச்
சுற்றினவயிரத்தண்டாற்றுகைத்தனனமரர்துன்னக்
கற்றிலனின்றுகற்றான்கதையினல்வதையின்கல்வி. (௧௨௭)

அகம்பனுங்காணக்காணவையிருகோடிக்கைம்மா
முகம்பயில்கவனப்பாய்மாமுன்னெயிற்றிட்டமூரி
நகம்பயிறேரினோடுநசுக்கினனூழிதீர்த்தான்
உகம்பெயரூழிக்காற்றினுலைவிலாமேருவொப்பான். (௧௨௮)

படுகளப்பரப்பைநோக்கிப்பாழிவாயதுக்கினூழிற்
சுடுகினர்புகைவெங்கண்ணிற்றோன்றிடக்கொடித்தேர்தூண்டி
விடுகணைப்படலைமாரிமழையினுமும்மைவீசி
முடுகுறச்சென்றுகுன்றின்முட்டினான்முகிலினார்ப்பான். (௧௨௯)

சொரிந்தனபகழிமாரிதோளினுமார்பின்மேலும்
தெரிந்தனவசனிபோல்வசெறிபொறிபிதிர்வதிக்கின்
வரிந்தனவெருவைமானச்சிறைகளாலமரர்மார்பை
அரிந்தனவடிம்புபொன்கொண்டமைந்தனவாகுங்கண்ண. (௧௩0)

மார்பினுந்தோளின்மேலும்வாளிவாய்மடுத்தவாயில்
சோர்பெருங்குருதிசோரத்துளங்குவான்றேறுமுன்னம்
தேரிரண்டருகும்பூண்டகழுதையுமச்சுஞ்சிந்தச்
சாரதிபுரளவீரத்தண்டினாற்கண்டஞ்செய்தான். (௧௩௧)

௧௩0. அசனிபோல்வசெறிபொறிபிதிர்வதிக்கின் - இடிபோன்ற ஒளியுள்ள நெருங்கிய தீப்பொறிகளைத் திசைகடோறுஞ் சிதறுவன.

அகம்பனுவத யுத்தம்.

வில்லினால்வினைவெல்வதரிதெனநிருதன்வெய்ய
மல்லினால்வயன்றதோளின்வலியினால்வானத்தச்சன்
கொல்லினாலமைத்ததாண்டோர்கொடுமுனைத்தண்டுகொண்டான்
அல்லினால்வகுத்ததன்னமேனியான்கடலினார்ப்பான். (௧௩௨)

இன்றிவன்றன்னைவிண்ணாடேற்றிவாளிலங்கைவேந்தை
வென்றியனாக்கிமற்றைமனிசரைவெறியராக்கி
நின்றுயர்கொடியதுன்பமமரர்பானிறப்பலென்னாச்
சென்றனனரக்கனன்றுவருகெனவநுமன்சேர்ந்தான். (௧௩௩)

தாக்கினாரிடத்துமற்றும்வலத்தினுந்திரிந்தார்சாரி
ஒக்கினாரூழினார்ப்புக்கொட்டினார்கிட்டினார்கீழ்த்
தூக்கினார்சுழற்றிமேன்மேற்சுற்றினாரெற்றிவெற்றி
நீக்கினார்நெருக்கினார்போய்நீங்கினாரோங்கினார்மேல். (௧௩௪)

தட்டினார்தழுவினார்மேற்றாவினார்தரையினோடும்
கிட்டினார்கிடைத்தார்வீசிப்புடைத்தவைகீழ்மேலும்
கட்டினார்காத்தாரொன்றுங்காண்கிலாரிறவுகண்ணாற்
றொட்டினார்மாதிவட்டமோடினாராதிபோனார். (௧௩௫)

மய்யொடுபகைத்துநின்றநிறத்தினன்வயிரமார்பில்
பொய்யொடுபகைத்துநின்றகுணத்தினன்புகுந்துமோத
வெய்யவனதனைத்தண்டால்விலக்கினன்விலக்கலோடும்
கய்யொடுமிற்றுமற்றைக்கதைகளங்கண்டதன்றே. (௧௩௬)

கய்யொடுதண்டுநீங்கக்கடலெனக்கலக்கமுற்ற
மெய்யொடுநின்றவெய்யோன்மிடலுடையிடங்கையோச்சி
அய்யனையலங்கலாகத்தடித்தனனடித்தலோடும்
ஒய்யெனவயிரக்குன்றத்துருமினேறிடித்ததொத்த. (௧௩௭)

அடித்தவன்றன்னைநோக்கிச்சனியேறனையதண்டு
பிடித்துநின்றேயுமெற்றான்வெறுங்கையான்பிழையிற்றென்னா
மடித்துவாயிடத்தகையான்மார்பிடைக்குத்தவாயால்
குடித்துநின்றுமிழ்வானென்னக்கக்கினன்குருதிக்கொள்ளை. (௧௩௮)

மீட்டுமக்கையால்வீசிச்செவித்தலத்தெற்றிவீழ்ந்தான்
கூட்டினானுயிரைவிண்ணோர்குழாத்திடையரக்கர்கூட்டம்
காட்டில்வாழ்விலங்குமாக்கள்கோளரிகண்டவென்ன
ஈட்டமுற்றெதிர்ந்தவெல்லாமிரிந்தனதிசைகளெங்கும். (௧௩௯)

மாண்டனனகம்பன்மண்மேன்மடிந்தனக்குதர்சேனை
மீண்டனர்குரக்குவீரர்விழுந்தனசிலைக்கைவேழம்

௧௩௨. வானத்தச்சன் - விச்சுவகருமன்.

துண்டினகொடித்தேரற்றுத்துணிந்தனதொடுத்தவாசி
ஆண்டகையிளையவீரனடுசிலைபொழியுமம்பால். (௧௪௦)

இலக்குமணன் முதலியோர் நின்று பொரும் எல்லை அளவு.

ஆர்க்கின்றதூறுங்கேளானிலக்குவனசனியேற்றைப்
பேர்க்கின்றசிலையினாணின்பேரொலிகேளான்வீரர்
யார்க்கின்னலுற்றதென்னானுணர்ந்திலனிசைப்போரில்லைப்
போர்க்குன்றமனையதோளானிளையதோர்பொருமலுற்றான். (௧௪௧)

வீசினதிருதர்சேனைவேலையிற்றென்மேற்றிக்கின்
யோசனையேழுசென்றானங்கதனதனுக்கப்பால்
ஆசையினிரட்டிசென்றானரிகுலத்தரசனப்பால்
ஈசனுக்கிளையவீரனிரட்டிக்குமிரட்டிசென்றான். (௧௪௨)

மற்றையோர்நாலுமைந்தும்யோசனைமலைந்துபுக்கார்
கொற்றமாருதியும்வள்ளலிலக்குவனின்றகொற்றம்
முற்றினனிரண்டுமூன்றுகாவதமொழியப்பின்னும்
சுற்றியசேனைநீர்மேற்பாசிபோன்மிடையுந்தள்ளி. (௧௪௩)

இளையவனின்றசூழலெய்துவென்விரைவினென்றோர்
உளைவுவந்துன்னத்தூண்டவூழிவெங்காலிற்செல்வான்
களைவருந்தன்பகைங்கக்கண்டனனென்பமன்றோ
விளைவனசெருவிற்பல்வேறாயினகுறிகண்டேய. (௧௪௪)

ஆனையின்கோடும்பீலித்தழைகளுமாரத்தோடு
மானமாமணியும்பொன்னுமுத்தமுங்கொழித்துவாரி
மீனெனவங்குமிங்கும்படைக்கலமிளிரவீசும்
பேனம்வெண்குடையவாயகுருதிப்போறுகண்டான். (௧௪௫)

ஆசைகடோறுஞ்சுற்றியலைக்கின்றவரக்கர்தம்மேல்
வீசினபகழிபற்றத்தலையொடும்விசும்பைமுட்டி
ஓசையினுலகமெங்குமுதிர்வுறவூழிநாளில்
காசறுகல்லின்மாரிபொழிவபோல்விழுவகண்டான். (௧௪௬)

மானவேலரக்கர்விட்டபடைக்கலம்வானமாரி
ஆனவன்பகழிசிந்தத்திசைதொறும்பொறியோடற்ற
மீனினம்விசும்பினின்றமிருளுகவீழ்வபோலக்
கானகத்தொடர்ந்தீயிற்சுடுவனபலவுங்கண்டான். (௧௪௭)

அருளுடைக்குரிசில்வாளியந்தரமெங்குந்தாமாய்த்
தெருளுறத்தொடர்ந்துவீசிச்செல்வனதேவர்காண
இருளுடைச்சடலையாடுமெண்புயத்தண்ணல்வண்ணச்
சுருளுடைச்சடையின்கற்றைச்சுற்றெனச்சுடர்வகண்டான். (௧௪௮)

---

௧௪௫. பேனம் - நுரை. ௧௪௮. சடலை - சர்வசம்மார மயானம்.

செய்யுறக்கொளுத்தப்பட்டொருப்பெனப்பொருப்பினெங்கும்
மெய்யுறக்குருதித்தாரைவிசும்புறவிளங்குகின்ற
அய்யனிக்கங்குன்மாலையாசெனவதிர்துகாலம்
கய்வினைக்கெடுத்ததென்னக்கவர்தத்தின்காடுகண்டான். (௧௭௯)

ஆளெலாமழிர்ததேருமானையுமாடன்மாவும்
நாளெலாமெண்ணினுலுக்தொலைவிலாநாதரின்றித்
தாளெலாங்குலையவோடித்திரிவனதாங்கலாற்றும்
கோளிலாமன்னனூட்டிற்குடியெனக்குலைவகண்டான். (௧௮௦)

மிடல்கொளும்பகழிமாரிவானினுமும்மைவீசி
மடல்கொளுமலங்கன்மார்பன்மலைந்திடவுலைந்துமாண்டார்
உடல்களுமுதிரநீருமுடைப்படைக்கலமுமுற்ற
கடல்களுநெடியகானுங்கார்தவழ்மலையுங்கண்டான். (௧௮௧)

சுழித்தெறியூழிக்காலிற்றருவினன்றொடருந்தோன்றல்
தழிக்கொடுகுருதிவேலைதாவுவான்றனிப்பேரண்டம்
கிழித்ததுகிழித்ததென்னுநாணுருமேறுகேட்டான்
அழித்தொழிகாலத்தார்க்குமார்கலிக்கிரட்டியார்த்தான். (௧௮௨)

அனுமன் இலக்குமணனைச் சந்தித்தல்.

ஆர்த்தபேரமலைகேளாவனுகினனநுமனெல்லார்
வார்த்தையுங்கேட்கலாகுமென்றகமகிழ்ந்துவள்ளல்
பார்ப்பதன்முன்னம்வந்துவணங்கினன்விசயப்பாவை
தூர்த்தனைவிளையவீரன்றழுவினனினையசொன்னான். (௧௮௩)

அரிகுலவீரரையயாண்டையாருக்கன்மைந்தன்
பிரிவினைச்செய்ததெவ்வாறங்கதன்பெயர்ந்ததெங்கே
விரிவிருட்பரவைச்சேனைவெள்ளத்துவிளைந்ததொன்றும்
தெரிகிலெனுரைத்தியென்றான்சென்னிமேற்கையன்சொன்னான். (௧௮௪)

போயினர்போயவாறுபோயினதன்றிப்போரில்
ஆயினாயதொன்றுமறிந்திலேனையயாரும்
மேயினர்மேயபோதேதெரிவதுவிளைந்ததென்றான்
தாயினன்வேலையோடுமயிந்திரப்பரவைதானே. (௧௮௫)

மந்திரமுனதாலையவுணர்வுமாலைத்தஃதுன்
சிந்தையினுணர்ந்துசெய்யற்பாற்றெனிற்செய்திதெவ்வர்
தந்திரமிதனைத்தெய்வப்படையினாற்சமைப்பினல்லால்
எந்தையின்னடியர்யாருமெய்தலரின்னையென்றான். (௧௮௬)

பாசுபதாஸ்திரப் பிரயோகம்.

அன்னதுபுரிவெனென்னுவாயிராமத்தண்ணல்
தன்னையேவணங்கிவாழ்த்திச்சரங்களைத்தெரிந்துதாங்கிப்
பொன்மலைவில்லினன்றன்படைக்கலம்பொருந்தவேர்தி
மின்னெயிற்றரக்கர்தம்மேல்வீசினன்வில்லின்செல்வன். (௧௫௭)

முக்கணன்படையையூட்டிவிடுதலுமூங்கிற்காட்டில்
புக்கதோரழிந்தீயிற்புறத்தினொருருவம்போகா
தக்கணத்தெரிந்துவீழ்ந்ததரக்கர்தஞ்சேனையாழித்
திக்கெலாமிருளுந்தீர்ந்ததேவருமயக்கந்தீர்ந்தார். (௧௫௮)

மகோதரன் மறைதல்.

தேவர்தம்படையைவிட்டானென்பதுசிந்தைசெய்யா
மாவருமாயைநீங்கமகோதரன்மறையப்போனான்
யாவருமிரிந்தாரெல்லாமினமழைகழியவார்த்துக்
கோவினங்களிற்றறவர்துகூடினாராடல்கொண்டார். (௧௫௯)

யாவர்க்குந்திதிலாமைகண்டுகண்டுவகையேறத்
தேவர்க்குந்தேவன்றம்பிதிருமனத்துவகைபந்தீர்ந்தான்
காவற்போர்க்குரக்குச்சேனைகல்லெனக்கலந்துபுல்லப்
பூவர்க்கமிமையோர்தூவப்பொலிந்தனர்தூதர்போனார். (௧௬0

தூதர் இராவணனை யடைதல்.

இலங்கையர்கோனையெய்தியெய்தியதுரைத்தார்நீவிர்
விலங்கினிர்போலும்வெள்ளதுற்றதோர்வில்லின்மேவழக்
குலங்களினொடுங்கொல்லக்கூடுமோவென்னக்கொக்கற
அலங்கலான்படையினென்றானன்னதேலாதம்மன்றான். (௧௬௧

தோடவிழலங்கலென்சேய்க்குணர்த்துமின்னென்னச்சொன்னான்
ஓடினார்சாரர்வல்லையுணர்த்தினர்துணுக்கமெய்தா
ஆடவர்திலகன்யாண்டையானிகலறுமனேனோர்
வீடணன்யாங்கணுள்ளானுணர்த்துமின்விரைவினென்றார். (௧௬௨

இந்திரசித்திற் தூதர் இராமாதியர் நிலைகூறல்.

வந்திலனிராமன்வேறோர்மலையுளானுந்தைமாயம்
தந்தனநீர்வான்போனானுன்பனதாழ்ப்பத்தாழா
எந்தநிதயன்றதென்னமகோதரன்யாண்டையென்ன
அந்தரத்திடையானென்னவிராவணியழிகிற்றென்றான். (௧௬௩

வேறு.

இந்திரசித்து இட்டதெய்வத்தினைப் பூசித்தல்.

காலமீதெனக்கருதியவிராவணன்காதல்
ஆலமாமரனென்றினைவிரைவினினடைந்தான்

மூலவேள்விக்குவேண்டுவசலப்பைகண்முறையால்
கூலர்ங்கியவிராக்கதப்பூசுரர்கொணர்ந்தார். (௩௩௪)

அம்பினூற்பெருஞ்சமிதைகளமைத்தனரனலில்
தும்பைமாமலர்தூவினர்காரியெட்சொரிந்தார்
கொம்புபல்லொடுகரியவெள்ளாட்டிருங்குருதி
வெம்புவெந்திசைமுறையினிட்டெண்ணெயால்வேட்டார். (௩௩௫)

வலஞ்சுழித்துவர்தெழுந்தெரிசுறுவெறிவயங்கி
கலஞ்சுரந்தனபெருங்குறிமுறைமையினல்கக்
குலஞ்சுரந்தெழுகொடுமையான்முறையினிற்கொண்டே
நிலஞ்சுரந்தெழுவென்றியென்றும்பரினிமிர்ந்தான். (௩௩௬)

இந்திரசித்து ஆகாயமடைந்து மாயையான்மறைந்து
சமயநோக்கி நிற்றல்.

விசும்புபோயினன்மாயையின்பெருமையான்மேலைப்
பசும்பொனாட்டவர்நாட்டமுமுன்னமும்படரா
அசும்புவிண்ணிடையடங்கினன்முனிவருமறியார்
தசும்புநண்ணெடுங்கோணொடுகாலமுஞ்சார. (௩௩௭)

மகோதரனது மாயப்போர்.

அனையனின்றனனவ்வழிமகோதரனதிர்தேர்
வினையமெண்ணினனிந்திரவேடத்தைமேவித்
துனைவலத்தவைராவதத்தெருத்தின்மேற்றோன்றி
முனைவர்வானவரவரொடும்போர்செயமூண்டான். (௩௩௮)

அரக்கர்மானுடர்குரங்கெனுமவையெலாமல்ல
உருக்கன்யாவுளவுயிரினிபுலக்கத்திணுழல்வ
தருக்குபோர்க்குடன்வந்தனவாமெனச்சமைத்தான்
வெருக்கொளப்பெருங்கவிப்படைகுலைந்தநுவிலங்கி. (௩௩௯)

கோடுநான்குடைப்பாணிறக்குன்றமேற்கொண்டான்
ஆடலிந்திரனல்லவர்யாவருமமரர்
சேடர்சிந்தனைமுனிவர்களமர்பொரச்சீறி
ஊடுவந்துற்றதென்கொலோகிபமெனவுலைந்தார். (௩௪௦)

இலக்குமணன் அனுமானை இஃதென்னே செயலெனல்.

அனுமன்வாண்முகநோக்கினனாழியையகற்றித்
தனுவலங்கொண்டதாமரைக்கண்ணவன்றம்பி
முனிவர்வானவர்முனிந்துவந்தெய்தயாமுயன்ற
துனியிதென்கொலோசொல்லுதிவிரைந்தெனச்சொன்னான். (௩௪௧)

௩௪௦. பாணிறக்குன்றம் - வெள்ளையானை

## இந்திரசித்தின் பிரமாத்திரப் பிரயோகம்.

இன்னகாலையினிலக்குவன்மேனிமேலெய்தான்
முன்னைநான்முகன்படைக்கலமிமைப்பதன்முன்னம்
பொன்னின்மால்வரைக்குரீஇயினமொய்த்ததுபோலப்
பன்னலாந்தரமல்லனசுடர்க்கணைபாய்ந்த. (கஎஉ)

கோடிகோடிநூறாயிரங்கொடுங்கணைக்குழாங்கள்
மூடிமேனியைமுற்றுறச்சுற்றினமூழ்க
ஊடுசெய்வதொன்றுணர்ந்திலனுணர்வுக்கொடுங்க
ஆடன்மாகரிசேவகமமைந்தெனவசைந்தான். (கஎ௩)

அனுமனிந்திரன்வந்தவனேகொலிதமைந்தான்
இனியவெற்றவென்களிற்றினோடெடுத்தெனவெழுந்தான்
தனுமனுயிரகோடிவெங்கடுங்கணைதைக்க
வினைவுஞ்செய்கையுமறந்துபோய்நெடுநிலஞ்சேர்ந்தான். (கஎ௪)

அருக்கன்மாமகனுடைக்குன்றமொன்றலர்ந்த
முருக்கின்கானகமாமெனக்குருதிநீர்முடுகத்
தருக்கின்வெஞ்சரந்தலைத்தலைமயங்கினதைக்க
உருக்குசெம்பெனக்கண்ணினனெடுநிலமுற்றான். (கஎ௫)

அங்கதன்பதினாயிரமயிர்க்கணையழுந்தச்
சிங்கவேறிடியுண்டெனநெடுநிலஞ்சேர்ந்தான்
சங்கமேறியபெரும்புகழ்ச்சாம்பனுஞ்சாய்ந்தான்
தங்கமார்பையுந்தோளையும்வடிக்கணைதொலைக்க. (கஎ௬)

நீலனாயிரம்வடிக்கணைநிரம்புக்குநெருங்கக்
காவலன்முகங்கண்டனனிடபன்விண்கலந்தான்
ஆலமேயன்னபகழியாற்பனசனுமசைந்தான்
கோலின்மேவியகூற்றினாற்குமுதனுங்குலைந்தான். (கஎஎ)

வேலைதட்டவனாயிரம்பகழியால்வீழ்ந்தான்
வாலிநேர்வலியிந்தனுந்துமிந்தனுமடிந்தார்
காலவெந்தொழிற்கவயனும்வானகங்கண்டான்
மாலைவாளியிற்கேசரிமண்ணிடைமறைந்தான். (கஎ௮)

விந்தமன்னதோட்சதவலிசுசேடணன்விநதன்
கெந்தமாதனிடும்பன்வன்றதிமுகன்கிளர
உந்துவார்கணைகோடிதம்முடலமுற்றொளிப்பத்
தந்தநல்லுணர்வொடுங்கினர்மண்ணுறச்சாய்ந்தார். (கஎ௯)

மற்றைவீரர்கள்யாவரும்வடிக்கணைமழையால்
முற்றும்வீந்தனர்முழங்குபெருதிரத்தின்முந்நீர்

கஎ௬. சங்கம் - கூட்டம்.

எற்றுவான்றிரைக்கடலொடும்பொருதுசென்றேற
ஒற்றைவான்கணையாயிரங்குரங்கினையுருட்ட. (௧௮௦)

தலைத்தலைவைத்ததசமுகன்பெரும்படைதன்னி
ஒளிக்கமற்றொருபுகலிடமுணர்கிலருருமின்
வளைத்துவித்தியவாளியான்மண்ணொடுதிண்ண
முளைப்புடைத்தனவொத்தனவானரமுடிந்த. (௧௮௧)

குவளைக்கண்ணினைவானவர்மடந்தையர்கோட்டித்
துவளப்பாரிடைக்கிடந்தனர்குருதிநீர்சுற்றித்
திவளக்கீழொடுமேல்புடைபார்திடைசெறியப்
பவளக்காடுடைப்பாற்கடலொத்ததப்பரவை. (௧௮௨)

விண்ணிற்சென்றதுகவிக்குலப்பெரும்படைவெள்ளம்
கண்ணிற்கண்டனர்வானவர்விருந்தெனக்கலந்தார்
உண்ணிற்கும்பெருங்களிப்பினரனவளாயுகந்தார்
மண்ணிற்செல்லுதிரிக்கணத்தேயெனவலித்தார். (௧௮௩)

பார்படைத்தவன்படைக்கொருபூசனைபடைத்தீர்
நீர்படக்கடவீரலீர்வரிசிலைநெடியோன்
பேர்படைத்தவர்க்கடியவர்க்கடியரும்பெறுவார்
வேர்படைத்தவெம்பிறவியாற்றுவக்குணவீடு. (௧௮௪)

ஙங்கள்காரியமியற்றுவானுலகிடைநடந்தீர்
உங்களாருயிரும்முயிருடல்பிறிதுற்றீர்
செங்கணாயகற்காகவெங்களத்திடைத்தீர்ந்தீர்
எங்கணாயகர்நீரெனன்றிமையவரிசைத்தார். (௧௮௫)

இந்திரசித்தன் வெற்றிச்சங்கூதி இராவணனை யடைதல்.

வெங்கண்வானரக்குழுவொடுமிளையவன்விளிந்தான்
இங்குவந்திலனகன்றனனிராமனென்றிகழ்ந்தான்
சங்கமூதினன்றூதையைவல்லையிற்சார்ந்தான்
பொங்குபோரிடைப்புகுந்தனபொருளெலாம்புகன்றான். (௧௮௬)

இறந்திலன்கொலவ்விராமனென்றிராவணனிசைத்தான்
துறந்துநீங்கினனல்லனேற்றம்பியைத்தொலைத்துச்
சிறந்தவன்பரைக்கொன்றுதன்சேனையைச்சிதைக்க
மறந்துநிற்குமேமற்றவன்றிறனென்றான்மதலை. (௧௮௭)

அன்னதேயெனவரக்கனுமாதரித்தமைந்தான்
சொன்னமைந்தனுந்தன்பெருங்கோயிலைச்சூழ்ந்தான்

௧௮௪. நீர்படக்கடவீரலீர் - நீர்சாகக்கடவீரல்லீர்.
பேர்படைத்தவர்க்கு - இராமனென்னும் பெயர்வாய்த்தவருக்கு.

மன்னவனேவலின்மகோதரன்போயினன்வந்தான்
என்னையாளுடைநாயகன்வேறிடத்திருந்தான். (௧௮௮)

### இராமன் இறந்தாரைக் காண்டலும் புலம்பலும்.

செய்யதாமரைநாண்மலர்க்கைத்தலஞ்சேப்பத்
துய்யதேவர்தம்படைக்கெலாம்வான்முறைதூக்கும்
மெய்கொள்பூசனைவிதிமுறையியற்றிமேல்வீரன்
மொய்கொள்போர்க்களத்தெய்துவாமினியெனமுயன்றான். (௧௮௯)

கொள்ளியிற்சுடரனலிதன்பகழிகைக்கொண்டான்
அள்ளிதுங்கலாவாரிருட்பிழம்பினையழித்தான்
வெள்ளிவெங்களப்பரப்பினிற்பொருக்கெனவிழித்தான்
தள்ளிருமரைச்சேவடிநடங்குறச்சார்ந்தான். (௧௯௦)

நோக்கினன்பெருந்திசைதொறுமுறைமுறைநோக்கி
ஊக்கினன்றடந்தாமரைத்திருமுகத்துதிரம்
போக்கினனிணைப்பங்கயத்தழுவத்துட்புக்கான்
காக்கும்வன்றுணைத்தலைவரைத்தனித்தனிக்கண்டான். (௧௯௧)

சுக்கிரீவனைநோக்கித்தன்றாமரைத்துணைக்கண்
உக்கநீர்த்திரளொழுகிடநெடிதுநின்றுயிர்த்தான்
தக்கதோவிதுனக்கென்றுதனிமனந்தளர்ந்தான்
பக்கநோக்கினன்மாருதிதன்மையைப்பார்த்தான். (௧௯௨)

கடர்கடந்துபுக்கரக்கரைக்கருவொடுங்கலக்கி
இடர்கடந்தானிருக்கநீநல்கியதிதற்கோ
உடர்கடந்தனவோவுன்னையரக்கன்வில்லுதைத்த
அடர்கடந்தபோர்வாளியென்றுகுலித்தழுதான். (௧௯௩)

முன்னைத்தேவர்தம்வரங்களுமுனிவர்தம்மொழியும்
பின்னைச்சானகியுதவியும்பிழைத்தனபிறந்த
புன்மைச்செய்தொழிலென்வினைக்கொடுமையாற்புகழோய்
என்னைப்போல்பவராருளரொருவரென்றிசைத்தான். (௧௯௪)

புன்றொழிற்புலையரசினைவெஃகியென்பூண்டேன்
கொன்றொருக்கினேனெந்தையைச்சடாயுவைக்குறைத்தேன்
இன்றொருக்கினேனித்தனைவீரரையிருந்தேன்
வன்றொழிற்கொருவரம்புமுண்டாய்வரவற்றோ. (௧௯௫)

தமையனைக்கொன்றுதம்பிக்குவானரத்தலைமை
அமையநல்கினனடங்கலுமவிப்பதற்கமைந்தேன்
சுமைபிடித்துநின்றங்கனையித்துணைகண்டேன்
சமையுடற்பொறைசுமக்கவந்தனனெனச்சொன்னான். (௧௯௬)

---

௧௯௫. புன்றொழிற் புலையரச - அற்பத்தில் அற்பமாகிய அரச.

விடைக்குலங்களினடுவணோர்விடைகிடந்தென்னக்
கடைக்கண்டீயுகவங்கதக்களிற்றினைக்கண்டான்
படைக்கலங்களைச்சுமக்கின்றபதகனேன்பழிபார்த்
தடைக்கலப்பொருள்காத்தவாறழகிதென்றழுதான். (௧௯௭)

உடரிடைத்தொடர்பகழியினொளிர்கதிர்க்கற்றைச்
சுடருடைப்பெருங்குருதியிற்பாம்பெனச்சுமந்த
மிடருடைப்பணமீமிசைத்தான்பண்டைவெள்ளக்
கடரிடைத்துயில்வானன்னதம்பியைக்கண்டான். (௧௯௮)

பொருமினானகம்பொங்கினானுயிர்முற்றும்புகைந்தான்
குருமணித்திருமேனியுமன்னவாகுலைந்தான்
தருமமின்றுதன்கண்புடைத்தலம்வரச்சாய்ந்தான்
உருமினாலிடியுண்டதோர்மராமரமொத்தான். (௧௯௯)

உயிர்த்திலனொருநாழிகையுணர்ந்திலனொன்றும்
வியர்த்திலனுடல்விழித்திலன்கண்ணிணைவிண்ணோர்
அயிர்த்திலன்கொலென்றஞ்சினரங்கையுந்தாளும்
பெயர்த்திலனுயிர்பிறிந்திலன்கருணையாற்பிறந்தான். (௨௦௦)

தாங்குவாரிலைத்தம்பியைத்தழீஇக்கொண்டதன்னை
வாங்குவாரில்லைவாக்கினாற்றெருட்டுவாரில்லை
பாங்கராயுள்ளோர்யாவரும்பட்டனர்பட்ட
தீங்குவாவிதுதமியனையார்துயர்தீர்ப்பார். (௨௦௧)

கவந்தபந்தமுங்கழுதுந்தங்கணவரைக்காணார்
சிவந்தகண்ணினர்தேடினர்திரிபவர்திரளும்
உவந்தசாதகத்திட்டமுமோரியினொழுக்கும்
நிவந்தவல்லதுபிறவில்லைக்கடத்திடைநின்ற. (௨௦௨)

வானநாடியர்வயிறலைத்தழுதகண்மழைநீர்
சோனைமாரியிற்சொரிந்தனர்தேவருஞ்சொரிந்தார்
ஏனைநிற்பவுந்திரிபவுமிரங்கினவெவையும்
ஞானநாயகனுருவமேயாகலினடுங்கி. (௨௦௩)

முகையினுண்மலர்க்கிழவற்குமுக்கணான்றனக்கும்
நகையுநீக்கியதிருமுகங்கருணையுரவியத்
தொகையினின்றவர்க்குள்ளதுசொல்லியென்றொடர்ந்த
பகையும்பார்க்கின்றபாவமுங்கலுழ்ந்ததுபரிவால். (௨௦௪)

அன்னதுஞ்சிறிதுணர்வினோடயர்வுயிர்ப்பனுங்கிக்
கண்விழித்தனன்றம்பியைத்தெரிவுறக்கண்டான்

௧௯௮. பணம் - படம், ஆதிசேடன்.

விண்ணையுற்றனன்மீள்கிலனென்றகம்வெதும்பாப்
புண்ணினுற்றதோரெரியன்னதுயரினன்புலம்பும். (௨0௫)

வேறு.

எந்தையிறந்தானென்றுமிருந்தேனுலகெல்லாம்
தந்தனனென்றுங்கொள்கைதவிர்ந்தேன்றமியல்லேன்
உய்ந்துமிருந்தாய்நீயெனநின்றேனுரைகாணேன்
வந்தனெனையாவந்தனையாவினிவாழேன். (௨0௬)

தாயோநீயேதந்தையுநீயேதவநீயே
சேயோநீயேதம்பியுநீயேதிருநீயே
போயோநின்றாயென்னையிகந்தாய்புகழ்பாராய்
நீயோயானோநின்னினுநெஞ்சம்வலியேனோ. (௨0௭)

ஊறுநின்றபுண்ணுடையாய்பாலுயிர்காணேன்
ஆறுநின்றேனுவிசமர்ந்தேயழுகின்றேன்
ஏறேயின்னுமுய்யினுமுய்வேனிருகூறுக்
கீறுநெஞ்சம்பெற்றனனன்றோகெடுவேனே. (௨0௮)

பயிலுங்காலம்பத்தொடுகாலும்படர்கானத்
தயில்கின்றேனுக்காவனநல்கியயிலாதாய்
வெயிலென்றுன்னாய்நின்றதளர்க்கேமெலிவெய்தித
துயில்கின்றாயோவின்றிவ்வுறக்கந்துறவாயோ. (௨0௯)

அயிராநெஞ்சமாவியுமொன்றேயெனுமச்சொற்
பயிராவெல்லைபாதகனேற்கும்பரிவுண்டோ
செயிரோவில்லாவுன்னையிழந்துந்திரிகின்றேன்.
உயிரோநானோவாரினியுன்னோடுறவையா. (௨௧0)

வேழ்விக்கேகிவில்லுமிறுத்தோர்விடமம்மா
வாழ்விக்குமென்றெண்ணியென்முன்னேவருவித்தேன்
சூழ்வித்தென்னைச்சுற்றினரோடுஞ்சுடுவித்தேன்
தாழ்வித்தேனோவித்தனைகேடுந்தருவித்தேன். (௨௧௧)

மண்மேல்வைத்தகாதலின்மாதாமுதலோர்க்கும்
புண்மேல்வைத்ததீநிகர்துன்பம்புகுவித்தேன்
பெண்மேல்வைத்தகாதலினிப்பேறுகள்பெற்றேன்
என்மேல்வைத்தேனென்புகழ்யான்றனெளியேனோ. (௨௧௨)

மாண்டாய்நீயோயானொருபோதுமுயிர்வாழேன்
ஆண்டானல்லனுனிலமர்தோபாதன்றன்
பூண்டாரெல்லாம்பொன்றவர்துன்பம்பொறையாற்றார்
வேண்டாவோநானல்லறமஞ்சிமெலிவுற்றால். (௨௧௩)

௨௧௨. பெண் - ஜானகி.

அறந்தாய்தந்தைசுற்றமுமற்றுமெனையல்லால்
துறந்தாயென்றுமெய்ம்மறவா தாய்துணைவந்து
பிறந்தாயென்னைப்பின்புதொடர்ந்தாய்பிரிவாற்றாய்
இறந்தாயுன்னைக்கண்டுமிருந்தேனெளியேனே. (௨௧௪)

சான்றோர்மாதைத்தக்கதாக்கன்சிறைதட்ட
ஆன்றோர்சொல்லுநல்லறமன்னான்வயமானால்
மூன்றாய்நின்றபேருலகொன்றாய்முடியாவேல்
தோன்றாவோவென்வல்வில்லின்வீரத்தொழிலம்மா. (௨௧௫)

வேலைப்பன்னக்குண்டகழிக்கும்விராதற்கும்
காலிற்செல்லுங்காகமணிக்குங்கானுக்கும்
மூலப்பொத்தற்செத்தமாத்தேழ்முதலுக்கும்
வாலிக்கும்மேயாயினவாறென்வலியம்மா. (௨௧௬)

இருந்தேனானுமிந்திரசித்தேமுதலாய
பெருந்தேராரைக்கொன்றுபிழைக்கப்பெறுவேனோ
வருந்தேனீயேவெல்லுதியென்னும்வலிகொண்டேன்
பொருந்தேனானிப்பொய்ப்பிறவிக்கும்பொறையல்லேன். (௨௧௭)

மாதாவுந்தஞ்சுற்றமுநாடுமறையோரும்
ஏதானாரோவென்றுதளர்ந்தேயிறுவாரைத்
தாதாய்காணச்சாலநினைந்தேன்றரையான்வேம்
போதாயையாபொன்முடியென்னைப்புனைவிப்பான். (௨௧௮)

பாசமுமுற்றச்சுற்றியபோதும்பகையாலே
நாசமுமற்றார்செய்வனசெய்தேநிலைநின்றேன்
நேசமுமற்றார்செய்வனசெய்தேநிலைநின்றேன்
தேசமுமற்றென்கொற்றநலத்தைத்தெரியாதோ. (௨௧௯)

கொடுத்தேனன்றேவீடணனுக்குக்குலமான
முடித்தோர்செல்வம்யான்முடியாதேமுடிகின்றேன்
படித்தோனென்றேபொய்ம்மைகுடிக்குப்பழிபெற்றேன்
ஒடித்தேனன்றேயென்புகழ்நானேயுணர்வற்றேன். (௨௨௦)

என்றென்றேங்கும்விம்முமுயிர்க்கும்மிடையஃகிச்
சென்றென்றென்றேயுருகியெல்லாஞ்சிறைவெய்தப்
பொன்றும்மென்னுந்தம்பியையார்வத்தொடுபுல்லி
ஒன்றுந்தேறான்றன்னைமறந்தான்றுயில்வுற்றான். (௨௨௧)

இராமன் அழுதலைக்கண்ட தேவர்புலம்பல்.

கண்டார்விண்ணோர்கண்கள்புடைத்தார்கலுழ்கின்றார்
கொண்டார்துன்பமென்முடிவென்னக்குலைகின்றார்

௨௧௯. நாசமுமுற்றப்போதுகடந்தேனுடனல்லேன் என்றும் பாடம்.

அண்டாவையாயெங்கள்பொருட்டாலயர்கின்றாய்
உண்டோவுன்பாற்றுன்பெனவன்பாலுரைசெய்தார். (உஉஉ)

வேறு

உன்னையுள்ளபடியறியேமுலகையுள்ளதிறமுன்னேம்
பின்னறியேமுன்னறியேமிடையுமறியேம்பிறழாமல்
நின்னைவணங்குநீவருத்தநெறியினிற்குமதுவல்லால்
என்னையடியேஞ்செயற்பாலவின்பதுன்பமில்லோனே. (உஉ௩)

அரக்கர்குலத்தைவேரறுத்தெம்மல்லனீக்கியருளாயென்
றிரக்கவெம்மேற்கருணையினுலிலையயாவுருவமிஃதெய்திப்
புரக்குமன்னர்குடிப்பிறந்துபோர்தாயறத்தைப்பொறைநீர்ப்பான்
காக்கநின்றேநெடுமாயமெமக்குங்காட்டக்கடவாயோ. (உஉ௪)

என்றெம்மிடுக்கண்டுடைத்தளிப்பானிரங்கியரசிற்பிறந்தாய்
மூன்றுமுலகத்துயர்தீர்த்தியென்னுமாசைமுயல்கின்றேம்
என்றுமறந்தேமவனல்லன்மனிசனென்றேயிதுமாயும்
போன்றதில்லையாளுடையாய்பொய்யும்புகலப்புக்காயோ. (உஉ௫)

அண்டம்பலவுமனைத்துயிருமகத்தும்புறத்துமுளவாக்கி
உண்டுமுமிழ்ந்துமளந்திடந்துமுள்ளும்புறத்துமுளையாகிக்
கொண்டுசிலம்பிதன்வாயிற்கூர்நூலியையக்கூடியற்றிப்
பண்டுமின்றுமமைக்கின்றபடியையொருவாய்பரமேட்டி. (உஉ௬)

துன்பம்வினையாட்டிதுவேயுமுன்னைத்துன்பந்தொடர்பின்மை
இன்பவிளையாட்டாமெனினுமறியாதேமுக்கிடருற்றால்
அன்புவினையுமருள்விளையுமறிவுவினையுமவையெல்லாம்
முன்புபின்புரடுவில்லாய்முடித்தாலன்றிமுடியாவே. (உஉ௭)

வருவாய்போலவாராதாய்வந்தாயென்றுமனங்களிப்ப
வெருவாதிருந்தேநீயிடையேதுன்பம்விளைக்கமெலிகின்றேம்
கருவாயளிக்குங்களைகண்ணேநீயேயிதனைக்களையாயேல்
திருவாழ்மார்பநின்மாயையெம்மாற்றீர்க்கத்திருமோ. (உஉ௮)

அம்பரீடற்கருளியதுமயனுர்மகனுர்க்களித்ததுவும்
எம்பிரானேயெமக்கின்றுபயந்தாயென்றேயேமுறுவேம்
வெம்புதுயரநீயுழக்கவெளிகாணுதுமெலிகின்றேம்
தம்பிதுணைவநீயிக்கனைத்தவிர்த்தெம்முணர்வைத்தாராயோ (உஉ௯

உஉ௯. அம்பரீடர்க்கருளியது என்றது - துருவாசமுனிவிடுத்த பூதத்தி
னின்றுங் காத்ததனை.

தூதர் இராவணனை யடைதல்.

என்பபலவுமெடுத்தியம்பியிமையாதோருமிடருழந்தார்
அன்புமிகுதியாலையனறிவுமுன்னேயடங்கினன்
துன்பமனிசர்கருமேபுரியமுன்புதுணிந்தமையால்
புன்கணிருதர்பெருந்தூதர்போனாரரக்கனிடம்புகுந்தார். (௨௩௦)

என்வந்ததுநீரென்றரக்கர்க்கிறைவனியம்பவெறிசெருவில்
நின்மைந்தனதுநெடுஞ்சாத்தாற்றுணைவரெல்லாநிலஞ்சேரப்
பின்வந்தவனுமுயிரிழந்தபிழையைநோக்கிப்பெருந்துயரால்
முன்வந்தவனுமுடிந்தானுன்பகைபோய்முடிந்ததெனமொழிந்தார்.

௨௧ - வது. பிரமாத்திரப்படலம் - முற்றிற்று..

ஆ திருவிருத்தம் - ௨௬௨௩.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

இருபத்திரண்டாவது

# பிராட்டி களங்காண் படலம்.

பொய்யார்தூதரென்பதனாற்பொங்கியெழுந்தவுவகையனாய்
மெய்யார்நிதியின்பெருவெறுக்கைவெறுக்கவீசிவிளைந்தபடி
கய்யார்வரைமேன்முரசேற்றிச்சாற்றிநகர்கணிசிறப்ப
நெய்யாராடலாகென்றுநிகழ்த்தியென்றுமினைறிவிலான். (௧)

இராவணன் மருந்தினை நீ இழந்த அசுரர்,

உடலங்களைக் கடலிலிடுதிபோனலும் அவ்வாறுசெய்தலும்.

அந்தநெறியையவர்செய்யவரக்கன்மருத்தன்றனைக்கூவி
மூந்தநீபோயரக்கருடன்முழுதுங்கடலின்முடுக்கிடுகின்
சிந்தையொழியப்பிறரறியிற்சிரமும்வரமுஞ்சிந்துவனென்
றந்தவவன்போயரக்கருடன்முழுதுங்கடலினுள்ளிட்டான். (௨)

சீதையை விமானத்தேற்றிக் களங்காட்டுதல்.

தெய்வமானத்திடையேற்றிமனிசர்க்குற்றசெயலெல்லாம்
தய்யல்காணக்காட்டுமின்கள்கண்டாலன்றித்தனதுன்னத் .
தய்யநீங்காளென்றுரைப்பவரக்கர்மகளிரிரைத்தார்ப்ப
உய்யுமுணர்வுநீத்தாளைநெடும்போர்க்களத்தினிடையுய்த்தார். (௩)

இறந்தாரைக்கண்டு சீதைபுலம்புதல்.

கண்டாள்கண்ணுற்கணவனுருவன்றிபொன்றுங்காணாதாள்
உண்டாள்விடத்தையெனவுடலுமுணர்வுமுயிர்ப்புமுடனோய்ந்தாள்

௧. நெறி - தருமம்.

தண்டாமரைப்பூநெருப்புற்றதன்மையுற்றூடரியாதாள்
பெண்டானுற்றபெரும்பீழையுலகுக்கெல்லாம்பெரிதன்றே. (௪)

மங்கையழலும்வானாட்டுமயில்களழுதார்மழவிடையோன்
பங்கினுறையுங்குயிலழுதாள்பதுமமலர்மேன்மாதழுதாள்
கங்கையழுதாணாமடந்தையழுதாள்கமலத்தடங்கண்ணன்
தங்கையழுதாளிரங்காதவரக்கிமாருந்தளர்ந்தழுதார். (௫)

பொன்றாழ்குழையாடனையீன்றபூமாமடந்தைபுரிந்தழுதாள்
குன்றாமறையுந்தருமமுமெய்குழைந்துகுழைந்துவிழுந்தழுத
பின்றாதுடற்றும்பெரும்பாவமழுதபின்னென்பிறர்செய்கை
நின்றார்நின்றபடியழுதார்நினைப்புமுயிர்ப்புநீத்திட்டாள். (௬)

நினைப்புமுயிர்ப்புநீத்தாளைநீராற்றெளித்துநெடும்பொழுதின்
இனத்தினரக்கர்மடவார்களெடுத்தாருயிர்வந்தேங்கினாள்
கனத்தினிறத்தான்றனைப்பெயர்த்துங்கண்டாள்கயலைக்கமலத்தால்
சினத்தினலைப்பாளெனக்கண்ணைச்சிதையக்கையான்மோதினாள். (௭)

அடித்தாண்முலைமேல்வயிறலைத்தாளழுதாடொழுதாளனல்வீழ்ந்த
கொடித்தாளென்னமெய்சுருண்டாள்சொதித்தாள்பதைத்தாள்குலைவுற்றாள்
துடித்தாண்மின்போலுயிர்கரப்பச்சோர்ந்தாள்சுழன்றாடுள்ளினாள்
குடித்தாளுயரையுயிரோடுங்குழைத்தாளுழைத்தாள்குயிலன்னாள். (௮)

விழுந்தாள்புரண்டாளுடன்முழுதும்வியர்த்தாளுயிர்த்தாள்வெதும்பினாள்
எழுந்தாளிருந்தாண்மலர்க்கரத்தைநெரித்தாள்சிரித்தாளேங்கினாள்
கொழுந்தாவென்றாளயோத்தியர்தங்கோவேயென்றாளெவ்வுலகுந்
தொழுந்தாளரசேயோவென்றாள்சோர்ந்தாளாற்றத்தொடங்கினாள். (௯

வேறு

உறமேவியகாதலனுக்குடையார்
புறமேதுமிலாரொடுபூண்முலையாள்
மறமேபுரிவார்வசமாயினையோ
அறமேகொடியாயிதுவோவருடான். (௧௦

முதியாருணர்வேதமொழிந்தவலால்
கதியேதுமிலார்துயர்காணுதியோ
மதியேன்மதியேனுனைவாய்மையினால்
விதியோகொடியாய்விளையாடுதியோ. (௧

கொடியேனிவைகாணகிலேனுயிர்போன்
முடியாகமனேமுறையோமுறையோ
விடியாவிருள்வாயெனைவீசினையோ
அடியேனுயிரேயருளையகனே. (௧

எண்ணுமையலோடுமிருந்தவளின்
புண்ணியமேனிபொருந்திடவோ
மண்ணேருயிரேயிமையோர்வலியே
கண்ணேயமிழ்தேகருணாகரனே. (கங)

மேவிக்கனன்முன்மிதிலைத்தலையென்
பாவிக்கைபிடித்ததுபண்ணவநின்
ஆவிக்கொருகோள்வரவோவலர்வாழ்
தேவிக்கமிழ்தேமறையின்றெளிவே. (கச)

உய்யாளுயர்கோசலைதன்னுயிரோ
அய்யாவிளையோருயிர்வாழ்கிலரால்
மெய்யாவினையெண்ணிவிழுத்தகொடுங்
கய்கேசிகருத்திதுவோவெளிதே. (கரு)

தகைவாணகர்நீதவிர்வாயெனவும்
வகையாதுதொடர்க்கொருமான்முதலாப்
புகையாடியகாடுபுகுந்துடனே
பகையாடியவாபரிவேவதுவிலேன். (கசு)

இன்றீகலையேவிறலிவலிமைமான்
அன்றீயெனவும்பரிவோடடியேன்
நின்றீவதுநின்னைநெடுஞ்செருவில்
கொன்றீவதொர்தீமைதரித்தவினே. (கஎ)

மேதாவினையோய்விதியார்வினைவால்
போதாநெறியெம்மொடுபோதுறுநான்
மூதானவன்முன்னர்முடிக்கிடினும்
மாதாவுரையின்வழிநின்றனையே. (கஅ)

பூவுந்தளிருந்தொகுபொங்கணைமேல்
கோவுந்துயிலத்தருவாய்கொடியார்
ஏவின்றலைவந்தவிருங்கணையால்
மேவுங்குளிர்மெல்லணைமேவினையே. (க௯)

செய்யார்பெருவேள்விசிறப்பிநெடுஞ்
செய்யார்புனலூடிருந்தனையால்
மெய்யாகியவாசகமும்விதியும்
பொய்யானவென்மேனிபொருந்துதலால். (உ0)

இராமன்மீதுவிழுவாளெழுந்த சீதைக்குந் தீசடையுவமைகூறுதல்.

மழுவான்வரினும்பிளவாமனனுண்
டழுவேனினியின்றிடாறிடயான்

---

கரு. இளையோர் - இலக்குமணர்.

விழுவேனவன்மேனியின்மீதினெனா
எழுவானைவிலக்கியியம்பினனால். (உக)

வேறு.

மாடுறவணைத்துநின்றவனையெயிற்றரக்கிமாரைப்
பாடுறவற்றநோக்கிப்பாவையைத்தழுவிப்பற்றிக்
கூடினளென்னநின்றுசெவியிடைக்குறுகிச்சொன்னாள்
தேடியதவமேயென்னத்திரிசடைமறுக்கந்தீர்ப்பாள். (உஉ)

மாயமான்விடுத்தவாறுஞ்சனகனைவகுத்தவாறும்
போயமாநாகபாசம்பிணித்ததுபோனவாறும்
நீயமாகினைவாய்மானினைதியோநெறியிலாரால்
ஆயமாமாயமொன்றுமறிந்திலையன்னமன்னாய். (உங)

கண்டனகனவும்பெற்றநிமித்தமுமினைநாற்பும்
தண்டவானரக்கர்பாவச்செய்கைபக்தருமர்தாங்கும்
அண்டர்நாயகன்றன்வீரத்தன்மையுமயர்க்கலாமோ
புண்டரீகற்குமுண்டோவிறுதியிப்புலையர்க்கல்லால். (உச)

ஆழியானுக்கைதன்னினம்பொன்றுமறுக்கிலாமை
ஏழைகாண்டியன்றேயினையவன்வதனமின்னும்
வழிநாளிரவியென்னவொளிர்கின்றவுயிருக்கின்னல்
வாழியாற்கில்லைவானாமயங்கலைவேன்விலந்தாய். (உரு)

வீய்ந்தனன்வீரனென்னினுலகமோரேழுமேழும்
தீய்ந்துறுமிரவிபின்னுந்திரியுமோதெய்வமென்னும்
ஈய்ந்தனவெண்கணான்முன்னுயிரெலாம்வெருவுமன்னை
ஆய்ந்தவையுன்னபோதேயவருனாறமுமுண்டால். (உகா)

மாருதிக்கில்லையன்றேமங்கைநின்வரத்தினாலே
ஆருயிர்நீங்கலானுற்கற்புக்குமழிவுண்டாமே
சிரியதன்றிதொன்றுந்திசைமுகன்படையின்செய்கை
பெருமிப்பொழுதேதேவரெண்ணமும்பிழைப்பதன்றோ. (உஎ)

தேவரைக்கண்டேன்பைம்பொற்செங்காஞ்சிரத்திற்சேர்த்தி
மூவரைக்கண்டானன்னவிருவரைமுறையினோக்கி
ஆவலிப்பெய்துகின்றாயர்த்திலாஞ்சலன்னை
கூவலிற்புக்குவேலைகோட்படுமென்றுகொள்ளேல். (உஅ)

திரிசடைமொழிகேட்ட சீதைசிறிது ஆறுதலடைதல்.

மங்கலநீங்கினாளையாருயிர்வாங்கினாளை
நங்கையிக்கடவுண்மானத்தாங்குறுகவையிற்றன்றால்

செங்கையளாயதைதயல்சிறிதுயிர்தரிப்பதானுன். (௨௯)

அன்னைநீயுரைத்தவொன்றுமழிந்திலதாதலானே
உன்னையேதெய்வமாக்கொண்டித்தனைகாலமுய்ந்தேன்
இன்னமிவ்விரவுமுற்றுமிருக்கின்றேனிறத்தலென்பால்
முன்னமேமுடிந்ததன்றேயென்றனன்முனிநீத்தான். (௩௦)

காணலார்துறந்தேனில்லினன்மையினல்லார்க்கேய்ந்த
பூணலாந்துறந்தேனென்றன்பொருசிலைமேகநன்னைக்
காணலாமென்னுமாசைகடுக்கவென்னுவிகாத்தேன்
ஏணிலாவுடலினீங்கவெளிதெனக்கெனவுஞ்சொன்னான். (௩௧)

தய்யலையிராமன்மேனிதைத்தவெற்றடங்கணுளைக்
கய்களிற்பற்றிக்கொண்டார்விமானத்தைக்கடாவுகின்றார்
மெய்யுயிருலகத்தாகவிதியைபம்வலித்துவிண்மேல்
பொய்யுடல்கொண்டுசெல்லுநமனுடைத்துதர்போன்றார். (௩௨)

௨௨-வது பிராட்டிகளங்காண்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௯௬௫.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

---

இருபத்திமூன்றவது

## மருத்துமலைப்படலம்.

---

விபீடணன் போர்க்களமடைதல்.

போயினனடையவிப்பாற்புரிகெனப்புலவர்கோமான்
ஏயினகருமநோக்கியெய்தியவிலங்கைவேந்தன்
மேயினவுணவுகொண்டுமீண்டவையுறையுள்விட்ட
ஆயினவாகத்தான்வந்தமர்ப்பெருங்களத்தினுன். (௧)

நோக்கினன்கண்டான்பண்டிவ்வுலகங்கள்படைக்கநோற்றான்
வாக்கினன்மாண்டாரென்னவானரவீரர்முற்றும்
தாக்கினரெல்லாம்பட்டதன்மையையிடத்தைத்தானே
தேக்கினனென்னநின்றுதியங்கினனுணர்வுதீர்ந்தான். (௨)

விளைந்தவாறுணர்கிலாதான்வீங்கினன்வெதும்பினன்மெய்
உளைந்துளைந்துயிர்த்தானுவியுண்டிலையென்னவோய்ந்தான்
விளைந்தபேய்க்கணமுநாயுநரிகளுமிரியவந்தான்
இளங்கிளையோடுஞ்சாய்ந்தவிராமனையிடையிற்கண்டான். (௩)

---

௧௧. ஏண் - பெருமை.

என்பென்பதியாக்கையென்பதுயிரென்பதிவைகளெல்லாம்
பின்பென்பவல்லவேனுந்தம்முடைநிலையிற்பேரா
முன்பென்பவுளவென்றாலுமுழுவதுந்தெரிந்தவாற்றால்
அன்பென்பதொன்றின்றன்மையமரருமறிந்ததன்றால். (௪)

ஸ்ரீராமன் இறந்தவனல்லனென விபீடணனறிதல்.

ஆயினுமிவருக்கில்லையழிவெனுமதனாலாவி
போயினதில்லையாயாற்புலம்பலன்பொருமிப்பொங்கித்
தீயினுமெரியுசெஞ்சின்வெருவலாற்றெரியநோக்கி
நாயகன்மேனிக்கில்லைவடுவெனநடுக்கந்தீர்ந்தான். (௫)

அந்தணன்படையால்வந்ததென்பதுமாற்றலான்ற
இந்திரசித்தேமெய்தானென்பதுமவற்காக
நொந்தனனிராமனென்னுந்தன்மையுநொய்துமோகக்
சிந்தையினெண்ணியெண்ணித்தீர்வதோருபாயந்தேர்வான். (௬)

உன்னுறுதுன்பமூன்றவுற்றனவுறக்கமன்றோ
மதனரிதினுணர்ந்தபின்னைச்சிந்தனைதெரிவதன்றே
வள்ளலோதம்பிமாயவாழ்விலன்மாயவாழ்க்கைக்
கள்ளனுமென்றனென்னுமழையெனக்கலுழுங்கண்ணான். (௭)

பாசம்போயிற்றாற்பாலப்பதுமத்தோனபடையுமின்றே
நாசமபோயெய்துநம்பிதம்பிக்குநடுக்கமில்லை
வீசம்போர்க்களத்துவீழ்ந்தசேனையுமீளும்வெய்ய
நீசன்போர்வெல்வதுண்டோவென்றனங்கிலையினின்றான். (௮)

உணர்வதன்முன்னமின்னையுற்றுழியுதவற்கொத்த
துணைவர்களுஞ்சலில்லாருளரெனிற்றருவித்தோன்றக்
கொணர்குவென்விரைவினென்னுக்கொள்ளிபொன்றங்கைகொண்டான்
புணரியினுதிரவெள்ளக்கொள்ளத்துவிரைவிற்போனான். (௯)

வாய்மடித்திரண்டுகையுமுறுக்கித்தன்வயிரச்செங்கண்
தீயுகக்கனகக்குன்றிற்றிரண்டதோண்மழையைத்தீண்ட
ஆயிரகோடியானைப்பெரும்பிணத்தமளிமேலான்
காய்சினத்தருமனென்னுங்கடல்கடந்தானைக்கண்டான். (௧௦)

விபீடணன் அநுமனுடலம்புகளைக் களைந்து மேகசலத்தால்
முகங்கழுவிக் களையாற்றுதல்.

கண்டுதன்கண்களூடுமழையெனக்கலுழிவார
உண்டுயிரென்பதுன்னியுடற்கணையொன்றொன்றாக
விண்டுதிர்புண்ணினின்றுமெல்லெனவிரைவின்வாங்கி
கொண்டனீர்கொணர்ந்துகோலமுகத்தினைக்குளிரச்செய்தான். (௧௧)

௧. அந்தணன் - பிரமன்.

அனுமன் களைநீங்குதல்.

உயிர்ப்புமுன்னுதித்தபின்னருரோமங்கள்சிலிர்ப்பவூறி
வியர்ப்புளதாகக்கண்கள்விழித்தனமேனிமெல்லப்
பெயர்த்துவாய்புனல்வந்துறவிக்கலும்பிறந்ததாக
அயர்த்திலனிராமனும்மவாழ்த்தினனமரரார்த்தார். (௩௨)

அழுகையோடுவகையுற்றவீடணனுர்வகூரத்
தழுவினனவனைத்தானுமன்பொடுதழுவித்தக்கோய்
வழுவிலனன்றேவள்ளலெனறனன்வலியனென்றான்
தொழுதனனுலகமூன்றுந்தலையின்மேற்கொள்ளுந்தூயான். (௩௩)

அன்புதன்றம்பிமேலாத்தறவினைமயககவையன்
துன்பொடுந்துயிலனுனுணர்வினிதடொடர்ந்தபின்னை
என்புகுர்தெய்துமென்பதறிகிலமென்றலோடும்
தன்பெருந்தன்மைக்கொத்தசாம்பனைத்தலைபனென்றான். (௩௪)

அறிந்திலெனவனையாண்டுங்கண்டிலெனுவியாக்கை
பிறிந்திலனுளனென்றென்றுந்தெரிந்திலென்பெயர்ந்தேனென்று
செறிந்ததார்திருதர்வேந்தனுரைசெபக்காவின்செம்மல்
இறந்திறமவனுக்கின்றுளுடுதுமேடியென்றான். (௩௫)

அன்னவன்றன்னைக்கண்டாலானை யயரகர்க்கெல்லாம்
மன்னவவெம்மைமீட்டுவாழ்விக்கதமருசியல்லான்
என்னலுமுய்ந்தேமையவேதும்விரைவிலென்னுச்
சின்னெறியிருளிற்சென்றூர்சாம்பனைவிசியிற்சேர்ந்தார். (௩௬)

எரிகின்றழுப்பினுலுமேவுண்டோரவினுலும்
அரிகின்றதுன்பத்தாலுமாருயிர்ப்படக்கியொன்றும்
தெரிகின்றதில்லாமம்மர்ச்சிந்தையனெனினுஞ்செல்வர்
வருகின்றகவட்டையோர்ந்தாச்செவிகளாலவபிரத்தோனான். (௩௭)

அரக்கனோவென்னையாளுமண்ணலோவநுமன்றானோ
இரக்கமுற்றருளவந்தேவரோமுனிவரோயோ
வரக்கடவார்களல்லர்மாற்றலர்மலைந்துபோனூர்
புரக்கவுள்ளாரோவென்னுக்கருதினன்பொருமநீர்ந்தான். (௩௮)

வந்தயனின்றகுன்றின்வார்ந்துவீழநவிமானச்
சிந்தியகண்ணினீரரோங்குவார்சம்மைத்தேற்றி
அந்தமில்குணத்தீர்யாவானுகினிரென்றுளைய
உய்ந்தனமுய்ந்தேமென்றவீடணனுரையைக்கேட்டான் (௩௯)

மற்றயனின்றூன்யாவனென்னமாருதியும்வாழிக்
கொற்றவவநுமனின்றேன்றொழுதனெனென்றுகூற

---

௩௪. எத்தலை - எவ்விடம்.

இற்றிலமையவெல்லேமெழுந்தனமெழுந்தேமென்று
உற்றபேருவகையாலேயோக்கினுனூற்றமுற்றான். (உ0)

விரிஞ்சன்வெம்படையென்றாலும்வேதத்தின்வேதமன்ன
அரிந்தமன்றன்னையொன்றுமாற்றிலதென்னுமாற்றல்
தெரிந்தனென்முன்னேயன்னான்செய்ததென்றெரித்தியென்றான்
பெருந்தகைதன்பவெள்ளத்துயிலுளான்பெருமவென்றான். (உக)

அன்னவன்றன்மைகண்டாலாற்றுமேயாக்கைவேறே
இன்னுயிரொன்றேமூலத்திருவருமொருவரேயால்
இன்னதுகிடப்பத்தாழவிங்கினியிமைப்பின்முன்னர்க்
கொன்னியல்வயிரத்தோளாய்மருந்துபோய்க்கொணர்தியென்றான். ()

எழுபதுவெள்ளத்தோருமிராமனுமிளையகோவும்
முழுவதிவ்வுலகமூன்றூல்லறமூர்த்திதானும்
வழுவவின்மறையுமுன்னால்வாழ்ந்தனவாகுமைந்த
பொழுதிறைதாழாதென்சொனெறிதரக்கடிதுபோதி. (உ௩)

வேறு.

சாம்பன் மருந்துள்ள இடங்கூறுதல்.

பின்புனதிக்கடலென்னப்பெயர்ந்தற்பின்யோசனைகள்பேசகின்ற
ஒன்பதினுயிரங்கடந்தாலிமயமெனுங்குலவரையையுறுதியுற்றால்
தன்பெருமையோரிரண்டாயிரமுளதியோசனைபின்றவிரப்போனால்
முன்புளயோசனையெல்லாமுற்றினைபொற்கூடஞ்சென முறுதிமொய்ம்ப. (உச)

இம்மலைக்குமொன்பதினுயிரமுளதால்யோசனையினிடமென்னும்
செம்மலைக்குமுளவாயவத்தனையோசனைகடந்தாற்சென்றுகாண்டி
எம்மலைக்கும்பெரிதாயவடமலையையம்மலைமேலெண்ணின்
மொய்ம்மலைத்திரடோளாய்முப்பத்திராயிரயோசனையின்முற்றும். (உ௫)

மேருவினைக்கடந்தப்பாலொன்பதினுயிரமுளயோசனையைவிட்டால்
நோனுகிநீலகிரிதானிரண்டாயிரமுளயோசனையினிற்கும்
மாருதிமற்றதற்கப்பால்யோசனைநாலாயிரத்துமருந்துவைகும்
கார்வரையைக்காணுதிமற்றதுகாணவித்துயர்க்குக்கரையுங்காண்டி. (உ௬)

மாண்டாரையுய்விக்குமருந்தொன்றுமுடல்வேறுவகிர்களாகக் [ம்
கீண்டாலும்பொருந்துவிப்பதொருமருந்தும்படைக்கலங்கள்கிளைப்பதொன்று
மீண்டேயுந்தம்முருவேயருளுவதோர்மெய்ம்மருந்துமுளவீர
ஆண்டேகிக்கொணர்தியெனவடையாளத்தொடுமுரைத்தானறிவின்மிக்கான்

---

உச. பொற்கூடம் - ஏமகூடம். உ௫. வடமலை - மகாமேரு. உஎ. படைக்கலங்கள் கிளைப்பதொன்றும் - உடலிற்பதிந்த ஆயுதங்களை வெளிப்படுத்துவதொருமருந்தும். மீண்டேயும் - முற்றுமழிந்தபின்னர். தம்முருவே - பழைய வுருவினையே.

இன்னமருந்தொருநான்கும்பயோததியைக்கலக்கியஞான்றெழுந்ததேவர்
உன்னியமைத்தனர்மறைக்குமெட்டாதபராஞ்சுடரிவ்வுலகமூன்றும்
தன்னிருதாளுள்ளடக்கிப்பொலிபோழ்தின்பான்முரசஞ்சாற்றும்வேலை
அன்னதுகண்டியாவுதலுந்தொன்முனிவரவற்றியலெற்கறிவித்தாரால். (௨௮)

இம்மருந்துகாத்துறைவவெண்ணிலவர்ற்றெய்வங்களிரங்காயார்க்கும்
செய்ம்மருங்குபடரகில்லாநெடுநேமிப்படையுமவற்றுடனேநிற்கும்
பொய்ம்மருங்குமில்லாதாய்புரிகின்றகாரியத்தின்பொதுமைநோக்கிக்
கய்ம்மருங்குதொடர்ந்துன்னைக்காவாவென்றப்புறம்போய்க்காக்குமென்றான்

அனுமன் மருந்திற்கேகப் பேருருக்கோடல்.

ஈங்கிதுவேபணியாகினிறந்தோரும்பிறந்தோரேயெங்கோற்கியாதும்
நீங்கிடையூறெய்தாமற்றெநட்டுதிர்போயெனச்சொல்லியவரைத்தீர்ந்தான்
ஓங்கினன்வானெடுமுகட்டையுற்றனன்பொற்றோளிரண்டுந்திசையோடொக்க
வீங்கினவாகாயத்தைவிழுங்கினனேயெனவளர்ந்தான்வேதம்போல்வான்.

கோளோடுதாரகைகள்கோத்தமைத்தமணிபாரக்கோவைபோன்ற
தோளோடுதோளகலமாயிரயோசனையளவுசொல்லவொண்ணு
தாளோடுதான்பெயர்க்கவிடமிலதாயினவிலங்கைதடக்கைவீச
நீளோடுதிசைபோதாவிசைத்தெழுவானுருவத்தினிலையீதம்மா. (௩௧)

வால்விசைத்துக்கைநிமிர்த்துவாயினையுஞ்சிறிதகலம்வகுத்துமானக்
காணிலத்தினிடையூன்றியுறநெருக்கிக்கழுத்தினையுஞ்சுருக்கிக்காட்டித்
தோண்மயிர்க்குந்தளஞ்சிலிர்ப்பவிசைத்தெழுவானவ்விலங்கைதுளங்கிச்சூழ்ந்த
வேலையிற்புக்கழுந்தியதோர்மரக்கலம்போற்சரித்துலையவிசையபோனான். ()

அனுமன் மேலெழுந்து போதல்.

கிழிந்தனமாமழைக்குலங்கள்கீண்டதுநீண்டகல்வேலைகிழக்குமேற்கும்
பொழிந்தனமீன்றொடர்ந்தெழுந்தபொருப்பினமுந்தருக்குலமும் பிறவும்பொ
அழிந்தனவானவர்மானமாகாயத்திடைபனபோசனியென்ன. ங்கி
விழுந்தனநீர்க்கடலழுந்தவேறினமேற்கீழ்நினபோய்த்திசைகளெல்லாம். (௩௩)

பாய்ந்தனனங்கப்பொழுதேபருவரைகளனைப்பலவும்வடபாகத்துச்
சாய்ந்தனபேருடற்பிறந்தசண்டமாருதம்வீசத்தாதைசால
ஓய்ந்தனனென்றுரைசெய்யவிசும்பூடுபடர்கின்றானுறுவேகத்தால்
காய்ந்தனவேலைகண்மேகங்கரிந்தனவெந்தெரிந்தபெருங்கானமெல்லாம். (௩௪)

கடன்முன்னேமயிர்தோடக்கால்பின்னேதொடர்ந்தோடக்கடிதிற்செல்
வான், உடன்முன்னேசெலவுன்னங்கடைக்குழைவால் செலச்செலவனுருவை
நோக்கி, அடன்முன்னேதொடங்கியநாளாழ்கடல்சூழிலங்கையெனுமரக்கர்
வைகும், திடர்முந்நீர்க்கிடையறிந்தான்முரிந்ததாந்துயரென்றார்தேவரெல்
லாம். (௩௫)

௨௮. பயோததி - பயஉததி, பயம் - பால், உததி - கடல்.

மேகத்தின்பதங்கடந்துவெங்கதிருர்தன்கதிரும்விரைவிற்செல்லும்
மாகத்தினெறிக்கப்பால்வானமீன்குலம்வழங்கும்வரம்புநீங்கிப்
போகத்தினெறிகடந்தார்புகலிடங்கள்பிற்படப்போய்பூவின்வந்த
ஏகத்தந்தனனிருக்கையினிச்சேய்த்தன்றுமென்னவெழுந்துசென்றான்.

வானநாட்டுறைகின்றார்வயக்கலுழன்வல்விசையான்மாயன்வைகும்
தானநாட்டுறுகின்றானென்றுரைத்தார்சிலர்சிலர்கள்விரிஞ்சன்றான்றன்
ஏனநாட்டெழுகின்றானென்றுரைத்தார்சிலர்சிலர்களீசனல்லார்
போனநாட்டிடைபோகவல்லரோவிவன்முக்கட்புனிதனென்றார். (௩எ)

வேண்டுருவங்கொண்டெழுந்துவிளையாடுகின்றன்மெய்வேதநான்கும்
தீண்டுருவனல்லாததிருமாலேயிவனென்றார்தெரியநோக்கிக்
காண்டுமெனவிமைப்பதன்முன்கட்புலத்தைக்கடந்தகலுமின்னுங்காண்மின்
மீண்டுவருந்தாமல்லன்மீட்டுலகம்புகுமென்றார்மென்மேலுள்ளார். (௩அ)

உருவென்றார்சிலர்சிலர்கள்ஒளியென்றார்சிலர்சிலர்களொளிருமேனி
அருவென்றார்சிலர்சிலர்களண்டத்துக்கப்புறநின்றுலகமாக்கும்
கருவென்றார்சிலர்சிலர்கள்காற்றென்றார்சிலர்சிலர்கள்கடலைத்தாவிச்
செருவென்றானிலையொன்றுந்தெரியகிலாவருலகனைத்துந்தெரியுஞ்செல்வர்

வாசநான்மலரோன்றனுலகனவுமிரிந்தனமேல்வானமான
காசமாயினவெல்லாங்கரந்தகனதுருவிடையேகனகத்தோள்கள்
வீசவான்முகடுரிஞ்சவிசைத்தெழவானுடற்பிறந்தமுழக்கம்விம்ம
ஆசைகாவலர்தலைகள்பொதிரெறிந்தார்விதிரெறிந்ததண்டகோளம். (௪0)

வேறு

தொடுத்தநாண்மாலைவானோர்முனிவரேமுதலதொல்லோர்
அடுத்தநாண்மறைகளோதியாய்ந்தநாளுணர்வேர்தன்
கொடுத்தநாளனந்துகொண்டதுறளனூர்குறியபாதம்
எடுத்தாளொத்ததண்ணலெழுந்தநாளுலகுக்கெல்லாம். (௪௧)

தேவருமுனிவர்தாமுஞ்சித்தருந்தெரிவைமாரும்
மூவுலகிடையுளோருமுவகையாற்றொடர்ந்துமொய்த்தார்
தூவினமணியுஞ்சாந்துஞ்சுண்ணமுமலருந்தொக்குப்
பூவுடையமரர்தெய்வத்தருவெனவிசும்பிற்போனான். (௪௨)

இமையமால்வரையையுற்றானங்குளவிமைப்பிலோரும்
சமையுடைமுனிவர்மற்றுமறனெறிகலந்தோரெல்லாம்
அமைகநின்கருமமென்றுவாழ்த்தினாரதனுக்கப்பால்
உமையொருபாகன்வைகுங்கயிலைகண்டுவகையுற்றான். (௪௩)

௪௧. தொடுத்தநாண்மாலை - கட்டிய அன்றலர்ந்தமாலை.
அண்ணலெழுந்தான் - அனுமான் மருந்துகொணர எழுந்தகாலத்து,

### சிவன் அனுமனைச் சுட்டிக்காட்டி உமைக்குரைத்தல்.

வடகுணதிசையிற்றோன்றுமழுவலாளண்டுவைகும்
தடவரையதனைநோக்கித்தாமரைச்செங்கைகூப்பிப்
படர்குவான்றன்னையன்னபரமனும்பரிவிற்பார்த்துத்
தடமுலையுமைக்குக்காட்டிவாயுவின்றநயனென்றான். (௪௪)

என்னவனெழுந்ததன்மையென்றுலகீன்றாள்கேட்ப
மன்னவனிராமன்றூதன்மருந்தின்மேல்வந்தான்வஞ்சர்
தென்னகரிலங்கைத்தீமைதீர்ப்பதுதிண்ணஞ்சேர்ந்து
நன்னுதனாளும்வெம்போர்காணாதுநாளையென்றான். (௪௫)

நாமயோசனைகள்கொண்டதாயிரநடுவுநீங்கி
ஏமகூடத்தினும்பரெய்திநின்றிறுதியில்லாக்
காமமேறுகருஞ்செல்வக்கடவுளரீட்டங்கண்டான்
நேமியின்விசையிற்செல்வானிடதத்தினெற்றியுற்றான். (௪௬)

எண்ணுக்குமளவிலாதவறிவினோரிருந்துநோக்கும்
கண்ணுக்குங்கருணைத்தெய்வமனத்திற்குங்கடியனானான்
மண்ணுக்குந்திசைகள்வைத்தவரம்பிற்குமலரோன்வைகும்
விண்ணுக்குமளவையாயமேருவின்மீதுசென்றான். (௪௭)

யாவதுநிலைமைத்தன்மையின்னதென்றிமையாநாட்டத்
தேவருந்தெரிக்கிலாதவடமலைக்கும்பர்சென்றான்
நாவலம்பெருந்தீவென்னுநளிர்கடல்வளாகவைப்பில்
காவன்மூன்றுலகமோதுங்கடவுண்மாமரத்தைக்கண்டான். (௪௮)

அன்னமாமலையினும்பருலகெலாமமைத்தவண்ணல்
நன்னகரதனைநோக்கியதனடுநாப்பணமைப்
பொன்மலர்ப்பீடந்தன்மேனான்முகன்பொலியத்தோன்றும்
தன்மையுங்கண்டுகையால்வணங்கினான்றநம்போல்வான். (௪௯)

ஆயதன்வடகீழ்பாகத்தாயிரமருக்கான்ற
காய்கதிர்ப்பரப்பியைந்துகதிர்முகக்கமலங்காட்டித்
தூயபேருலகமூன்றுந்தூவியமலரிற்சூழ்க
சேயிழைபாகத்தெண்டோளொருவனைவணக்கஞ்செய்தான். (௫௦)

தருவனமொன்றுவானோர்தலைத்தலைமயங்கித்தாழப்
பொருவருமுனிவர்வேதம்புகழ்ந்துரைமியாதைபொங்க
மருவிரிதுளவமோலிமாநிலக்கிழத்தியோடும்
திருவொடுமிருந்தமூலத்தேவையும்வணக்கஞ்செய்தான். (௫௧)

௪௫. உலகீன்றாள் - உலகமாதா. ௪௮. கடவுண் மாமரத்தைக்கண்டான் - தெய்வத்தன்மைவாய்ந்த சம்புவிருக்கத்தினைத் தரிசித்தான். சம்பு - நாவல். ௫௦. தூவிய - அருச்சித்த. ௫௧. மூலத்தேவையும் - உலக காரணனாகிய திருமாலையும்.

சந்திரனனையகொற்றத்தனிக்குடைதலையிற்றாகச்
சுந்தரமகளிரங்கைச்சாமரைதென்றலாவ
அந்தரவானநாடரடிதொழமுரசமார்ப்ப
இந்திரனிருந்ததன்மைகண்டுவந்திறைஞ்சிப்போனான். (௩௨)

பூவலர்மரத்தைப்போர்ப்பப்பொற்பகம்விரிந்துபொங்கும்
தேவர்தமிருக்கையானமேருவின்சிகரச்சேர்ப்பின்
மூவகையுலகுஞ்சூழ்ந்தமுராட்டிசைமுறையிற்றாங்குங்
காவலரெண்மர்நின்றதன்மையுந்தெரியக்கண்டான். (௩௩)

அத்தடங்கிரியைநீங்கியத்தலையடைந்தவண்ணல்
உத்தரகுருவையுற்றானொளியவன்கதிர்களூன்றிச்
செற்றியவிருளின்றாக்கிவிளங்கிச்செயலைநோக்கி
வித்தகன்விடிந்ததென்னாமூடர்ந்ததென்மேகமென்றான். (௩௪)

ஆதியானுணராமுன்னமருமருந்துதவியல்லிற்
பாதியாலனையதுன்பமகற்றவாம்பாவித்தேற்றுச்
சோதியானுதயஞ்செய்தானுற்றதோர்துணிதலாற்றேன்
ஏதியான்செய்வதென்னாவிடருற்றானிணையிலாதான். (௩௫)

காற்றிசைசுருங்கச்செல்லுங்கடுமையான்கதிரின்செல்வன்
மேற்றிசையெழுவானல்லன்விடிந்ததுமன்றுமேரு
மாற்றினன்வடமாற்றோன்றுமன்பதுமறைகள்வல்லோர்
சாற்றினரென்னத்துன்பந்தணிந்தனன்றவத்தின்மிக்கான். (௩௬)

இருவரேதோன்றியென்றுமீறிலாவாயுளெய்தி
ஒருவரோடொருவருள்ளமுயிரொடுமொன்றேயாகிப்
பெருவருமின்பந்துய்த்துப்புண்ணியம்புரிந்தோர்வைகும்
திருவுறைகமலமன்னநாட்டையுந்தெரியக்கண்டான். (௩௭)

வன்னிநாட்டியபொன்மௌலிவானவன்மலரின்மேலான்
கன்னிநாட்டிருவைச்சேருங்கண்ணனுமானுங்காணி
சென்னிநாட்டெரியல்வீரன்றியாகவிநோதன்றெய்வப்
பொன்னிநாட்டுவமைவைப்பைப்புலன்கொளநோக்கிப்போனான். (௩௮)

விரியவன்மேருவென்னும்வெற்பினின்மீதுசெல்லும்
பெரியவனயனார்செல்வம்பெற்றவன்பிறப்பிற்போந்தான்
அரியவனுலகமெல்லாம்மளந்தநாள்வளர்ந்துதோன்றும்
கரியவனென்னநின்றநீலமால்வரையைக்கண்டான். (௩௯)

அற்குன்றவலங்குசோதியம்மலையகலப்போனான்
பொற்குன்றமனையதோளானோக்கினான்புலவன்சொன்ன

---

௩௪. செற்றிய - நெருங்கிய. ௪௦. புலவன் - சாம்பவன்.

நற்குன்றமதனைக்கண்டாலுணர்ந்தனளுகமுற்ற
எற்குன்றவெறியுந்தெய்வமருந்தடையாளமென்ன. (௯0)

அனுமன் சஞ்சீவி மலையைக்காண்டல்.

பாய்ந்தனன்பாய்தலோடுமம்மலைபாதலத்துச்
சாய்ந்தது காக்குந்தெய்வஞ்சலித்தனகடுத்துவந்து
காய்ந்தனேநீதான்யாவன்கருத்தென்கொல்கழறுகென்ன
ஆய்ந்தவனுற்றதன்மையவற்றினுக்கறியச்சொன்னான். (௯க)

அனுமனைத் திருவாழிகன்டு செல்லுதல்.

கேட்டனவய்யவேண்டிற்றியற்றிப்பின்கெடாமலெம்பால்
காட்டெனவுணர்த்திவாழ்த்திக்கார்தனகமலக்கண்ணன்
வாட்டலைநேமிதோன்றிமறைந்ததுமண்ணினின்றும்
தோட்டனனதுமன்மற்றைக்குன்றினைவயிரத்தோளால். (௯உ)

வேறு.

அனுமன் சஞ்சீவிமலையைக் கையிலேந்தி வருதல்.

இங்குநின்றின்னனமருந்தென்றெண்ணினால்
சிங்குமாற்காலமென்றுணர்ந்தசிந்தையான்
அங்கதுவேரொடுமங்கைதாங்கினான்
பொங்குநல்விசும்பிடைக்கடிதுபோகுவான். (௯௩)

சஞ்சீவிமலையினகலநீளம்.

ஆயிரயோசனையகலமீதுயர்ந்
தாயிரயோசனையாழ்ந்ததம்மலை
ஏயெனுமாத்திரத்தொருகையேந்தினான்
தாயினனுலகெலாந்தவழ்ந்தசீர்த்தியான். (௯௪)

சாம்பவிபீடணர்களால் இராமன்விழித்தலும் பிரலாபமும்.

அத்தலையன்னவனணையவாந்துணை
இத்தலையிருவரும்விரைவினெய்தினர்
கைத்தலத்தாவடிவருடுங்காலையின்
உத்தமற்குற்றதையுணர்த்துவாமரோ. (௯௫)

வண்டனமடந்தையர்மனத்தைவேரொடும்
கண்டனகொளவருங்கருணைத்தாமெனக்
கொண்டனகொடுப்பனவாங்கள்கோனிலாப்
புண்டரீகத்துணைதருமம்பூத்தன. (௯௬)

---

௯உ. தோட்டனன் - எடுத்தான் இதுகீடுமிடத்துநீட்டல். ௯௬. வண்டன - வண்டையொப்ப. தருமம்பூத்தன - அறம்போலவலர்ந்தன.

நோக்கினன்காடிகட்கரசரோன்புகழ்
ஆக்கியமிருதனுமழுதகண்ணினர்
தூக்கியதலையினர்தொழுதகையினர்
ஏக்கமுற்றருகிருந்திரங்குவார்களை. (௬௭)

ஏவியகாரியமியற்றியெய்தினை
கோவிலைகொல்லெனநோக்கிவீடணற் .
றூவரும்பெரும்புகழ்சாம்பன்றன்னையும்
ஆவிவந்தனைகொலென்றருளினனரோ. (௬௮)

ஐயன்மீர்நமக்குற்றவழிவிதாதலின்
செய்வகைபிறிதிலையுயிரிற்றீர்ந்தவர்
உய்கிலரினிச்செயற்குரியதுண்டெனின்
பொய்யிலீர்புகலுதிர்புலமையுள்ளத்தீர். (௬௯)

சீதையென்றொருத்தியாலுன்னர்தேம்பிய
பேதையென்சிறுமையாலுற்றபெற்றிமை
யாதெனவுணர்த்துகேனுலகொடமர்வுறக்
காதைவன்பழியொடுதிருத்திக்காட்டினேன். (௭௦)

மாயையின்மானெனவெம்பிவாய்மையால்
தூயனவுறுதிகள்சொன்னசொற்கொளேன்
போயினன்பெண்ணுரைமறுதபோகலால்
ஆயதிப்பழியுடையானியன்பினீர். (௭௧)

கண்டனெனிராவணன்றன்னைக்கண்களால்
மண்டமர்புரிந்தனென்வலியினாலுயிர்
கொண்டிலெனுறவெலாங்கொடுத்துமானநான்
பண்டுடைத்தீவினைபயந்தபண்பினால். (௭௨)

தேவர்தம்படைக்கலந்தொடுத்துத்தீயவன்
சாவதுகாண்டுமென்றினவல்சாற்றலும்
ஆவதையுணர்ந்திலனழிவதென்வயின்
மேவுதலுறவதோர்விதியின்வெம்மையால். (௭௩)

நின்றிலெனுடனெறிபடைக்குரீதியால்
ஒன்றியபூசனையமைக்கவுன்னினேன்
பொன்றினர்நமரெலாமினவல்போயினன்
வென்றிலனரக்கனைவினையின்மேன்மையால். (௭௪)

ஈண்டிவணிருந்திவையியம்புமேழைமை
வேண்டுவதன்றினியமரின்வீடிய

௭௩. வயின் - பக்கம்.

ஆண்டகையன்பரையமரர்நாட்டிடைக்
காண்டலோலம்பிறகண்டதில்லையால். (எரு)

எம்பியைத்துணைவரையிழந்தபாவினி
வெம்புபோரக்கரைமுறுக்கிவேரறுத்
தம்பினினிராவணனுவிபாழ்படுத்
தும்பருக்குதவிமேலுறுவதென்னரோ. (எசு)

இனையவனிறந்தபின்னைவருமென்னெனக்
கனவறுசீர்த்தியென்னறிவென்னாண்மையென்
வினையுறுசுற்றமென்னரசென்சேண்மையென்
விளைவுதானென்மறைவிதியென்மெய்ம்மையென். (எஎ)

இரக்கமும்பாழ்படவெம்பியீறுகண்
டரக்கரைவென்றுநின்றாண்மையாள்வெனேல்
மரக்கண்வன்கள்வனென்வஞ்சனேனினிக்
கரக்குமதல்லதோர்கடனுண்டாகுமோ. (எஅ)

தாதையையிழந்தபின்சடாயுவிற்றபின்
காதலின்றுணைவருமுடியக்காத்துழல்
கோதறுதம்பியும்விளியக்கோளிலன்
சீதையையுகந்துளனென்பர்சிறியோர். (எகூ)

வென்றனனரக்கரைவேரும்வீந்தறக்
கொன்றனனயோத்தியைக்குறுகினேன்குணத்
தின்றுணைத்தப்பியையின்றியானுளேன்
அன்றரசாளுமாசாலநன்றரோ. (அ0)

படியினதாதலின்யாதும்பார்க்கிலன்
முடிகுவெனுடனெனமுடுகிக்கூறலும்
அடியிணைவணங்கியசாம்பனுழியாய்
நொடிகுவதுளதெனநுவல்வதாயினன். (அக)

உன்னைநீயுணர்கிலையடியனேனுனை
முன்னரேயறிகுவேன்மொழிதநீதிது
என்னெனினிமையவரெண்ணக்கினமாம்
பின்னரோதெரிகுதிதெரிவில்பெற்றியாய். (அஉ)

அம்புயத்தவன்படையாதறேறினேன்
உம்பியையுலப்பருமுருவையூன்றிட
வெம்புவெங்களத்திடைவிழுந்தவென்றியால்
எம்பெருத்தலைவவிதென்னமுண்மையால். (அங)

---

அங. அம்புயத்தவன் - பிரமன், அம்புயம் - தாமரை.

அன்னவன்படைக்கலமமார்தானவர்
தன்னையும்விடினுயிர்குடிக்குந்தற்பர
உன்னையொன்றிழைக்கிலதொழிந்தநீங்கிய
தின்னமுழுவமையொன்றெண்ணவேண்டுமோ. (அ௪)

பெருந்திறலநுமனீண்டுணர்வுபெற்றனான்
அருந்துயர்முடிக்குறுமவாவினூற்றலான்
மருந்திறைப்பொருதினிற்கொணருமவாய்மொழி
பொருந்தினன்வடதிசைகடிதுபோயினான். (அ௫)

பனிவரைகடந்தனன்பருப்பதங்களின்
தனியரசதன்புறந்தவிர்ந்துசார்ந்தனான்
இனியொருகணத்தின்வந்தெய்துமீண்டுறு
துனிவருதுன்பநீதுடைத்திதொல்லையோய். (அ௬)

யானலாவெந்தையாயுலகையீன்றனான்
தானலாற்சிவனலாவேனைமிதாங்கிய
கோனலால்யாவருமுணருங்கோளிலா
வேனிலான்மேனியாய்மருந்தைமெய்யுற. (அ௭)

ஆர்கலிகடைந்தநாளமிழ்தின்வந்தன
கார்நிறத்தண்ணறன்னேமிகாப்பன
மேருவினுந்தாருவின்மேலுள
யாருமற்றுணர்கிலாவரணமெய்தின. (அஅ)

தோன்றியநாண்முதல்யாருங்கொட்டில
வான்றபேரண்ணலையதனிருந்தற்றுச்சேன்
மூன்றெனவொன்றியவுலகமுன்னைநாள்
ஈன்றவனிறப்பினுமாவியீயுமால். (அ௯)

சல்லியமகற்றுவதொன்றுசந்துகள்
புல்லுறப்பொருத்துவதொன்றுபோயின
நல்லுயிர்நல்குவதொன்றுமான்னிறம்
தொல்லையதாக்குவதொன்றுதொல்லையோய். (௯0)

வருமதுதிண்ணநீவருந்தன்மாருதி
தருநெறிதருமமேகாட்டத்தாழ்கிலன்
அருமையதன்றெனவடிவணங்கினான்
இருமையுந்துடைப்பவனேம்பலெய்தினான். (௯௧)

அ௪. தற்பர - அந்தமுதன்மையினையுடையாய். அ௭. கோளிலா - கொள்கையில்லாதன. மருந்துமெய்யுற - மருந்துகள் உண்மையாக. மருந்தையென்றது ஐயிழநுடைக்குற்றியலுகரம். அஅ. அரணம் - காவல்.

பொன்மலைமீதுபோய்ப்போகபூமியின்
நன்மருந்துதவுமென்றுரைத்தநல்லுரைக்
கன்மயமில்லையென்றயிர்ப்புநீங்கினேன்
என்னலும்வடதிசையெழுந்ததங்கொலி. (கஉ)

கடல்கிளர்ந்தெழுந்துமேற்படர்ந்தகார்வரை
இடையிடைபறிந்துவிண்ணேறவிற்றிடை
தடையிலதுடற்றுறுசண்டமாருதம்
வடதிசைதோன்றியமயக்கம்வந்ததால். (கங)

மீன்குலங்குலைந்துகவெயிலின்மண்டிலம்
தான்குலைந்துயர்மதிதழுவத்தன்னுழை
மான்குலம்வெருக்கொளமயங்கிமண்டிவான்
தேன்குலங்கலங்கியாறவிற்சென்றவால். (கச)

வேர்த்துணர்தொடுவிசும்பைமீச்செலப்
போர்த்தனமலையொடுமானுமுன்புபோல்
தூர்த்தனவேலையைக்காலின்றோன்றலும்
ஆர்த்தனனனையவாரந்தையாற்றுவான். (கரு)

மழைகளுங்கடல்களுமற்றுமுற்றுமண்
உழையவும்விசும்பவுமொலித்தற்கொத்தன
குழைஇயினகுமுறினகொள்கைகொண்டதால்
உழுவையின்சினத்தவனார்த்தவோசையே. (கசு)

எறிசுடர்ப்பெருங்கடல்கடையவேற்றகான்
செறிசுடர்மந்தரந்தருதிசென்றென
வெறிதுகோலெனக்கொடுவிசும்பின்மீச்செலும்
உறுவலிக்கலுழனேயொத்துத்தோன்றினன். (கஎ)

பூதலத்தரவொடுமலைந்துபோனநாள்
ஓதியவென்றியனுடற்றுமூற்றத்தன்
ஏதமிலங்கையங்கிரிகொடெய்திய
தாதையுமொத்தனனுவமைதாழ்க்கிலான். (கஅ)

தோன்றினனென்னுமச்சொல்லின்முன்னம்வர்
தூன்றினனிலத்தடிகடவுளோங்கறன்
வான்றனிநின்றதுவஞ்சருர்வர
என்றிலதாகலினநுமனெய்தினன். (ககூ)

வந்தனன்மருந்தினைமருத்துவானவன்
சிந்தையிற்பெருமகிழ்சிறப்பச்சேர்ந்துறீஇ

கஎ. உறுவலி - வன்மைபொருந்திய. கஅ. தாதை - வாயுதேவன்.

அந்தரத்தருக்கன்மாமகனொடாயவர்
வந்திரைத்தார்த்தெழும்வகைசெய்தானரோ. (௬௦௦)

இலக்குமணன் முதலியோர் உயிர்பெற்றெழுதல்.

காற்றவன்றசைத்தலுங்கடவுணாட்டவர்
போற்றினர்விருந்தவந்திருந்தபுண்ணியர்
ஏற்றமும்பெருவலியழகொடெய்தினார்
கூற்றினைவென்றதம்முருவுங்கூடினார். (௬௦௧)

அரக்கர்தம்யாக்கைகளாழிவிலாழியில்
கரக்கமற்றொழிந்தனவொழியக்கண்டன
மாக்கலமுதலவுமுய்ந்துவாழ்ந்தன
குரக்கினமுய்ந்ததுகூறல்வேண்டுமோ. (௬௦௨)

கழன்றனநெடுங்கணைகழன்றபுண்கடுத்
தழன்றனகுளிர்ந்தனவங்கஞ்செங்கண்கள்
சுழன்றனவுலகெலாந்தொழுவதொங்கலின்
குழன்றெழுங்குஞ்சியானுணர்வுங்கூடினான். (௬௦௩)

யாவருமெழுந்தனரார்த்தவேழ்கடற்
றூவரும்பேரொலிசெவியிற்சார்தலும்
தேவர்கள்வாழ்த்தொலிகேட்டசெங்கணான்
ஏவதீங்கினனெனவிளவலோங்கினான். (௬௦௪)

இராமன் இலக்குமணனைக்கட்டித்தழுவி மகிழ்வுறல்.

ஓங்கியதம்பியையுயிர்வந்தன்னுற
வீங்கியதோள்களாற்றழீஇவெந்துயர்
நீங்கினனிராமனுமுலகினின்றில
நீங்குளதேவருமதக்கஞ்சிந்தினார். (௬௦௫)

அரம்பையராடினாரமிழ்தவேழிசை
நரம்பியல்கின்னரமுதலனன்மையே
நிரம்பினவுலகெலாமுவகைநெய்விழாப்
பரம்பினமுனிவரர்வேதம்பாடினார் (௬௦௬)

பிரமாத்திரம் இராமனைவணங்கித் தன்னிடஞ்சேறல்.

உந்தினபின்கொலையொழிவிலுண்மையும்
தந்தனையநுதினக்குச்சான்றெனாச்
சுந்தரவில்லியைத்தொழுதருழுவர்
அந்தணன்படையுநின்றயர்ந்துபோயதால். (௬௦௭)

௬௦௨. மாக்கலமுதலவும் - கப்பல்முதலியனவும்.
௬௦௭. சுந்தரவில்லியை - அழகியவிற்படையினையுடைய இராமனை.

வேதநின்றார்த்தனவேதவேதியர்
போதநின்றார்த்தனபுகழுமார்த்தன
ஓதநின்றார்த்தனவோதமுன்னுறச்
சீதநின்றார்த்தனதேவர்சிந்தனை. (௧0௮)

வேறு.

ஆயகாலையினமரரார்த்தெழத்
தாயினன்பனைத்தழுவினான்றனி
நாயகன்பெருந்துயரநாமறத்
தூயகாதனீர்துளங்குகண்ணினான். (௧0௯)

எழுதுகுங்குமத்திருவினேந்துகோ
டுழுதமார்பினனுருகியுள்ளுறத்
தருவிநிற்றலுந்தாழ்ந்துதாளுறத்
தொழுதமாருதிக்கினையசொல்லினான். (௧௧0)

இராமன் அனுமானைப் புகழ்தல்.

முன்னிற்றோன்றினோர்முறையினீங்கல
என்னிற்றோன்றியதுயரினீறுசேர்
மன்னிற்றோன்றினேமுன்னமாண்டுளேம்
நின்னிற்றோன்றினேநெறியிற்றோன்றினாய். (௧௧௧)

அழியுங்காற்றருமுதவியையனே
மொழியுங்காற்றருமுயிரின்முற்றுமே
பழியுங்காத்தரும்பகையுங்காத்தெமை
வழியுங்காத்தனைமறையுங்காத்தனை. (௧௧௨)

தாழ்விலங்கிறைப்பொழுதுதக்கதே
வாழியெம்பிமேலன்புமாட்டவான்
ஊழும்வீயுமென்பகர்வதெல்லைநாள்
ஊழிகாணுநீயுதவினாயரோ. (௧௧௩)

இன்றுவீகலாதெவருமெம்மொடு
நின்றுவாழுகாணெடிதுநல்கினாய்
ஒன்றுமின்னனோயுறுகிலாதநீ
என்றும்வாழ்தியாலினிதெனேவலால். (௧௧௪)

மற்றையோர்களுமநுமன்வண்மையால்
பெற்றவாயுளர்பிறந்தகாதலார்

௧௧௧. நின்னிற்றோன்றினேம் - நின்னிடத்துப்பிறந்தேம்.

௧௧௩. எல்லைநாள்ஊழிகாணுநீ - உலகமுடிவுகாலத்தழியாதிருந்து பிரளய தரிசனஞ்செய்யவேண்டியநீ. ௧௧௫. வண்மையால் - வள்ளற்றன்மையால்.

சுற்றமேயினர்தொழுதுவாழ்த்தினர்
உற்றவாறெலாமுணரக்கூறினன். (கசுஙு)

சாம்பன் அனுமனை நீ சஞ்சீவிமலையை முன்னிருந்த இடத்திலேயே கொண்டு வைத்துப்போனல்.

உய்த்தமாமருந்துதவவொன்னலார்
பொய்த்தசிந்தையாரிறதல்பொய்க்குமால்
மொய்த்தகுன்றையம்மூலவூழின்வாய்
வைத்துமீடியால்வரம்பிலாற்றலாய். (கசுக)

சஞ்சீவிமலையை அனுமன் இருந்த இடத்திலிருந்தச் செல்லுதல்

என்றுசாம்பவனியம்பவீரரோ
நன்றுசாலவென்றுன்றராழிசை
சென்றுமீள்வனென்றுணர்ந்துதெய்வமாக்
குன்றுதாங்கியக்குரிசில்போயினன். (கசுஎ)

உங - வது. மருந்துமலைப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஎஎஉ.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

இருபத்துநான்காவது

## களியாட்டுப்படலம்.

இன்னதித்தலையதாகவிராவணனெழுந்துபொங்கித்
தன்னையுங்கடந்துநீண்டவுவகையன்சமைந்தநீதம்
இன்னாமுதல்வர்பாடமுகத்திடைக்கிடந்தகெண்டைக்
கன்னிநன்மயிலனாரைநெடுங்களியாட்டக்கண்டான். (க)

அரம்பையர்விஞ்சைமாதரரக்கியரவுணர்மாதர்
குரும்பையங்கொங்கைநாகர்கோதையரியக்கர்கோதில்
கரும்பினுமினியசொல்லார்சித்தர்தங்கன்னிமார்கள்
வரம்பறுசும்மையோர்கண்மயிற்குலமருளவந்தார். (உ)

மேனகைவிசையவாட்கட்டிலோத்தமையரம்பைமெல்லென்
தேனகுமழலையின்சொலுருப்பசிமுதலதெய்வ
வானகமகளிர்வந்தார்சில்லரிச்சதங்கைமாழ்கி
ஆனகமுரசஞ்சங்கமுருட்டொமிரட்டவாடி. (ங)

கசுக. உய்த்தமாமருந்து உதவ-நீ கொண்டுவந்த இச்சஞ்சீவியானதுயிர் கொடுக்க. உ. குரும்பை - தெங்கிளநீர்.

தோடுண்டசுருளுந்தங்குங்குழைகளுஞ்சுருளிற்றென்றும்
ஏடுண்டபசும்பொற்பூவுந்திலதமுமிலவச்செவ்வாய்
மூடுண்டமுறுவன்முத்துமுள்ளுண்டமுளரிச்செங்கட்
காடுண்டுபுகுந்ததென்னமுனிந்ததுகறைவெண்டிங்கள். (௪)

முளைக்கொழுங்கதிரின்கற்றைமுறுவல்வெண்ணிலவுமூரி
ஒளிப்பிழம்பொழுகும்பூணினுமிழிளவெயிலுமொண்பொன்
விளக்கையும்விளக்குமேனிமிளிர்கதிர்ப்பரப்பும்வீசி
வளைத்தபேரிருளுங்கண்டோரறிவெனமருளுமாதோ. (௫)

நற்பெருங்கல்விச்செல்வகலையறுநெறியைநண்ணி
முற்பயமுணர்ந்ததூயோர்மொழியொடும்பழகிமுற்றிப்
பிற்பயனுணர்தறேற்றுப்பேதைபோல்வஞ்சன்செய்த
கற்பனையென்னவோடிக்கலந்ததுகள்ளின்வேகம். (௬)

பலபடமுறுவல்வந்துபயந்தனபனித்தமெய்வேர்
இலவிதழ்துடித்தமுல்லையெயிறுவெண்ணிலவையீன்ற
கொலைபயினயனவேலின்கொழுங்கடைசிவந்தகொற்றச்
சிலைநிகர்புருவநெற்றிக்குனித்தனவிளர்த்தசெவ்வாய். (௭)

கூந்தலம்பாரக்கற்றைக்கொந்தளக்கோலக்கொண்டல்
ஏந்தகலல்குற்றேரையிகந்துபோயிறங்கயாணர்ப்
பூந்துகிலோடும்பூசன்மேகலைசிலம்புபூண்ட
மாந்தளிரெய்தநொய்தின்மயங்கினர்மழலைச்சொல்லார். (௮)

சோத்தமேகலையினோடுந்துகின்மணிக்குறங்கைக்கூடக்
காத்தனகூந்தற்கற்றையற்றவத்தன்மைகண்டு
வேத்தவைகீழோருங்கீழ்மையேவிளைத்தார்மேலோர்
சீர்த்தவர்செய்யத்தக்ககருமமேசெய்தாரென்ன. (௯)

பாணியிற்றள்ளிக்காலமாத்திரைபடாதுபட்ட
நாணினமுறையிற்செல்லாதொருவழிநடையிற்செல்லும்
ஆணியினழிந்தபாடனறவெனவாங்கவேடன்
தூணியினடைத்தவம்பிற்கொடுந்தொழிலுறந்தகண்ணார். (௧௦)

வங்கியம்வருத்தகானமாறுகோண்மழலைமாறச்
சங்கையில்பெரும்பாணூற்றநிறத்துறைநிரம்பித்தள்ளச்
செங்கவினமிழ்கிளேறுமொளியளிதேறலன்ன
வெங்குரலெடுத்தபாடல்விளித்தனர்மயக்கம்வீங்க. (௧௧)

ஏனையபிறவுங்கண்டார்க்கிந்திரசாலமென்னத்
தானவையுருவிற்றோன்றும்பாவனைத்தகைமைசான்றோர்

௬. பிற்பயன் - பின்னாதன்பொருள். ௯. கீழோரும் - ஈனர்களும்.
௧௦. பாணி - தாளம்.

மானமர்நோக்கினாரைமைந்தரைக்காட்டிவாயால்
ஆனையைவிளம்பித்தேரையவியைத்தியற்றியுற்றார். (கஉ)

அழுகுவார்நகுவார்பாடியாடுவாராயினாரைத்
தொழுகுவார்துயில்வார்தள்ளித்தூங்குவார்துவர்வாயிற்றேன்
ஒழுகுவாரொல்கியொல்கியொருவர்மேலொருவர்புக்கு
முழுகுவார்மூரிவாட்கண்முகிழ்த்திடமூரிபோவார். (கங)

உயிர்ப்புறத்தற்றதன்மையுணர்த்தினருள்ளத்துள்ள
தயிர்ப்பினிலற்றதன்றேயதுகளியாட்டமாகச்
செயிர்ப்பறுசிந்தைத்தெய்வத்திருமறைமுனிவர்க்கேயும்
மயிர்ப்புறத்தோறும்வந்துபொடித்தது காமவாரி. (கச)

மாப்பிறழ்நோக்கினார்தம்மணிநெடுங்குவளைவாட்கண்
சேப்புறவாத்தச்செவ்வாய்ச்செங்கிடைவெண்மைசேரக்
காப்புறுபடைக்கலக்கள்வகிருதர்க்கோரிறுதிகாட்டிப்
பூப்பிறழ்துருவம்வேறாய்ப்பொலிந்ததோர்தன்மைபோன்ற. (கரு)

கயல்வருகாலன்கைவேல்காமவேள்கணையென்றாலும்
இயல்வருகிற்கிலாதநெடுங்கண்ணாரிணைமென்கொங்கை
துயல்வருகனகாணுங்காஞ்சியுந்துகிலும்வாங்கிப்
புயல்வருகூந்தற்பாரக்கற்றையிற்புனையலுற்றார். (கசா)

முத்தன்மைமொழியலாகாமுகிழ்முலைமுறுவலல்லார்
இத்தன்மையெய்தனோக்கிபாகனீந்தி நந்தவெல்லை
அத்தன்மெய்யரியின்சேனையார்களிபார்த்தவோதை
மத்தன்மெய்மயங்கவந்துசெவிதொறுமடுத்தமாதோ. (கஎ)

ஆடலுங்களியின்வந்தவமலையுமமிழ்தினன்ற
பாடலுமுழவின்றெய்வப்பாணியும்பவளவாயார்
ஊடலுங்கடைக்கணோக்குமழலைவெவ்வுரையுமெல்லாம்
வாடன்மென்மலரையொத்தவரர்ப்பொலிவுருதலோடும். (கஅ)

தறிபொருகளிநல்யானைசேவகர்தள்ளியோங்கத்
துறுசுவற்புரவிதூங்கத்துணுக்குறவரக்கருட்கச்
செறிகழலிருவர்தெய்வச்சிலையொலிபிறந்ததன்றே
எறிகடல்கடைந்தமேனாளெழுந்தபேரோதையென்ன. (கக)

முத்தவாணகையின்மூன்முகத்தியர்முழுக்கண்வேலால்
குத்துவார்கூட்டமெல்லாம்வானரக்குழுவிற்றோன்ற
மத்துவாழ்கடலினுள்ளமறுகுறவதனமென்னும்
பத்துவாழ்மதிக்குமக்காட்பகலொத்தநிரவுபண்பால். (உ0)

---

௧௪. உணர்த்தினர் - அபிநயத்தால் விளக்கினர்.

ஈதிடையாகவர்தாரலங்கன்மீதேறினர்போய்
வைகினர்வெய்கன்வண்டினருவினருற்றவெல்லாம்
நீதிலார்பகைஞரென்னத்திக்கென்றமனத்தன்றெய்வப்
போதருபர்தர்கின்றமந்திரத்திருக்கைபுக்கான். (உ௬)

உ௪-வது களியாட்டுப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - உ௪௩௩.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

இருபத்தைந்தாவது

# மாயாசீதைப்படலம்.



மைந்தனுமற்றுளோருமகோதரன்முதலோராய
தந்திரத்தலைமையோருமுதியருந்தழுவத்தக்க
பந்தியரெவரும்வந்துமருங்குறப்படர்ந்தார்பட்ட
அந்தரமுழுதுந்தானேயனையவர்க்கறியச்சொன்னான். (௧)

கங்கிளையுலர்ந்ததெல்லாமுய்ந்திடநணுகுமன்றே
வெங்கொடுந்தீமைதன்னால்வேலையிலிட்டிலேமேல்
இங்குளவெல்லாமாடற்கினிவருமிடையூறில்லைப்
பங்கயத்தண்ணன்மீளாப்படைபழுதுற்றபண்பால். (உ)

இலங்கையினின்றமேருபிற்படவிமைப்பிற்பாய்ந்து
வலங்கினர்மருந்துநின்றமலையொடுங்கொணரவல்லான்
அலங்கடர்தடத்தோளண்ணலநுமனேயாதல்வேண்டும்
கலங்கவிவுலகுக்கெல்லாங்காரணங்கண்டவாற்றால். (௩)

நீரினைக்கடக்கவாங்கியிலங்கையாகின்றகுன்றைப்
பாரினிற்கிழியவீசினருளர்பிழைக்கற்பாலார்
போரினிற்பொருவதெங்கேபோயினவநுமன்பொன்மா
மேருவைக்கொணர்ந்திவ்வூர்மேலிடுமெனின்விலக்கலாமோ. (௪)

முறைகெடவேண்டின்முன்புகினைந்ததேமுடிப்பன்முன்பின்
குறைவிலாக்குணங்கட்காங்கோர்கோதிலர்வேதங்கூறும்
இறைவர்கண்மூவரென்பதெண்ணிலாரெண்ணமேதான்
அறைகழலநுமனேடுகால்வரேமுதல்வரம்மா.

இறந்தவரிறந்துநீரவினியொருபிறவிவந்து
பிறந்தனமாகினுள்ளோமுய்ந்தனம்பிழைக்கும்பெற்றி

௩. காரணங்கண்டவாற்றால் - அருள்செய்ததன்மையால்.

மறந்தனமெனினுமுன்னஞ்சனகியைமரபினீந்தவ்
வறந்தருசிந்தையோரையடைக்கலம்புகுதுமைய. (௬)

மறிகடல்குடித்துவானைமண்ணொடுமெறிக்கவல்ல
எறிபடையரக்கரெல்லாமிறந்தனரிலங்கையூரும்
சிறுவனுநீயுமல்லாலாருளரொருவர்தீர்ந்தார்
வெறிதாம்வென்றியென்றான்மாலிவேல்விளைவதோர்வான். (௭)

வாலியைவாளியொன்றால்வானிடைவைத்துவாரி
வேலையைவென்றுகும்பகருணனைவீட்டினானை
ஆலியின்மொக்குளன்னவரக்கரோவமரின்வெல்வார்
சூலியைப்பொருப்பினோடுந்துளக்கியவிசயத்தோனாய். (௮)

என்றுமாலியவான்கூறப்பிறையெயிற்றெழிலிநாப்பண்
மின்றெரித்தென்னநக்குவெருவரவுரப்பிப்பேழ்வாய்
ஒன்றினோன்றசனியென்னவுருத்துநீயுரைத்தமாற்றம்
நன்றுநன்றென்றுசீறியுரைத்தனனலத்தையோரான். (௯)

கட்டுரையதனைக்கேளாக்கண்ணொளிகதுவநோக்கிப்
பட்டனாரரக்கரென்னிற்படைக்கலம்படைத்தவெல்லாம்
கெட்டனவெனினும்வாழ்க்கைகெடாதினிக்கனியனானை
விட்டிடவெண்ணியோயான்பிடித்ததுவேட்கைவீய. (௧௦)

மைந்தரென்மற்றையோரென்னைஞரினிர்வாழ்க்கைவேட்டிர்
உய்ந்தனிர்போவிர்நாளையுழ்வெந்தீயினோங்கிச்
சிந்தியமனித்தரோடந்நாங்கிப்போதிப்பனென்றான்
வெந்திறலரக்கர்வேந்தன்மகனிலைவிளம்பலுற்றான். (௧௧)

உளதுநானுணர்த்தற்பாலதுணர்ந்தனைகோடலுண்டேல்
தளமலர்க்கிழவன்றந்தபடைக்கலந்தழலிற்சார்த்தி
அளவிலதமையவிட்டதிராமனையடையாவென்றால்
இளவலதனையமேனித்தீண்டின்றிமீண்டதம்மா. (௧௨)

மானுடனல்லன்றொல்லைவானவனல்லன்மற்று
மேனிவர்முனிவனல்லன்வீடணன்மெய்யிற்சொன்ன
ஏனவனெண்ணிற்றீர்ந்தாரெண்ணுறுமொருவனென்றே
தேனகுதெரியன்மன்னுசேகரத்தெரிந்ததன்றே. (௧௩)

இந்திரசித்து நிகும்பலையாகத்திற்குச் செல்லல்.

அனையதுபிறவுநிற்கவன்னதுபகர்தலாண்மை
வினையெனினன்றுநின்றுவீழ்ந்ததுவீழ்கவீர
இனையனிமூண்டியான்போய்நிகும்பலைவிரைவினெய்தித்
துனியறவேள்விவல்லைத்தொடங்கினென்முடியுந்துன்பம். (௧௪)

௬. சனகி - ஜானகி.

அன்னதுகாலத்தேயாலமைதியென்றரக்கன்சொன்னான்
நன்மகனும்பிகூறநண்ணலார்கண்டுநண்ணி
முன்னியவேள்விமுற்றுவகைசெருமுயல்வரென்று
என்னவரெய்தாவண்ணமியற்றலாமுறுதியென்றான். (௧௫)

சானகியுருவமாகச்சமைத்தவடன்மைகண்ட
வானுபரதுமன்முன்னேவாளினாற்கொன்றுமாற்றி
யானெடுஞ்சேனையோடுமயோத்திமேலெழுந்தேனென்னப்
போனபின்புரிவதொன்றுமிலாதவர்துயரம்பூண்பர். (௧௬)

இத்தலைசீதைமாண்டாள்பயனிவணில்லையென்பார்
அத்தலைத்தம்பிமாருந்தாயருமடுத்துளோரும்
உத்தமநகருமாளுமென்பதோர்வருத்தமூன்றப்
பொத்தியதுன்பமூழ்கச்சேனையுந்தாமும்போவார். (௧௭)

பேரகலரென்றபோதுமநுமனையாண்டுப்போக்கி
ஆகியதறிந்தாலன்றியருந்துயராற்றலாற்றார்
ஏகியகருமமுற்றியானவண்விரைவினெய்தி
வேகம்வெம்படையிற்கொன்றுதருகுவென்வென்றியென்றான். (௧௮)

அன்னதுபுரிதனன்றென்றரக்கனுமமையவஞ்சொற்
பொன்னூருக்குவமைமாயமியற்றுவானமைந்துபோனான்
இன்னதித்தலையதாகவிராமனுக்கிரவிசெம்மல்
தொன்னகரதனைவல்லைக்கடிகெடச்சுடுதுமென்றான். (௧௯)

வானரர் கொள்ளியால் இலங்கையைச்சுட முயலல்.

அத்தொழில்புரிதனன்றென்றண்ணலுமமையவெண்ணித்
தத்தினனிலங்கைசூழ்துர்க்கோபுரத்தும்பர்சார்ந்தான்
பத்துடையெழுசான்றவானரப்பரவைபற்றிக்
கைத்தலத்தோரோர்கொள்ளியெடுத்ததெவ்வுலகுங்காண. (௨௦)

வேறு.

எண்ணினகோடிப்பல்படையாவும்
மண்ணுறுகாவற்றிண்மதில்வாயில்
வெண்ணிறமேகமின்னினம்வீசி
நண்ணினபோல்வதொன்னகர்காண. (௨௧)

ஆசைகடோறுமள்ளினகொள்ளி
மாசறுதானைமர்க்கடவெள்ளம்
நாசமிவ்வூருக்குண்டெனநள்ளின்
வீசினவானின்மீன்விழலன்ன. (௨௨)

வஞ்சனைமன்னன்வாழுமிலங்கைக்
குஞ்சரமன்னார்வீசியகொள்ளி

௨௨. ஆசை - திசை, திக்கு.

அஞ்சனவண்ணனுழியினேவும்
செஞ்சரமென்னச்சென்றனமென்மேல். (உ௩)

கய்யகலிஞ்சிக்காவலிலங்கைச்
செய்யகொளுந்திச்சென்றுநெருங்க
அய்யநெடுங்காராழியையம்மால்
எய்யவெரிந்தாலொத்ததிலங்கை. (உ௪)

பாற்றுறுபல்பழுவத்தெரிபற்ற
நீற்றுறுபல்பறவைக்குலநீளம்
ஊற்றினவின்னிஞெலித்தெழுவண்ணம்
ஆற்றியெழுந்ததடங்கவிலங்கை. (உ௫)

மூவுலகத்தெவரும்முதலோரும்
ஏவினவிற்றொழில்வீரனிராமன்
தீவமெனச்சிலவாளிசெலுத்தக்
கோவுரமுற்றும்விழுந்ததுகுன்றின். (உ௬)

சஞ்சீவிமலையை வைக்கச்சென்ற அனுமன் திரும்பிவருதல்.

இத்தலையின்னிகழ்ந்திடுமெல்லைக்
கைத்தலையிற்கொடுகாவினெழுந்தான்
உய்த்தபெருங்கிரிமேருவினுப்பால்
வைத்தநெடுந்தகைமாருதிவந்தான். (உஎ)

அறையரவக்கழன்மாருதியார்த்தான்
உறையரவஞ்செவியுற்றனதவ்வூர்
சிறையரவக்கலுழன்கொடுசீறும்
இறையரவக்குலமொத்ததிலங்கை. (உஅ)

இந்திரசித்து மாயாசீதையை அனுமனெதிரே கட்டியிழுத்து வருதல்.

மேற்றிசைவாயிலைமேவியவெங்கட்
காற்றின்மகன்றனைவந்துகலந்தான்
மாற்றலின்மாயைவகுக்கும்வலத்தான்
கூற்றையும்வென்றுயர்வட்டணைகொண்டான். (உகூ)

சானகியாம்வகைகொண்டுசமைத்தோர்
மானனையாளைவடிக்குழல்பற்று
ஊனுருவாளொருகைக்கொடுருத்தான்
ஆனவனந்நிலையின்னவணைந்தான். (௩௦)

இந்திரசித்து சீதையைவெட்டி விடுவேனெனல்.

வந்திவன்காரணமாகமலைத்தீர்
எந்தையிகழ்ந்தனன்யானிவளாலி

உஎ. இத்தலை - இப்போது.

சிந்துவனென் றசெறுத் துரைசெய்தான்
அந்தமின் மாருதியஞ்சியயர்ந்தான். (௩௧)

அனுமன் வருந்துதல்.

கண்டவளேயிவளென்பது கண்டான்
விண்டதுபோலுநம்வாழ்வெனவெந்தான்
கொண்டிடைதீர்வதொர்கோளறிகில்லான்
உண்டுயிரோவெனவாயுமுலர்ந்தான். (௩௨)

அனுமன் இந்திரசித்தனைப் புகழ்ந்து இவளைக் கொல்லுதல்

நீதியன்றெனல்.

யாதுமினிச்செயலில்லெனவென்னால்
நீதியுரைப்பதுநீரெனவோராக்
கோதில்குலத்தொருநீகுணமிக்காய்
மாதையொறுத்தல்வசைத்திறமன்றோ. (௩௩)

நான்முகனுக்கொருநால்வரின்வந்தாய்
நூன்முகமுற்றுநுணங்கவுணர்ந்தாய்
பான்முகமுற்றபெரும்பழியன்றோ
மான்முகமற்றொருமாதைவதைத்தால். (௩௪)

மண்குலைகின்றதுவானநடுங்கிக்
கண்குலைகின்றதுகாணுதிகண்ணால்
எண்குலைகின்றதிரங்கவுறந்தாய்
பெண்கொலைசெய்கைபெரும்பழியன்றோ. (௩௫)

என்வயினல்கினையேகுதியென்றால்
நின்வயமாமுலகியாவையுநீநின்
அன்வயமேதுமறிந்திலையையா
புன்மைதொடங்கல்புகழ்க்கழிவென்றான். (௩௬)

இந்திரசித்துப் பதிலுரைத்தல்.

என்றனன்மாருதியிந்திரசித்தும்
ஒன்றுரைகேளெனதெந்தையுமூரும்
பொன்றுதநீருமிதிற்புகழுண்டே
நன்றுரையென்றபினக்குரைசெய்தான். (௩௭)

இந்திரசித்து மாயாசீதையை வெட்டுதல்.

எந்தையுமிந்தவிலங்கையுளோரும்
உய்ந்திடவானவர்யாவருமோடச்
சிந்துவென்வாளினிலென்றசெறுந்தான்
இந்திரசித்தவளின்னைவிசைத்தான். (௩௮)

௩௨. கண்டவள் - முன்பார்த்தவள்.

இந்திரசித்து அயோத்தி சென்று அங்குள்ளாரை
அழிப்பேனெனல்.

போயினடாவினைபோயதுபோலாம்
ஆமெனினின்றுமயோத்தியையண்மிக்
காயினதின்றுகனக்கரியாக
வேயிதுசெய்தினிமீள்குவெனென்றான். (௩௯)

தம்பியர்தம்மொடுதாயருமாயோர்
உம்பர்விலக்கிடினும்மினியுய்யார்
வெம்புகடுங்கனல்வீசிடுமென்கை
அம்புகளோடுமவிந்தனரம்மா. (௪0)

இப்பொழுதேகடிதேகுவென்யானிப்
புட்பகமானமதிற்புகவின்றேன்
தப்புவரேயவர்சங்கையிலாவென்
வெப்புறுவாளிகளின்றுவிரைக்கால். (௪௧)

ஆளுடையாயருளாயருளாயென்
றேழைவழங்குறுசொல்லினிரக்கான்
வாளினெறிந்தனன்மாகடல்போலும்
நீளுறுசேனையினூடுயிர்த்தான். (௪௨)

தென்றிசையின்றுவடாதுதிசைக்கட்
பொன்றிணிபுட்பகமேற்கொடுபோனான்
ஒன்றுமுணர்ந்திலன்மாருதிபுக்கான்
வென்றிநெடுங்கிரிபோலவிழுந்தான். (௪௩)

அநுமன்புலம்புதல்.

போயவன்மாறிநிகும்பலைபுக்கான்
தூயவனெஞ்சதுயர்ந்தகநண்டான்
ஓய்வொடுநெஞ்சமொடுங்கவுலர்ந்தான்
ஏயனபன்னினனின்னனசொன்னான். (௪௪)

வேறு.

அன்னமேயென்னும்பெண்ணினருங்கலக்கலமேயென்னும்
என்னமேயென்னுந்தெய்வமில்லையோயாதுமென்னும்
சின்னமேசெய்யக்கண்டுந்தீவினைநெஞ்சமாவி
பின்னமேயாயதில்லையென்னும்பேராற்றல்பேர்த்தான். (௪௫)

எழுந்தவன்மேலேபாயவெண்ணும்பேரிடரைத்தன்னி
விழுந்துவெந்துயிர்த்துவிம்மிவீங்கும்போய்மெலியும்வெந்நீர்
கொழுந்துகளுயிர்க்கும்யாக்கைகுலைவுறுந்தலைமேற்கொண்டேற்
றழுந்தனைதன்னைப்பின்னைவினையனவுரைப்பதானான். (௪௬)

௪௫. ஆற்றல் - வல்லமை.

முடிந்ததார்த்தமெண்ணுமூவுலகிற்குங்கங்குல்
விடிந்ததென்றிருந்தேன்மீளவெந்துயரிருளின்வெள்ளம்
படிந்ததுவினையின்செய்கைபார்த்ததுபாவிவாளால்
தடிந்தனன்றிருவையந்தோதவிர்ந்ததுதருமமம்மா. (௪௭)

பெருஞ்சிறைக்கற்பினாளைப்பெண்ணினைக்கண்ணிற்கொல்ல
இருஞ்சிறகற்றபுட்போல்யாதுமொன்றியற்றலாற்றேன்
பருஞ்சிறையழுங்குகின்றேனெம்பிரான்றேவிபட்ட
அருஞ்சிறைமீட்டவண்ணமழகிதுபெரிதுமம்மா. (௪௮)

பாதகவரக்கன்றெய்வப்பத்தினித்தவத்துளாளைப்
பேதையைக்குலத்தின்வந்தபிழைப்பிலாதாளைப்பெண்ணைச்
சீதையைத்திருவைத்தீண்டிச்சிறைவைத்ததீயோன்சேய
காதவுங்கண்டுநின்றகருமமேகருணைத்தம்மா. (௪௯)

கல்விக்குமிர்ந்தகீர்த்திக்காகுத்தன்றூதனாகிச்
சொல்விக்கவந்துபோனேனாவித்துயர்செய்தாரை
வெல்விக்கவந்தேனுன்னைமீட்பிக்கவன்றுவெய்தின்
கொல்விக்கவந்தேனென்றோர்கொடும்பழிகூட்டிக்கொண்டேன். (௫0)

வஞ்சியையெங்குங்காணாதுயிரினைமறந்தானென்னச்
செஞ்சிலையுரவோன்றேடித்திரிகின்றானுள்ளந்தேற
அஞ்சொலாவிருந்தாள்கண்டேனென்றயானரக்கன்கொல்லத்
துஞ்சினாளென்றுசொல்லத்தோன்றினேன்றோற்றமீதால். (௫௧)

அருங்கடல்கடந்திவ்வூரையன்னெரிமடுத்துவென்னக்
கருங்கடல்கட்டிமேருக்கடத்தொருமருந்துகாட்டிக்
குரங்கினியுன்னோடொப்பதில்லெனக்களிப்புக்கொண்டேன்
பெருங்கடற்கோட்டந்தேய்வையாயதென்னடிமைப்பெற்றி. (௫௨)

விண்டுநின்றூக்கைசிந்தப்புல்லுயிர்விட்டிலாதேன்
கொண்டுநின்றாளைக்கொல்லக்கூசினேனென்றேகொல்லக்
கண்டுநின்றேனோநன்றென்கையினிற்கலத்தின்வெண்சோ
றுண்டுநின்றுய்யவல்லேனெளியனோவொருவனுள்ளேன். (௫௩)

என்னநின்றிரங்கிக்கள்வனயோத்திமேலெழுவனென்று
சொன்னதுமுண்டுபோனசவுண்டுதொடர்ந்துசெல்லின்
மன்னனிக்குற்றதன்மையுணர்கிலன்வருவதோரேன்
பின்னினிமுடிப்பதியாதென்றிரங்கினானுணர்வுபெற்றான். (௫௪)

உற்றதையுணர்த்திப்பின்னையுலகுடையொருவனோடும்
இற்றதினிற்றுமானவென்றெனினென்னமெண்ணிச்

௪௮. கண்ணிற்கொல்ல-கண்ணெதிரில்கொலைபுரிய. ௫0. கல்விக்கு-கல்வியில்.

சொற்றதுசெய்வென்வேறோர்பிறிதிலென் றனிவிற்றென்னுப்
பொற்றடக்தோளான்வீரன்பொன்னடிமருங்கிற்போனான். (௩௫)

இராமன்காலடியில்அனுமன் விழுந்து புலம்புதல்.

செங்கவேறனையவீரன்செறிகழற்பாதஞ்சேர்ந்தான்
அங்கமுமனமுங்கண்ணுமாவியுமலக்கணுற்றான்
பொங்கியபொருமல்வீங்கியுயிர்ப்பொடுபுரத்தைப்போர்ப்ப
வெங்கணீருருவிசோரமால்வரையென்னவீழ்ந்தான். (௩௬)

வீழ்ந்தவன்றன்னைவீரன்வினைந்ததுவிளம்புகென்னுத்
தாழ்ந்திருந்தடக்கைபற்றியெடுக்கவுந்தரிக்கிலாதான்
ஆழ்ந்தெழுதுன்பத்தானையரக்கனின்றயில்கொள்வாளால்
போழ்ந்தனனென்னக்கூறிப்புரண்டனன்பொருமுகின்றான். (௩௭)

துடித்திலனுயிர்ப்புமில்லனிமைத்திலன்றன்விக்கண்ணீர்
பொடித்திலன்யாதுமொன்றும்புகன்றிலன்பொருமிபுள்ளம்
வெடித்திலன்விம்மிப்பாரின்வீழ்ந்திலன்வியர்த்தானல்லன்
அடுத்தனதுன்பம்யாவுமறிந்திலராமரேயும். (௩௮)

இராமன்காலடியில் வானரர் விழுதல்.

சொற்பதங்கேட்டலோடுந்துணுக்குறவுணர்வுசோர
நற்பெருவாடையுற்றமரங்களினடுக்கமெய்தாக்
கற்பகமனையவள்ளல்கருங்கழற்கமலக்கான்மேல்
வெற்பினமென்னவீழ்ந்தார்வானரவீரரெல்லாம். (௩௯)

இராமன்மூர்ச்சையுறல்.

சித்திரத்தன்மையுற்றசேவகனுணர்வுதீர்ந்தான்
மித்திரர்வதனநோக்கானிளையவன்வினவப்பேசான்
பித்தருமிறைபொறாதபேரபிமானமென்னும்
சத்திரமார்பிற்றைக்கவுயிரிலனென்னச்சாய்ந்தான். (௪௦)

இலக்குமணன் அயர்தல்.

நாயகன்றன்மைகண்டுந்தமக்குற்றநாணம்பார்த்தும்
ஆயனகருமமீனவழிவுற்றவதனைப்பார்த்தும்
வாயொடுமனமுங்கண்ணும்யாக்கையுமயர்ந்துசாம்பித்
தாயினையிழந்தகன்றிற்றம்பியுந்தலத்தனானான். (௪௧)

விபீடணன்ஐயங்கொள்ளுதல்.

தொல்லையதுணரத்தக்கவீடணன்றனக்கமுற்றான்
எல்லையிறன்பமூன்றவிடையொன்றுந்தெரிக்கிலாதான்
வெல்லவுமரிதுகாசயிவடனால்வினைந்ததென்றுக்
கொல்வதுமடுக்குமென்றுமனத்திடையையங்கொண்டான். (௪௨)

௪௦. இவற்பொருத என்றும் பாடம்.

விபீடணன் இராமனுக்குச் சைத்தியோபசாரஞ் செய்ய
மூர்ச்சை தெளிதல்.

*சீதநீர்முகத்தினப்பிச்சேவகன்மேனிதீண்டிப்
போதம்வந்தெய்தற்பாலயாவையும்புரிந்துபொற்பூம்
பாதமுங்கையுமெய்யும்பற்றினன்வருடலோடும்
வேதமுங்காணுவன்னல்விழித்தனன்விழியைமெல்ல.* (௬௩)

*ஊற்றிவார்கண்ணீரோடுமுள்ளிழிந்துற்றதெண்ணி
ஆற்றுவானல்லனாகியயர்கின்றானெனினுமையன்
மாற்றுவானல்லன்மானமுயிருகவருந்துமென்னாத்
தேற்றுவானினைந்துதம்பியிவையிவைசெப்பலுற்றான்.* (௬௪)

இலக்குமணனதறவுரை.

*முடியுநாட்டானேவக்குமுற்றினன்றன்பமுந்நீர்ப்
படியுமாஞ்சிறியோர்தன்மைநினக்கிதுபழியிற்றாமால்
குடியுமாசுண்டதென்னினறத்தொடுமுலகைக்கொன்று
கடியுமாறன்றிச்சோர்ந்துகழிதியோகருத்திலார்போல்.* (௬௫)

*தய்யலைத்துணையிலாளைத்தவத்தியைத்தருமக்கற்பின்
தெய்வதந்தன்னைமற்றுன்றேவியைத்திருவைத்தீண்டி
வெய்யவன்கொன்றானென்றால்வேதனையுழப்பதின்னும்
உய்யவோகருணையாலோதருமத்தோடுறவுமுண்டோ.* (௬௬)

*அரக்கனென்னமரர்தாமென்னந்தணர்தாமென்னந்தக்
குருக்களென்முனிவர்தாமென்வேதத்தின்கொள்கைதானென்
செருக்கினர்வலியராகிநெறிநின்றார்சிதைவரென்று
இருக்குமிதென்னுமிம்மூன்றுலகையுமெரிமடாதோ.* (௬௭)

*முழுவதேழுலகமின்னமுறைமுறைசெய்கைமேன்மூண்
டெழுவதேயமரின்னமிருப்பதேயறமுண்டென்று
தொழுவதேமேகமாரிசொரிவதேசொரிந்துநாம்வீழ்ந்
தழுவதேதான்றகர்தம்விற்றொழிலாற்றலம்மா.* (௬௮)

*புக்கிவ்வூரிமைப்பின்முன்னம்பொடிபடுத்தரக்கன்போன
திக்கெலாஞ்சுட்டுவானோருலகெலாந்தீத்துத்தீர்க்கத்
தக்கதாங்கண்ணீராற்றித்தலைசமர்திருக்கைநாற்றித்
துக்கமேயுழப்பமென்றாற்சிறுமையாத்தோன்றுமன்றே.* (௬௯)

*அங்குமிவ்வறமேநோக்கியரசிழந்தடவியெய்தி
மங்கையைவஞ்சன்பற்றவரம்பழியாதுவாழ்ந்தேம்
இங்குமித்துன்பமெய்தியிருந்துமேயெளிமைநோக்கிப்
பொங்குவான்றனைவிற்பூட்டியாட்செயப்புகல்வனன்றே.* (௭௰)

---

௬௩. சீதநீர் - குளிர்ந்தநீர், தண்ணீர்.

மன்றலங்கோதையாளைத்தம்மெதிர்கொணர்ந்துவாளின்
கொன்றவர்தம்மைக்கொல்லுங்கோளிலாநாணங்கூரப்
பொன்றினரென்பராவிபோக்கினார்பொறுமைபார்க்கின்
அன்றிதுகருமமென்னியயர்கின்றதறிவிலார்போல். (எக)

சுக்கிரீவன் இராவணன் மார்பில்விழுந்து பழிவாங்குவே னெனல்.

அனையனவினவல்கூறவருக்கன்சேயயர்கின்றானோர்
கனவுகண்டனனேயென்னக்கதுமெனவெழுந்துகாணும்
வினையினியுண்டேவல்லவிளக்கின்வீழ்விட்டிலென்ன
மனையிடையரக்கன்மார்பிற்குதித்துநாம்வம்மினென்றான். (எஉ)

இலங்கையையிடந்துவெங்கணிராக்கதனென்கின்றானைப்
பொலங்குழைமகளிரோடும்பாலுகர்புதல்வரோடும்
குலங்களோடடங்கக்கொன்றுகொடுந்தொழில்குறித்துநம்மேல்
விலங்குவாரென்னிற்றேவர்விண்ணையுமண்ணில்வீழ்த்தும். (எங)

சுக்கிரீவன் இலங்கையிற்றாவுதல்.

அறங்கெடச்செய்துமென்பதமைந்தனமாகினைய
புறங்கிடந்துழைப்பதென்னேபொருதினிப்புவனமூன்றும்
கறங்கெனதிரிந்துதேவர்குலங்களுங்கட்டுமென்னா
மறங்கிளர்வயிரத்தோளானிலங்கைமேல்வாவலுற்றான். (எச)

அனுமன் இந்திரசித்து அயோத்திசென்றது கூறல்.

மற்றையவீரரெல்லாமன்னவனின்முன்னம்வாவி
எற்றுதுமரக்கர்தம்மையில்லொடுமெனநிற்கின்றோல்
உற்றனருறுதலோடுமுணர்த்துவதனையென்றனுச்
சொற்றனனநுமன்வஞ்சனயோத்தியைப்போனசூழ்ச்சி. (எரு)

அதுகேட்ட இராமன் அவலமிகுந்தாற்றல்.

தாயருந்தம்பிமாருந்தவம்புரிநகரஞ்சாரப்
போயினனென்றமாற்றஞ்செவித்தொளைபுகுதலோடும்
மேயினவடியினின்றவேதனைக்களையவெந்த
தீயிடைத்தனித்ததென்னச்சிதைபாற்றன்பர்தீர்ந்தான். (எசு)

இராமன்வருந்தி யுரைத்தல்.

அழுந்தியபாலின்வெள்ளத்தாழியின்றனந்தர்நீங்கி
எழுந்தனனென்னத்துன்பக்கடலினின்றெறியாறாக்
கொழுந்துறுகோபத்தீயுநீக்கமுமனத்தைக்கூட
உழுந்துருள்பொழுதுத்தாழாவினையினன்மறுக்கமுற்றான் (எஎ)

திருமிச்சிதையோடுமென்கிலதன்றென்றீமை
வேரொடுமுடிப்பதாகவினைத்துதும்வேறுமின்னும்

---

எச, சுறங்கு - பம்பரம்.

யாரொடுந்தொடருமென்பதறிகிலேனிதனையைய
பேரிடவதியுண்டோவெம்பியர்பிழைக்கின்றாரோ. (௭௮)

நினைவதன்முன்புசெல்லுமானத்தினெடிதுநின்றான்
வினையொருகணத்தின்முற்றிமீள்கின்றான்வினையேன்வந்த
மனைபொடிபட்டதங்குமாண்டதுதாரமீண்டும்
எனையனதொடருகின்றதுணர்கிலேனிறப்புங்காணேன். (௭௯)

தாதைக்குஞ்சடாயுவானதந்தைக்குந்தமியளாய
சீதைக்குங்கூற்றங்காட்டித்தவிர்ந்திலதொருவென்றீமை
பேதைப்பெண்பிறந்துபெற்றதாயர்க்கும்பிழைப்பிலாத
காதற்றம்பியர்க்குமூர்க்குநாட்டிற்குங்காட்டிற்றன்றே. (௮0)

உற்றதொன்றுணரகில்லாருணர்ந்தவர்துருத்தாரேனும்
வெற்றிவெம்பாசம்வீசிவிசித்தவன்கொன்றுவீழ்த்தால்
மற்றைவெம்புள்ளின்வேந்தன்வருகிலன்மருந்துநல்கக்
கொற்றமாருதியுமாங்கில்லாருயிர்கொடுக்கற்பாலார். (௮௧)

மாகவாகாயஞ்செல்லவல்லையின்வயிரத்தோளாய்
ஏகுவாறுபாயமுண்டேலியம்புதிநின்றவெல்லாம்
சாகமற்றிலங்கைப்போருந்தவிர்கவச்சழக்கன்கண்கள்
காகமுண்டதற்பின்மீண்டுமுடிப்பனென்கருத்தையென்றான். (௮௨)

அவ்விடத்தினவலையபரதனையமரினார்க்க
எவ்விடற்குரியான்போனவிந்திரசித்தேயென்று
தெவ்விடத்தமைவின்மும்மையுலகமுந்தீந்தறாவோ
வெவ்விடர்க்கடலின்வைகல்கேளெனவிளம்பலுற்றான். (௮௩)

தீக்கொண்டவஞ்சன்வீசத்திசைமுகன்பாசந்தீண்ட
வீக்கொண்டுவீழ்கயானேபரதனும்வெய்யகூற்றை
கூய்க்கொண்டுகுத்தண்டன்றன்குலத்தொடுலைத்தனாதல்
போய்க்கண்டுகோடியன்றேயென்றனன்புழுங்குகின்றான். (௮௪)

அனுமன் இராம லிலக்குமணர்களைத் தன்காபுரங்களிலேற வேண்டுதல்.

அக்கணத்தனுமனின்றனையவென்றோளினாதல்
கைத்துணைத்தலத்தேயாதலேறுதிர்காற்றுந்தாழ
இக்கணத்தயோத்திமூதுரெய்தினெனிடமுண்டென்னின்
திக்கனைத்தினிலுஞ்செல்வேன்யானேபோய்ப்பகையுந்தீர்வென். (௮௫)

அனுமன் இலங்கையைப் பேர்ந்துக்கொண்டு வரச்சொல்லினுஞ்
செல்வேனெனல்.

எழுபதுவெள்ளத்தோடுமிலங்கையையிடந்தென்றோண்மேல்
தழுவுறவைத்தின்றேகொன்றுரைத்தியேற்சமைவென்றக்கோய்

௮௧. விசித்தல் - கட்டுதல்.

பொழுதிறைதாழ்ப்பதென்னேபுட்பகம்போதன்முன்னம்
குழுவொடுகொண்டுபோவென்கணைத்தொடுகுறிப்பென்கூற்றின். (௮௬)

கொல்லவந்தானைநீதிகூறினெனிலக்கிக்கொள்வான்
சொல்லவுஞ்சொல்லினின்றேன்கொன்றபின்றன்பமென்னே
வெல்லவுந்தரையின்வீழ்வுற்றுணர்ந்திலென்விரைந்துபோனுன்
இல்லையென்றனனேற்றீயோன்பிழைக்குமோவிழுக்கமுற்றுன் (௮௭)

அனுமன் புட்பகத்திற்றமுன்னர் யான்செல்வேனெனல்.

மனத்தின்முன்செல்லுமானம்போனதுவழியதாக
நினைப்பின்முன்னயோத்தியெய்திவருநெறிபார்த்துநிற்பென்
இனிச்சிலதாழ்ப்பதென்னேயேறுதிரிரண்டுதோளும்
புனைத்துழாய்மாலைமார்பீர்புட்பகம்போதன்முன்னம். (௮௮)

இராமவிலக்குமணர் அனுமான்றேளிலேறி அயோத்திசெல்ல
ஒருப்படலும் விபீடணன்தடுத்தலும்.

ஏறுதுமென்னுவீரரெழுதலுமிறைஞ்சிவீண்டுக்
கூறுவதுளதுதன்பங்கோளுறக்குலுங்கியுள்ளம்
தேறுவதரிதுசெய்கைமயங்கினென்றிகைத்துநின்றேன்
ஆறினெனதனையையமாயமென்றயிர்க்கின்றேனுல். (௮௯)

இந்திரசித்துச்செய்தது மாயையாயிருக்கலாமென
விபீடணன் கூறுதல்.

பத்தினிதன்னைத்தீண்டிப்பாதகன்படுத்தபோது
முத்திறத்துலகும்வெந்துசாம்பராய்முடியுமன்றே
அத்திறமானதேனுமயோத்திமேற்போனதன்மை
சித்திரமிதனையெல்லாந்தெரிகலாஞ்சிறிதுபோழ்தின். (௯௦)

விபீடணன் சீதையிருப்பிடஞ் செல்லுதல்.

இமைப்பிடையாகயான்சென்றேந்திழையிருக்கையெய்தி
அமைவுறநோக்கியுற்றதறிந்துவந்தறைந்தபின்னர்ச்
சமைவதுசெய்வதென்றனீடணன்விளம்பத்தக்க
தமைவதென்றிராமன்சொன்னுனந்தாத்தவனுஞ்சென்றுன். (௯௧)

விபீடணன் சீதையைவண்டுநவோய்திச்சென்று காண்டல்.

வண்டினதுருவங்கொண்டான்மானவன்மனத்திற்போனுன்
தண்டலையிருக்கைதன்னைப்பொருக்கெனச்சார்ந்துதானே
கண்டனனென்பமன்னேகண்களாற்கருத்தாலாவி
உண்டிலையென்னச்செய்தவோவியமொக்கின்றுளை. (௯௨)

நீர்ப்பதுதுன்பம்யானென்னுயிரொடென்றுணர்ந்துசீதை
பேர்ப்பதுமின்சொலன்னதிரிசடைபேசப்போந்தான்
கார்ப்பெருமேகம்வந்துகடையுகங்கலந்தவன்ன
ஆர்ப்பொலியமிழ்தமாகவாருயிராற்றினானே. (கங)

வஞ்சனையென்பதன்னிவானுயருவகைவைகும்
நெஞ்சினனாகியுள்ளந்தன்னுறலொழிந்துநின்றான்
வெஞ்சிலைமைந்தன்போனானிகும்பலைவேள்வியானென்
றெஞ்சலிலரக்கன்சேனையெழுந்தெழுந்தேகக்கண்டான். (கச)

வேழ்விக்குவேண்டற்பாலகலப்பையும்விறகுநெய்யும்
வாழ்விக்குந்தாழ்விலென்னும்வானவர்மறுக்கக்கண்டான்
சூழ்வித்தவண்ணமீதோகன்றெனத்துணிவுகொண்டான்
தாழ்வித்தமுடியான்வீரன்றாமரைச்சரணந்தாழ்ந்தான். (கரு)

விபீடணன் சீதை இருக்கின்றாள்.நடந்தது மாயமெனல்.

இருந்தனடேவியானேயெதிர்ந்தனனென்கணார ,
அருந்ததிகற்பினாளுக்கழிவுண்டோவரக்கனம்மை
வருந்திடமாயஞ்செய்துநிகும்பலைமருங்குபுக்கான்
முருங்கழல்வேள்விமுற்றின்முதலறமுடிக்குமுண்டான். (கசு)

அனைவரு மகிழ்வுறல்.

என்றலுமுலகமேழுமேழுமாத்தீவுமெல்லை
ஒன்றியகடல்களேழுமொருங்கெழுந்தார்க்குமோதை
அன்றெனவாகுமென்னவமரருமயிர்க்கவார்த்துக்
குன்றினமிடியத்துள்ளியாடினகுரக்கினீட்டம். (கஎ)

வீரனுமையந்தீர்ந்தான்வீடணன்றன்னைமெய்யோ
டார்வமுமுயிருமொன்றவழுந்துறத்தழுவியைய
தீர்வதுபொருளோதுன்பமீயுண்டுதெய்வமுண்டு
மாருதியுண்டோஞ்செய்தவமுண்டுமறையுமுண்டால். (கஅ)

இந்திரசித்தின்மீது நிகும்பலைக்கு இலக்குமணனையேவ
விபீடணன் வேண்டுதல்.

என்றலுமிறைஞ்சியாகமுற்றுமேல்யாரும்வெல்லார்
வென்றியுமாக்கர்மாடேவிடையருளினவலோடும்
சென்றவனாவியுண்டுவேள்வியுஞ்சிதைப்பனென்றான்
நன்றதுபுரிதிரென்னாநாயகனவில்வதானான். (கக)

உரு-வது மாயாசீதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஅகஉ.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

இருபத்தாறவது

## நிகும்பலைப்படலம்.

இலக்குமணற்கு இராமன் நீபிரமாத்திரம் அவன்விடாவிடில் விடாதேயெனல்.

தம்பியைத்தழுவியையன்றுமறைத்தவிசின்மேலான்
வெம்படைதொடுக்குமாயின்விலக்குவான்பொருட்டாலன்றி
அம்புவீதரப்பாயல்லையனையதுதூரந்தகாலை
உம்பருமுலகுமெல்லாம்விளியுமஃதொழிதியென்றான். (௧)

சங்காராயுத்திரங்களையும் அவ்வாறே யெனல்.

முக்கணன்படையுமாழிமுதலவன்படையுமுன்னின்
றொக்கவேவிடுமேவிட்டாலவற்றையுமவற்றாலேயத்
தக்கவாறியற்றிமற்றன்சிலைவலித்தருந்தீருலை
புக்கவனுவிகொண்டுபோதுதிபுகழின்மிக்கோய். (௨)

பலவிதப்போர்புரிந்து காலந்தாழ்த்தாமல்

இந்திரசித்தனைக்கொல்லுதியெனல்.

வல்லனமாயைவிஞ்சைவகுத்தனவறிந்துமானக்
கல்லுதிருமமென்னுங்கண்ணகன்கருத்தைக்கண்டு
பல்பெரும்போருஞ்செய்தவ்வுருத்தலையற்றம்பார்த்துக்
கொல்லுதியமரர்தங்கள்கூற்றினைக்கூற்றமொப்பாய். (௩)

பதைத்தவன்வெம்மையாடிப்பல்பெரும்பகழிமாரி
விதைத்தவன்விதையாளன்றவில்கிலனுமெலிவுழிக்கால்
உதைத்தவன்சிலையின்வாளிமருமத்தைக்கருதியோடி
வதைத்தொழில்புரிதிசாபதுனெறிமறப்பிலாதாய். (௪)

தொடுப்பதன்முன்னம்வாளிதொடுத்தவைதுறைகடோறும்
தடுப்பனதடுத்தியெண்ணிக்குறிப்பினுமுணர்ந்துதக்க
கடுப்பினுமளவிலாதகதியினுங்கணைகள்காற்றின்
விடுப்பனவவற்றைநோக்கிவிடுதியால்விரைவிலாதாய். (௫)

இலக்குமணற்கு இராமன் வில்லொன்றளித்தல்.

என்பனமுதலயாவும்யாவையுமியம்பியேற்ற
முன்பனைநோக்கியையமூவகையுலகுந்தானுந்
தன்பெருந்தன்மைதானுமறிவொருவன்றங்கும்
வன்பெருஞ்சிலையீதாகும்வாங்குதிவலமுங்கொள்வாய். (௬)

---

முக்கண் - சோமன் சூரியன் அக்கினி என மூன்று.

கவசமுமளித்தல்.

இச்சிலையியற்கைமேனாட்ட மிழ்முனியியம்பிற்றெல்லாம்
அச்செனக்கேட்டாயன்றேயாயிரமௌலியண்ணல்
மெய்ச்சிலைவிரிஞ்சன்மூட்டும்வேள்வியின்வேட்டுப்பெற்ற
கைச்சிலையொன்றுதானேகொடுத்தனன்கவசத்தோடும். (௭)

அம்புக்கூடளித்தல்.

ஆணியிவ்வுலகுக்கானவாழியான்புறத்தினார்த்த
தூணியுங்கொடுத்துமற்றுமுறுதிகள்பலவுஞ்சொல்லித
தாணுவின்றோன்றத்தானைத்தழுவினன்றழுவலோடும்
சேணுயர்விசும்பிற்றேவர்தீர்ந்ததெஞ்சிறுமையென்றார். (அ)

மங்கலர்தேவர்கூறவானவர்மகளிர்வாழ்த்தப்
பங்கமிலாசிகூறப்பலாண்டிசைபரவப்பாகத்
திங்களின்மௌலியண்ணறிரிபுரந்தீக்கச்சீறிப்
பொங்கினனென்னத்தோன்றிப்பொலிந்தனன்போர்மேற்போவான். (௯)

இராமனை வணங்கி இலக்குமணன் நிகும்பலைநோக்கிச் செல்லுதல்.

மாருதிமுதல்வராயவானரத்தலைவரோடும்
வீரநீசேறியென்றுவிடைகொடுத்தருளும்வேலை
ஆரியன்கமலபாதமகத்தினும்புறத்துமாகச்
சீரியசென்னிசேர்த்துச்சென்றனன்றருமச்செல்வன். (௧0)

பொலங்கொண்டலனையமேனிப்புரவலன்பொருமிக்கண்ணீர்
நிலங்கொண்டுபடாநின்றநெஞ்சழிவானைத்தம்பி
வலங்கொண்டுவயிரவல்வில்விடங்கொண்டுவஞ்சன்மேலே
சலங்கொண்டுகடிதுசென்றான்றலைகொண்டுவருவேனென்றே. (௧௧)

இராமன் பிரிந்துநிற்றல்.

தான்பிரிகின்றிலாததம்பிவெங்கடுப்பிற்செல்லா
ஊன்பிரிகின்றிலாதவுயிரெனமறைதலோடும்
வான்பெருவேள்விகாக்கவளர்கின்றபருவநாளில்
தான்பிரிந்தேகக்கண்டதயரதன்றன்னையொத்தான். (௧௨)

வேறு

நிகும்பலையும்அசுரசேனைவியூகமும்.

சேனாபதியேமுதல்சேவகர்தாம்
ஆனார்மிளிர்கொள்ளிகொளங்கையினார்
கானார்நெறியும்மலையுங்கழியப்
போனார்கணிகும்பலைபுனக்கனரால். (௧௩)

௭. தமிழ்முனி - அகத்தியன்.

உண்டாயதொராலுலகுண்டொருவன்
கொண்டானுறைகின்றதுபோற்குலவி
விண்டானும்விழுங்கவிரிந்ததனைக்
கண்டாரவரக்கர்கருங்கடலே. (௧௪)

நேமிப்பெயர்யூகநிறைந்தநெடுஞ்
சேமத்ததுநின்றதுதீவினையோன்
ஓமத்தனல்வெவ்வடவைக்குடனே
பாமக்கடனின்றதொர்பான்மையதே. (௧௫)

காராயினகாய்கரிதேர்பரிமாத்
தாராயிரகோடிதழீஇயதுதான்
நீராழியொடாழிநிரீஇயதுபோல்
ஓராயிரம்யோசனையுள்ளதனை. (௧௬)

பொற்றேர்பரிமாகரிமாபொருதார்
எற்றேபடைவீரரையெண்ணிலமால்
உற்றேவியயூகமுலோகமுடைச்
சற்றுயிரமூடுசெலாயதனை. (௧௭)

வண்ணக்கருமேனியின்மேன்மழைவாழ்
விண்ணைத்தொடுசெம்மயிர்வீசுதலால்
அண்ணற்கரியானனலப்படைவெம்
பண்ணைக்கடல்போல்வதொர்பான்மையதே. (௧௮)

வழங்காசிலைகாளொளிவானின்வரும்
பழங்கார்முகமொத்தபணிக்குலமும்
தழங்காகடல்வாழ்வனபோற்றகைசால்
முழங்காமுகிலொத்தனமாமுரசே. (௧௯)

நிகும்பலை காப்பவர்கட்கும் வானரருக்கும் யுத்தம்.

வலியானவிராகவன்வாய்மொழியால்
சலியாதநெடுங்கடலன்னனலாய்
ஒலியாதுறுசேனையையுற்றொருநாள்
மெலியாதவரார்த்தனர்விண்கிழிய. (௨௦

ஆர்த்தாரெதிரார்த்தவரக்கர்குலம்
போர்த்தார்முரசங்கள்புடைத்தபுகத்
தூர்த்தாரிவர்கற்படைகுன்முகிலின்
நீர்த்தாரையினம்பவர்நீட்டினரால். (௨௧

௧௯. பணிவம் - கடைக்குறை, பணியென்றும்பாட

மின்னும்படைவீசலின்வெம்படைமேல்
பன்னுங்கவிமீதுபடிந்தனதால்
துன்னுந்துறைநீர்நிறைவாவிதொடர்ந்
தன்னங்கள்படிந்தனவாமெனலாய். (உஉ)

வில்லும்மழுவும்மெழுவும்மிடலோர்
பல்லுந்தலையும்முடலும்படியில்
செல்லும்படிசிந்தினசென்றனவால்
கல்லும்மரமுங்காமுங்கதுவ. (உ௩)

வாலுந்தலையும்முடலும்வயிறும்
காலுங்காமுந்தரைகண்டனவால்
கோலும்மழுவும்மெழுவுங்தொழுவும்
வேலுங்கணையும்வளையும்விசிற. (உச)

வென்றிப்படைவீரனைவீடணனீ
கின்றிக்கடைதாழுதனீதியதோ
சென்றிக்கடிவேள்விசிதைத்திலையேல்
இன்றிக்கடல்வெல்கிலம்யாமெனலும். (உ௫)

தேவாசுரருந்திசைநான்முகனும்
மூவாமுதலீசனுமூவுலகின்
கோவாகியகொற்றவனும்முதலோர்
மேவாதவரில்லைவிசும்புறைவோர். (உசு)

பல்லார்படைநின்றனபல்லணியால்
பல்லார்படைநின்றனபல்பிறைவெண்
பல்லார்படைநின்றனபல்லியமும்
பல்லார்படைநின்றனபல்படையே.

(இ-ள்.) பல்படை - பலவகைப்பட்ட சேனைகளில், பல்லார் - பலவீரர்களேறிய, படைநின்றன - தேர்ப்படைநின்றன, பல்லணியா - பலவணியாக, பல் - கல்லணை. ஆர் - தயங்கிய, படைநின்றன - குதிரைப்படைநின்றன, பல்பிறைவெண்பல்லார் - பலபிறைபோலும் வெண்மையாகிய பற்களையுடையராகிய, படைநின்றன - காலாட்படைநின்றன, பல்லியம் - பலவாச்சியமும், உம்பல் - யானைகளும், ஆர் - நிரம்பிய, படைநின்றன - படைகள்நின்றன. எ-று.

---

பல்லல் ஆகவென்பவற்றில் ஈற்றிவும், உம் பல்லாரென்பதில் லகரவெழுத்துப்பேறும் செய்யுள் விகாரம். பிறைவெண் பல்லார்படை யென்றமையினதற்குக் காலாட்படையெனவும், பரிகளால் கரிகளைப்பின்னே - அடைமயின் முன்னே பொதுப்படநின்ற பல்லார்படையென்பதற்குத்

தேர்ப்படையெனவும் பொருள்கூறினும். நால்வகைப்படையையு முறை பிறழக் கூறியது, வானரவீரர்களும் அப்படைத்தலைவர்களும் பொருத பூசலால் அவைகலங்கின்றமை தோன்றற்கு. இச்செய்யுள் சொற்பின்வருநிலை. (௨௭)

### இலக்குமணன் அசுரசேனையை அழித்தல்.

அக்காலையிலக்குவனப்படையுள்
புக்கானயிலம்புபொழிந்தனனால்
உக்காரவரக்கர்தமூரொழியப்
புக்கார்நமனூருறைதென்புலமே. (௨௮)

தேரூமதமாகரிதேர்பரிமா
நூறாயிரகோடியினூழில்படச்
சேரூர்குருதிக்கடலிற்றிடரிற்
கூரூயுகவாவிகுறைத்தனனால். (௨௯)

வாமக்கரிதானழிவார்குழிவன்
தீமொய்த்தவரக்கர்கள்செம்மயிரின்
தாமத்தலைபுக்கதழங்கெரியின்
ஓமத்தைநிகர்த்தவுலப்பிலவால். (௩௰)

சிலையின்கணையூடுநிரைத்தனதிண்
கொலைவெங்களிமால்கரிசெம்புனல்சோண்
டுலைவின்றுகிடந்தனவொத்தனவால்
மலையுஞ்சுனையும்வயிறும்முடலும். (௩௧)

விற்றொத்தியவெங்கணையெண்ணின்வியன்
பற்றொத்தியபோற்படியப்பலவும்
முற்றச்சுடர்மின்மினிமொய்த்துளவன்
புற்றொத்தமுடித்தலைபூழியன. (௩௨)

படுமாரிநெடுங்கணைபாய்தலினால்
விடுமாறுதிரப்புனல்வீழ்வனவால்
தடுமாறுநெடுங்கொடிதாழ்கடல்வாய்
நெடுமாமுகில்வீழ்வநிகர்த்தனவால். (௩௩)

மின்னார்கணைதானறவீசவிழூர்
தன்னூருதிரத்துளமுழ்ந்துதலால்
ஒன்னார்முழுவெண்குடையொத்தனவால்
சென்னாகம்விழுங்கியதிங்களினை. (௩௪)

---

௩௧. மால் - பெரிய.

கொடுநீள்கரிகையொடுதோள்குறையப்
படுநீள்குருதிப்படர்கின்றனவால்
அடுநீளுயிரின்மையினுழ்கிலவால்
நெடுநீரினிடங்கர்நிகர்த்தனவால். (கரு)

கரியுண்டகளத்திடையுற்றனகார்
கரியுண்டியுகப்பனகட்டனவால்
இரியுண்டவரின்னியம்விட்டிலதால்
வரியுண்டவுடற்பொறைமாளினவால். (கசு)

வாயிற்கனல்வெங்கடுவாளியினம்
பாயப்பருமக்குலம்வேவனவால்
வேயுற்றநெடுங்கிரிமீவெயிலாம்
தீயுற்றனபோன்றசினக்கரியே. (கஎ)

அலைவேலையரக்கரையெண்கிளுகிர்த்
தலைமேன்முடியைத்தரைதன்னுதலால்
மலைமேலுயர்புற்றிலைவன்னுகிரால்
நிலைபோமறிப்பநிகர்த்தனவால். (கஅ)

மாவாளிகண்மாமழைபோல்வரலால்
மாவாளிகள்போர்தெறுமாமறவோர்
மாவாளிகள்வன்றலையின்றலைவாம்
மாவாளிகளோடுமறிந்தனரால்.

(இ - ள்). மா - அழகிய, வாளிகள் - அம்புகள், மாமழைபோல் - பெரு மழைபோல், வரலால்-வந்துபாய்வதினுல், மா - பெரிய, ஆளிகள் - யாளிகளை, போர்தெறும் - போரிற்கொல்லுகின்ற, மாமறவோர் - சிறந்தகாலாள் வீரர்களும், மாவாளிகள் - யானைவீரர்களுங் குதிரைவீரர்களும், வன்றலையின்றலை- திண்ணியதலையில், வாம் - தாவிமொய்க்கின்ற, மாவாளிகளோடு - மாவாகிய வண்டுகளோடு, மறிந்தனர் - இறந்தருண்டனர்கள்—எ-று.

அழகென்றது போரின்முறைமையிற் பிறழாமையை. ஆளிநீட்டல் அணி- ஆகுபெயர், அது தும்பையென்பது போரினிலை கூறலாற்பெற்றும். (கக)

அங்கங்கிழியத்துணிபட்டதனுல்
அங்கங்கிழிகுற்றவமர்த்தலைவர்
அங்கங்கிழிசெம்புனல்பம்பவமைந்
தங்கங்கணிரம்பியலம்பியதால்.

இ - ள். அங்கங்கு - அவ்வப்போர்த்துறைகளில், இழிகுற்ற - வெற்றி யின்மையடைந்த, அமர்த்தலைவர் - போர்த்தலைவர்கள், அங்கம் - உறுப்புகள், கிழிய - பிளவுறும்படி, துணிபட்டதனுல் - துணிபட்டமையால், அம் - அழகிய, கங்கு - பருந்துகள், கிழி - அஞ்சாது உண்ண கிழிகின்ற, செம்புனல் - உதிரமானது, பம்ப - பரவ, அலைந்து - அலைகளெறிந்து சென்று, ஆம் - அவ்

விடத்துக் கிடக்கின்ற, கங்கள்-சிரங்களை, திரம்பி - முழுமையு நிறைந்து, அலம்பியது - துகளொழியக் கழுவியது—எ-று.

போர்த்துறைகளென்றது வில்வாள் தண்டுமுதலிய படைகளாற் செய்யும் போர்வகைகளையாகலின் அடுக்குப்பன்மைப் பொருட்டு இராவணனது முதற்போர் நிகழ்ந்தநாட்டொட்டு அரக்கருடையவூனுண்டுடல் தசைந்தனவாகலின் அங்கங்கென்றார், ஆம் என்னும் பெயரொஞ்சுகினவி அம்மெனத் தொகுத்தலாயிற்று. (௪0)

வன்றானையைவார்கணைமாரியினால்
முன்றானையோர்தேர்கொடுமொய்பலதேர்
பின்றாவெதிர்தானவர்பேரணியைக்
கொன்றானெனவெய்துகுறைத்தனனால். (௪௧)

வேறு.

மலைகளுமழைகளும்வானமீன்களும்
அலையவெங்கால்பொரவழிந்தவாமென
உலைகொள்வெங்கனல்பொதியோமமுற்றவால்
தலைகளுமுடல்களுஞ்சாமுந்தாவுவ. (௪௨)

வாரணமனையவன்றணிப்பவான்படர்
தாரணிமுடிப்பெருந்தலைகடாக்கலால்
ஆரணமந்திரமமையவோதிய
பூரணமணிக்குடமுடைந்துபோயதால். (௪௩)

தாறுகொண்மதகரிசமர்த்துதாமரை
சீறியநெடுத்தலையுருட்டிச்செக்கிறத்
துறுகள்செறிந்தபெருநிரத்தோங்கலை
ஆறுகளெழுங்கனலவியச்சென்றவால். (௪௪)

தெரிகணைவிசும்பிடைச்சமர்த்துசெம்மயிர்
வரிகழலரக்கர்தந்தடக்கைவாளொடும்
உருமெனவிழுதலினனலுக்கோக்கிய
எருமைகண்மறிந்தனமறியுமீர்ந்தவால். (௪௫)

அங்கடங்கழிந்தபோருவிக்குன்றினின்
அங்கடங்கிழிந்திலாழிந்தவாடவர்
அடங்கடங்கலும்படர்குருதியாழியின்
அங்கடங்கினர்தொடர்பழியஞ்சினார்.

௪௧, அன்றுயிரமோவியகர்தனமர்ப்:என்னும் பாடம்.

(இ-ள்.) அம் - (சித்திரத்தொழில்பெற்று) அழகாகிய, கடம் - கன்னத்தினின்றும், கழிந்த - நீங்கி ஒழுகுகின்ற, பொருவி - மிக்கமதவருவியையுடைய, குன்றின் - யானையைப்போல, ஆம் - ஆகிய, கடம் - உடல், கிழிந்திலர் - பிளந்திலராகி, அழிந்த - ஊக்கமழிந்த, ஆடவர் - இராக்கத புருடர், தொடர் - மாலைபோல்வருகின்ற, பகழி - அம்புகளுக்கு, அஞ்சினர் - அஞ்சினவராகி, (வேறொளிப்பிடமின்மையால்) அங்கடங்கலும் - அப்போர்க்கள முழுமையும், படர் - பரவியோடுகின்ற, குருதியாழின் - உதிரக்கடலாகிய, அங்கண் - அவ்விடத்து, தங்கினர் - மூழ்கியிருந்தனர்—எ-று.

ஆமென்பது அம்மெனவும், அங்கடங்கினரென்பதுஅங்கடங்கினரென வும் முறையேகுறுக்கலும்தொகுத்தலும்பெற்றன. கற்பினின்வழாஅ நற்பல வுதவி, பாம்பினிற்கடிது தேள்என்பனபோலக்குன்றி னெனவந்தஇன்னுருபு ஆமென்னும்பெயரெச்சங்கொண்டது, இங்ஙனஞ் சாரியை பெற்றுவருதலை, இன் சாரியைமுழுவதுங் கெடுமிடனுணர்த்தும் "இன்னெனவருஉம் வேற்றுமையுருபிற்கின்னென்சாரியையின்மை வேண்டும்" என்னுஞ்சூத்திரத்தை, இன்சாரியைமுதறிரியுமாறகூறும், அவற்றுள் - இன்னினிகரமென்னுஞ்சூத்திரத்தோடு சாரவையாமையால், உரையாசிரியரும் இன்மைவேண்டுமென்னுமிடத்து உம்மை தொக்குநின்ற தாக்கியதனுல், நச்சினார்க்கினியாரும் அமைத்தனர். கடங்கழிந்த பொருவிக்குன்றினினென்னு முவமைமுகத்தானே இராமாநுஜரெய்த கணையால் தைப்புண்ட மத்தகத்தினின்றுமிரண்டுபொரிசங்களிலும் பெருங்குருதி யொழுகலுற்றவுடலினராயினராடவரென்பது. இதுமெய்யுவமை. (சகூ)

காறலத்தொடுதுணிந்தழியக்காய்கதிர்க்
கோறலைத்தலையுறமறுக்கங்கூடினர்
வேறலத்துன்றினர் துனங்குமெய்யினர்
நாறலைக்குடரினர்பலருநண்ணினர். (சஎ)

பொங்குடறுணிந்ததம்புதல்வர்போக்கிலார்
தொங்குடற்றேண்மிசையிருந்துசோர்வுற
அங்குடற்றம்பியைத்தழுவியண்மினர்
தங்குடர்முதுகிடைச்சொரியத்தன்னுவார். (சஅ)

மூடியகெய்யொடுநறவுமுற்றிய
சாடிகள்பொரியொடுதகர்ந்துதன்னுறக்
கோடிகள்பலபலகுழாங்குழாங்களா
ஆடினவறுகுறையறுக்குமாக்கைகள். (சகூ)

காலெனக்கடுவெனக்கலிக்கக்கம்மியர்
நூலெனவுடற்பொறைதொடர்ந்தகோயெனப்
பாலுறுபிரையெனக்கலந்துபன்முறை
வேலுறுசேனையைத்துணித்துவீழ்த்தினன். (ருo)

கண்டனன்றிசைதொறுநோக்கிக்கண்ணகன்
மண்டலமறிகடலன்னமாப்படை
விண்டெறிகாற்பொரமறிந்துவீற்றுறும்
தண்டலையாமெனக்கிடந்ததன்மையே. (இச)

மிடலின்வெங்கடகரிப்பிணத்தின்விண்டொடும்
திடலும்வெம்புரவியுந்தேருஞ்சிந்திய
உடலும்வென்றலைகளுமுதிரத்தோங்கலைக்
கடலுமல்லாவிடையொன்றுங்கண்டிலன். (இஉ)

நூறுநூறுயிரகோடிநோன்கழல்
மாறபோராக்கரையொருவன்வாட்கணை
கூறுகூறாக்கியகுவையின்சோரியின்
ஆறுமேயன்றியோராக்கைகண்டிலன். (இக)

நஞ்சினும்வெய்யவர்நடுக்கிநாவுலர்ந்
தஞ்சினர்சிலர்சிலரடைகின்றார்சிலர்
வெஞ்சினவீரர்கண்மீண்டிலாதவர்
துஞ்சினர்துணையிலரெனத்துளங்கினார். (இச)

ஓமவெங்கனலவிர்துழைக்கலப்பையும்
காமர்வண்டருப்பையும்பிறவுங்கட்டற
காமமர்திரத்தொழின்மறந்துநந்துற
தூமவெங்கனலெனப்பொலிந்துதோன்றினான். (இ௫)

அக்கணத்தடுகணத்தப்புமாரியால்
உக்கவரொழிதரவுயிருளோரெலாம்
தொக்கனரக்கணைச்சூழ்ந்துசுற்றுறப்
புக்கதுகவிப்பெருஞ்சேனைப்போர்க்கடல். (இசு)

ஆயிரமலருடையாழிமாப்படை
ஏயெனுமளவினினழிந்தவெம்பதும்
தூயவன்சிலைவலித்தொழிலுந்தன்பழம்
மேயினவெகுளியுங்கிளரவெம்பினான். (இஎ

மெய்குலைந்திருநிலமடந்தைவிம்முறச்
செய்கொலைத்தொழிலையுஞ்சென்றறியவர்
மொய்குலத்திறுதியுமுனிவர்கண்டனர்
கய்குலைக்கின்றதுங்கண்ணினோக்கினான். (இஅ

இச. நஞ்சினும் - காளகூடவிடத்தினும்.

இந்திரசித்து நியமங்குலைந்து வருந்திக்கூறுதல்.

மானமும்பாழ்படவகுத்தவேள்வியின்
மோனமும்பாழ்படமுடிவிலாமுரட்
சேனையும்பாழ்படச்சிறந்தமந்திரத்
தேனையும்பாழ்படவினையசெப்பினன். (கூக)

வெள்ளமையர்தடன்விரிந்தசேனையின்
உள்ளதக்குரோணியீரைந்தொடோயுமால்
எள்ளருவேள்விகின்றினிநியற்றுதல்
பிள்ளமையனையதுசிதைந்துபேர்ந்ததால். (சுO)

தொடங்கியவேள்வியின்னிமவெங்கனல்
அடங்கியதவிர்துளதமையுமாமன்றே
இடங்கொடுவெஞ்செருவென்றியின்றெனக்
கடங்கியதென்பதற்கேதுவாகுமால். (சுக)

ஆங்கதுகிடக்கான்மனிசர்க்காற்றலென்
நீங்கினனென்பதோரிழிவோருற
ஈங்குநின்றியாவருமியம்பவென்குலத்
தோங்குபோராற்றலுமொளியுமொல்குமால். (சுஉ)

மந்திரவேள்விபோய்மடிந்ததாமெனச்
சிந்தையினினைந்துநொந்திருந்துதேய்வுறல்
அந்தரத்தமரர்தாமனிசர்க்காற்றலன்
இந்திரற்கேயிவன்வலியென்றேசவோ. (சுக)

என்றவன்பகர்கின்றவெல்லையின்னிருங்
குன்றுமொரங்களும்பிணத்தின்கூட்டமும்
பொன்றினகரிகளுங்கவிகள்போக்கின
சென்றனபெரும்படையிரிந்துசிந்தின. (சுச)

ஒதுங்கினரொருவர்கீழொருவர்புக்குறப்
பதுங்கினர்நடுங்கினர்பகழிபாய்தலின்
பிதுங்கினர்குடருடல்பிளவுபட்டனர்
மதம்புலர்களிறெனச்சீற்றமாற்றினர் (சுரு)

வீரன்வெங்கணையொடுங்கவிகள்வீசிய
கார்வரையரக்கர்தங்கடலின்வீழ்ந்தன
போர்நெடுங்கால்பொரப்பொழியுமாமழைத்
தாரையுமேகமும்படிந்ததன்மைய. (சுக)

சுக. மந்திரவேள்வி - இரகசியமாகநடத்தும் யாகம், மந்திரம் - இரகசியம்.

## இந்திரசித்தினை அனுமனிகழ்தல்.

திரைக்கடற்பெரும்படையிரிந்துசிந்திட
மரத்தினிற்புடைத்தரைத்துதிர்த்தமாருதி
அரக்கனுக்கணித்தெனவணுகியன்னவன்
உரைக்கதமுறுவதோர்மாற்றமோதினன். (௬௭)

### வேறு.

நானுனையிரந்துகூறுநயமொழியொன்றுங்கேளாய்
சானகிதன்னைவாளாற்றடிந்ததோதனதன்றந்த
மானமேற்சேனையோடும்வடதிசைநோக்கிமீது
போனதோகோடிகோடிவஞ்சமும்பொய்யும்வல்லாய். (௬௮)

தடந்திரைப்பரவையன்னசக்கரமீகம்புக்குக்
கிடந்ததுகண்டதுண்டோநானெவிகேட்டிலாயோ
தொடர்ந்துபோயயோத்திதன்னைக்கிளையொடுந்துணியநூறி
கடந்தெப்பொழுதுவென்விமுடித்ததேகருமமன்றே. (௬௯)

எந்தகன்ஞாலமெல்லாமினிதுறைந்தியற்கைதாங்கும்
பாந்தளிற்பெரியதிண்டோட்பரதனைப்பழியிற்றீர்ந்த
வேந்தனைக்கண்டுநின்வில்வலங்காட்டிமீண்டு
போந்ததோவுயிருங்கொண்டேயாயினும்புதுமையன்றே. (௭௦)

அம்பரத்தமைந்தவல்விற்சம்பரனுயிர்வாங்கி
உம்பருக்குதவிசெய்தவொருவனுக்குதயஞ்செய்த
நம்பியைமுதல்வரானமூவர்க்குநால்வரான
தம்பியைக்கண்டுநின்றன்றனுவலங்காட்டிற்றுண்டோ. (௭௧)

தீயொத்தவயிரவாளியுடலுறச்சிவந்தசோரி
காயத்தின்செவியினூடும்வாயினுங்கண்களூடும்
பாயப்போயிலங்கைபுக்குவஞ்சனைபரப்பச்செய்யும்
மாயப்போராற்றலெல்லாமின்றொடுமடியுமன்றே. (௭௨)

பாசமோமலரின்மேலான்பெரும்படைக்கலமோபண்டை
ஈசனார்படையோமாயோனேமியோயாதோவின்னும்
வீசநீர்விரும்பிநின்றதற்குநாம்வெருவிச்சாலக்
கூசினேம்போதும்போதுங்கூற்றினுக்குறுகவந்தார். (௭௩)

வரங்கணீருடையவாறுமாயங்கள்வல்லவாறும்
பரங்கொள்வான்வரிவிற்றெய்வப்படைக்கலம்படைத்தவாறும்
உரங்களுநின்றதன்றேயும்மைசாமுயிரினோடும்
சிரங்களைத்துணித்துமென்னக்கண்டதுநிறம்பினுமோ. (௭௪)

---

௭௧. அம்பரத்து - ஆகாயத்தில்.

விடர்துடிக்கின்றகண்டத்தண்ணலும்விரிஞ்சன்றானும்
படர்துடிக்கின்றநாகப்பாற்கடற்பள்ளியானும்
சடர்துடிக்கிலாய்வந்துதாங்கினுஞ்சாதநின்னம்
இடர்துடிக்கின்றதுண்டேயிருத்திரோவியம்புவீரே. (௭௫)

கொல்வனென்றன்னைத்தானேகுறித்தொருசூளுங்கொண்ட
வில்லிவந்தருகுசார்ந்துன்சேனையைமுழுதும்வீட்டி
வல்லைநீபொருவாயென்றுவிளிக்கின்றான்வரிவிலானின்
ஒல்லொலியையசெய்யுமோமத்துக்குறப்பொன்றாமோ. (௭௬)

மூவகையுலகுங்காக்குமுதலவன்றம்பிபூசல்
தேவர்கண்முனிவர்மற்றோர்திறத்திறத்துலகஞ்சேர்ந்தார்
யாவருங்காணநின்றானினியிறைதாழ்ப்பதென்னோ
சாவதுசரதமன்றோவென்றனன்றருமங்காப்பான். (௭௭)

இந்திரசித்தின் வீரவசனம்.

அன்னவாசகங்கள்கேளாவனலுயிர்த்தலங்கற்பொற்றோள்
மின்னகுபகுவாயூடுவெயிலுகநகைபோய்வீங்க
முன்னரேவந்திம்மாற்றமொழிகின்றீர்மொழிந்தமாற்றம்
என்னதோநீயென்னையிகழ்ந்ததென்றினையசொன்னான். (௭௮)

மூண்டபோர்தோறும்பட்டுமுடிந்தனர்முறையிற்றீர்த்து
மீண்டபோதனையெல்லாமறந்திரோவிளிதல்வேண்டி
ஈண்டவாவென்னுகின்றீரித்தனைபேரும்பட்டு
மாண்டபோதுயிர்தந்தீயுமருந்துவைத்தனிரோமான. (௭௯)

இலக்குவனுமற்றையிராமனையாகவீண்டு
விலக்குவரெல்லாம்வந்துவிலக்குகவரக்கின்வெள்ளம்
குலக்குலமாகமாளுங்கொற்றமுமனிசர்கொள்ளும்
அலக்கணுமுனிவர்தாமுமமரருங்காண்பரன்றே. (௮௦)

பானுடைவில்லுமென்பொற்றோள்களுமிருக்கவின்னும்
ஊனுடையுயிர்கள்யாவுமுய்யுமோவொழிப்பிலாமல்
கூனுடைக்குரங்கினோடுமனிசரைக்கொன்றுசென்றவ்
வானினுந்தொடர்ந்துகொள்வென்மருந்தினுமுய்யமாட்டீர். (௮௧)

வேட்கின்றவேள்வியின்றுபிழைத்ததுவென்றேமென்று
கேட்கின்றவீரமெல்லாங்கிளத்துவீர்கிளத்தல்வேண்டா
நாட்கின்றதில்லையும்மைத்தனித்தனிதலைகள்பாறச்
சூட்கின்றவீரமென்கைச்சரங்களாய்த்தோன்றுமன்றே. (௮௨)

மற்றெலாநும்மைப்போலவாயினாற்சொல்லமாட்டேன்
வெற்றிதான்முன்றந்தீர்விளைவதுவெல்லற்கெல்லாம்

௭௭. சரதம் - சத்தியம், உண்மை.

உற்றானுருத்ததாலத்தொருமுறையெதிரேகிற்கக்
கற்றிரோவின்னமாண்டுகெடத்திரோகடத்திரோதான். (அ௩)

இந்திரசித்துப் போருக்கெழுதல்.

நின்மின்கணின்மினென்னுநெருப்பெழவிழித்துநீண்ட
மின்மின்கொள்கவசமிட்டான்வீங்கினன்றாணிவீரப்
பொன்மின்கொள்கோதைகையிற்பூட்டினன்பொறுத்தான்போர்வில்
என்மின்கொள்வயிரத்திண்டேரேறினனெறிந்தானனி. (அ௪)

ஊதினன்சங்கம்வானத்தொண்டொடிமகளிரொண்கண்
மோதினர்கணத்தின்முன்னேமுழுவதுமுருங்கமுற்றிக்
காதினனென்னவானோர்கலங்கினர்கயிலையானும்
போதினன்றானுமின்றுபுகுந்ததுபெரும்போரென்றார். (அ௫)

இழைத்தபேர்யாகத்தானேயாஞ்செய்தவத்தினாலே
பிழைத்ததுபிழைத்தலாலேயிவனினிப்பிழைக்கலாற்றான்
அழைத்ததுவிதியேயாகுமிலக்குவனம்பினாலே
உழைத்ததுகாண்கின்றேமென்றணங்கினரும்பரெல்லாம். (அ௬)

காண்டொழிலோசைவீசிச்செவிகொளுநடத்தலோடும்
ஆண்டொழிலுடனேகையினடுக்கியமரனுங்கல்லும்
மீண்டனமறிந்துசோரவீழ்ந்தனவிழுந்தமெய்யே
மாண்டனமென்றேயுன்னிபிரிந்ததுகுரங்கின்மாலை. (அ௭)

அனுமன் மலைகொண்டு போருதல்.

படைப்பெருந்தலைவர்நின்றாரல்லவரிறுதிபற்றும்
அடைப்பருங்காலக்காற்றலாற்றலதாகிக்கீறிப்
புடைத்திரிந்தோடும்வேலைப்புனலெனவிரியலுற்றார்
கிடைத்தபோதுமனுண்டோர்செழுங்கிரிகிழித்துக்கொண்டான். (அ௮)

நில்லடாநில்லுநில்லுநீயடாவாகிபேசிக்
கல்லடாநின்றதென்னைப்போர்க்களத்தமரர்காணக்
கொல்லலாமென்றோனன்றகுரங்கென்றாற்கூடுமன்றே
நல்லபோர்வாவாவென்றனமனுக்குரமனுய்ந்நின்றான். (அ௯)

வில்லெடுத்துருத்துநின்றவீரருள்வீரனேரே
கல்லெடுத்தெறியவந்தவனுமனைக்கண்ணினோக்கி
மல்லெடுத்துயர்ந்ததோளார்க்கென்கொலோவலியதென்னுஞ்
சொல்லெடுத்தமரர்சொன்னார்தாதையுந்துணுக்கமுற்றான். (௯

அ௫. முருங்க - அழிய.

வீசினன்வயிரக்குன்றம்வெம்பொறிக்குலங்கள்விண்ணின்
ஆசையினிமிர்ந்துசெல்லவாயிரமுருமொன்றாகப்
பூசனைபிளப்பதென்னவருமதன்புரிவைநோக்கிக்
கூசினவுலகமெல்லாங்குலைந்ததவ்வரக்கர்கூட்டம். (௧௧)

குண்டலமொடுவில்வீசமேருவிற்குவிந்ததோளான்
அண்டமுங்குலுங்கவார்த்துமாருதியசனியஞ்ச
விண்டலத்தெறிந்தகுன்றம்வெறுந்துகளாகிவீழக்
கண்டனனெய்ததன்மைகண்டிலரிமைப்பில்கண்ணர். (௧௨)

இந்திரசித்தன் அநுமனை அம்பினல் துன்புறுத்துதல்.

மாறொருகுன்றம்வாங்கிமறுகுவான்மார்பிற்றோளில்
காறருகாலிற்கையிற்கழுத்தினினுதலிற்கண்ணில்
ஏறினவென்பமன்றேவெரிமுகக்கடவுள்வெம்மை
சீறினபகழிமாரிநீக்கடுவிடத்திற்றோய்ந்த. (௧௩)

வெதிரொத்தசிகரக்குன்றின்மருங்குறவிளங்கலானும்
எதிரொத்தவிருளைக்கீறியெழுகின்றவியற்கையானும்
கதிரொத்தபகழிக்கற்றைகதிரொளிகாட்டலானும்
உதிரத்தின்செம்மையானுமுதிக்கின்றகதிரோனொத்தான். (௧௪)

ஆயவனயர்தலோடுமங்கதன்முதல்வரானோர்
காய்சினந்திருகிவந்துகலந்தனர்கதிரோன்பெற்ற
தூயசுக்கிரீவன்வந்துதோன்றினன்றோன்றக்கண்டு
தீயவனவனைநோக்கிக்கனலெனச்சினந்துசொன்னான். (௧௫)

வெம்பினைசெருவின்வந்துமேவினும்வெருண்டுசியம்
தும்பியைத்தொடர்வதல்லாற்குரங்கினைத்தொடர்வதுண்டோ
அம்பினைமாட்டியென்னேசிறிதுபோராற்றவல்லான்
தம்பியைக்காட்டித்தாரீர்சாதிரோசலத்தினென்றான். (௧௬)

அநுமனைக்கண்டிலீரோவவனினும்வலியிரோவென்
றனுவலதன்றேதோளினவ்வலிதவிர்ந்ததுண்டோ
இனுமுனைநீலீரோவெவ்வலியீட்டிவந்நீர்
மனிசனைக்காட்டிநுந்தமலைதொறும்வழிக்கொளீரே. (௧௭)

என்றுரைத்தினவறன்மேலெழுகின்றவியற்கைநோக்கிக்
குன்றமுமாழும்வீசிக்குறுகினர்குழாங்கடோறும்
சென்றனபகழிமாரிமேருவையுருவித்தீர்வ
ஒன்றலகோடிகோடியுனைத்தனவலியுமோய்ந்த. (௧௮

௧௪. கற்றை - கூட்டம்.

படுகின்றதன்றேவன்றன்பெரும்படைபகழிமாரி
விடுகின்றதன்றேவென்றியரக்கனுங்காளமேகம்
இடுகின்றவேள்விமாண்டதினியவன்பிழைப்புறுமே
முடுகென்றனரக்கன்றம்பிநம்பியுஞ்சென்றமூண்டான். (௧௧)

வேறு.

இலக்குமணன் அனுமன்றோளின்மீது ஏறிநின்று பொருதல்.

வந்தானெடுந்தேரைமாருதிமயங்காமுகமலர்ந்தான்
எந்தாய்கடிதேறுயெனதிருதோண்மிசையென்றான்
அந்தாகவென்றவர்தையனுமமைவாயினனிமையோர்
சிந்தாகுலங்களைர்தானெனநெடுஞ்சாரிகைதிரிந்தான். (௧௦௦)

இலக்குமண இந்திரசித்த யுத்தம்.

காராயிரமுடனாகியதெனலாகியகடியோன்
ஓராயிரம்பரிபூண்டதொருயர்தேர்மிசையுயர்ந்தான்
சோரியினிருவோர்களுநெடுமாருதிகிரியும்
போராயிரமுடையானெனத்திசையெங்கணும்பெயர்ந்தான். (௧௦௧)

தீயொப்பனவுருமொப்பனவுயிர்வேட்டனதிரியும்
பேயொப்பனபசியொப்பனபிணியொப்பனபிழையா
மாயக்கொடுவினையொப்பனமழுவொப்பனகழுகின்
தாயொப்பனசிலவாளிகடுரந்தான்றுயிருறந்தான். (௧௦௨)

அவ்வம்பினையவ்வம்பினினறுத்தானிகலரக்கன்
எவ்வம்பினியுலகத்துளதென்னும்படியெய்தான்
எவ்வம்பரமெவ்வெண்டிசையெவ்வேலைகள்பிறவும்
வவ்வுங்கடையுகமாமழைபொழிகின்றதுமான. (௧௦௩)

ஆயோனெடுங்குருவிக்குலமெனலாஞ்சிலவம்பால்
போயோடிடத்தூர்த்தானவைபொறியோவெனமறியத்
தூயோனுமத்துணைவாளிகள்றொடுத்தானவைதடுத்தான்
தீயோனுமக்கணத்தாயிரநெடுஞ்சாரிகைதிரிந்தான். (௧௦௪)

கல்லுந்நெடுமலையும்பலமரனுங்கடைகாணும்
புல்லுஞ்சிறுபொடியும்மிடைதெரியாவகைபுரியச்
செல்லுந்நெறிதொறுஞ்சென்றனதெறுங்கால்புரைமறவோன்
மல்லின்முதிர்தேருஞ்சினவயமாருதிதானும். (௧௦௫

இருவீருமிவனின்னவனிவனின்னவனென்னச்
செருவீருமறியாவகைதிரிந்தார்கணைசொரிந்தார்

௧௦௪. ஆயோன் - இந்திரசித்து.

ஒருவீரருமிவரொக்கிலரெனவானவருவந்தார்
பொருவீரையும்பொருவீரையும்பொருதாரெனப்பொருதார். (௧௦௬)

விண்செல்கிலசெல்கின்றனவிசிகம்மெனவிமையோர்
கண்செல்கிலமனஞ்செல்கிலகணிதம்முறுமெனினோர்
எண்செல்கிலநெடுங்காலவனிடைசெல்கிலனுடன்மேல்
புண்செல்வனவல்லாலொருபொருள்செல்வனதெரியா. (௧௦௭)

எரிந்தேறினதிசையானையுமிடியாமெனப்பொடியாய்
நெரிந்தேறினநெடுநாணொலிபடர்வானிறையுருமின்
சொரிந்தேறினசுடுவெங்கணைதொடர்ந்தாரகைமுழுதும்
கரிந்தேறினவுலகியாவையுங்கனல்வெம்புகைகதுவ. (௧௦௮)

வெடிக்கின்றனதிசையானையும்விழுகின்றனவிடிவந்
திடிக்கின்றனசிறுநாணொலியிருவாய்களுமெதிராக்
கடிக்கின்றனகனல்வெங்கணைகலிவானுறவிசைமேல்
பொடிக்கின்றனபொறிவெங்கனலிவைகண்டனர்புலவோர். (௧௦௯)

கடல்வற்றினமலையுக்கனபருவக்கனல்பருகுற்
றுடல்வற்றினமாமுற்றினகனல்பற்றினவுதிரம்
சுடர்பற்றினசுறவுக்கனதுணிபட்டுகிர்கணையின்
திடருற்றதுபரவைக்குழிதிரிவுற்றதுபுவனம். (௧௧௦)

எரிகின்றனவயில்வெங்கணையிருசேனையுமிரியத்
திரிகின்றனபுடைநின்றிலதிசைசென்றனசிதறிக்
கரிபொன்றினபரிமங்கினகவிசிந்தினகடல்போல்
சொரிகின்றனபொரும்செம்புனலுலைகின்றனர்கொலையால். (௧௧௧)

புரிந்தோடினபுகைந்தோடினபொரிந்தோடினபுகைபோய்
எரிந்தோடினகரிந்தோடினவிடமோடினவலமே
திரிந்தோடினசரிந்தோடினசெறிந்தோடினதிசைமேல்
சரிந்தோடினகருங்கோளரிக்கிளையான்விடுசரமே. (௧௧௨)

நீரொத்தனநெருப்பொத்தனபொருப்பொத்தனநிமிரும்
காரொத்தனவுருமொத்தனகடலொத்தனகதிரோன்
தேரொத்தனவிடைமேலவன்சிரிப்பொத்தனவுலகின்
வேரொத்தனவாயொத்தனவிருதன்விடுசரமே. (௧௧௩

ஏமத்தடகவசத்தனவொருவோரெனவிருவோர்
வாமப்பொருர்தோண்மேலெனவதனத்தனவுயிர்த்த
தாமத்தனமார்பத்தனசரணத்தனதங்காக்
காமக்குலமடமங்கையர்கடைக்கண்ணெனக்கணைகள். (௧௧

௧௧௨. புரிந்தோடின - சுழன்றோடின.

எக்காளினிநெத்தேவர்களெத்தானவரெவரே
அன்னூர்செருவொத்தாரெனவிமையோரெடுத்தார்த்தார்
பொன்னூர்சிலையிருகால்களுமொருகால்பொறையுயிரா
முன்னாளினிவிரண்டாம்பிறைமுளைத்தாலெனவளைத்தார். (௧௧௫)

வேகின்றனவுலகங்களெனர்விடுகின்றனவிசிகம்
போகின்றனசுடர்வெந்தனவிமையோர்களும்புலர்ந்தார்
ஆகின்றதொரூழிகாலமிதாமன்றெனவயிர்த்தார்
கோகின்றனதிசையானைகள்செவிநாணொலிநுழைய. (௧௧௬)

மீனுக்கதுநெடுவானகம்வெயிலுக்கதுசுடரும்
மானுக்கதுமுழுவெண்மதிமழையுக்கதுவானம்
தானுக்கதுகுலமால்வரைதலையுக்கதுதரைசால்
வானுக்கவெவ்வுலகத்தினுமுளவாயினவுயிரும். (௧௧௭)

அக்காலையினயில்வெங்கணையையெய்துபுக்கழுந்தத்
திக்காசரவென்றான்மகனிளங்கோவுடல்செறித்தான்
கைக்கார்முகம்வளையச்சிலகனல்வெங்கணைகவசம்
புக்காகமுங்கழன்றோடிடவிளங்கோளரிபொழிந்தான். (௧௧௮)

தெரிந்தான்சிலசுடர்வெங்கணைதேர்பூண்டனசினமா
இரிந்தோடிடத்தாந்தோடினவிமையோரையுமுன்னான்
அரிந்தோடினவெரிந்தோடினவலைவேரத்தடலரக்கன்
சொரிந்தானுயர்நெடுமொருதிதோண்மேலினின்றோன்ற. (௧௧௯)

குருதிப்புனல்சொரியும்முயர்குன்றென்னுமவநுமன்
பருதித்திறற்றமொத்தவையிளங்கோளரிபார்த்தான்
ஒருதிக்கினுமுயராவகையவன்றேரினையுதிர்த்தான்
பொருதிக்கணம்வென்றானெனச்சரமாரிகள்பொழிந்தான். (௧௨௦)

அத்தேரழிந்ததுநோக்கியவிமையோரெடுத்தார்த்தார்
முத்தேவருமுவந்தாரவனுருமேறெனமுனிந்தான்
தத்தாவொருதடந்தேரினைத்தொடர்ந்தான்சாந்தலைமேல்
பத்தேவினனவைபாய்தவினிளங்கோளரிபதைத்தான். (௧௨௧)

பதைத்தானுடனிலைத்தான்சிலபகுவாயயிற்பகழி
விதைத்தானவன்விலக்காதமுன்விடைமேல்வருவிமலன்
மதத்தாலெதிர்வருகாலனையொருகாலுறமருமத்
துதைத்தாலெனத்தனித்தோர்கணையவன்மார்பிடைதைத்தான். (௧௨௨)

கவசத்தையுநெடுமார்பையுங்கழன்றக்கணைகழிய
அவசத்தொழிலடைந்தானதற்கிமையோரெடுத்தார்த்தார்

௧௧௭. மீனுக்கது - நட்சத்திரம் உதிர்த்தது.

திவசத்தெழுகதிரோனெனத்திரிகின்றதோர்கணையால்
துவசத்தையுந்துணித்தேயவன்மணித்தோளையுந்தொளைத்தான். (கஉங)

உன்னாடியவுதிரப்புனல்கொழுந்தீயெனவொழுகத்
தன்னாடியவடமேருவிற்சலித்தானுடறரித்தான்
தொன்னாயிரங்கடும்போர்க்கணைதுரந்தானவைதுறைபோய்
வின்னாநெடுங்கவசத்திடைநுழையாதுகவெகுண்டான். (கஉச)

மறித்தாயிரம்வடிவெங்கணைமருமத்தினைமறியாக்
குறித்தாயிரம்பரித்தேரவன்விடுத்தானவைகுறிபார்த்
திறுத்தானெடுஞ்சரத்தாலொருதனிநாயகற்கிளையோன்
செறித்தானுடல்சிலபொற்கணைசிலைநாணறத்தெரித்தான். (கஉரு)

வில்லிங்கிதுநெடுமால்சிவனயன்மேலவர்தனுவே
கொல்லென்றுகொண்டயிர்த்தானெடுங்கவசத்தையுங்குலையாச்
செல்லுங்கொடுங்கணையாவையுந்திசையாவையுந்தெரிந்தான்
வெல்லுந்தரமில்லாமையுமறிந்தானறமெலிந்தான். (கஉசா)

அத்தன்மையையறிந்தானவன்சிறுதாதையுமனுகா
முத்தன்முகநோக்காவொருமொழிகேளெனமொழிவான்
எத்தன்மையுமிமையோர்களைவென்றானிகல்கண்டால்
பித்தன்மனந்தளர்ந்தானினிப்பிழையானெனப்பகர்ந்தான். (கஉஎ)

கூற்றின்படிகொடுத்தானறக்கொலைவாளெயிற்றரக்கன்
ஏற்றுஞ்சிலைநெடுநாணொலியுலகேழினுமெய்தச்
சீற்றந்தலைத்தலைசென்றுறவிதுநீரெனத்தெரியாக்
காற்றின்படைதொடுத்தானவனதுவேகொடுகாத்தான். (கஉஅ)

அனலின்படைதொடுத்தானவனதுவேகொடுகாத்தான்
புனலின்படைதொடுத்தானவனதுவேகொடுபொறுத்தான்
கனவெங்கதிரவன்வெம்படைதுரந்தான்மனங்கரியான்
சினவெந்திறலிளங்கோளரியதுவேகொடுதீர்த்தான். (கஉகூ)

இதுகாத்திகொலென்றுவெடுத்திசிகப்படையெய்தான்
அதுகாப்பதற்கதுவேபுனைதென்றுத்தொடுத்தமைத்தான்
செதுகாப்படைதொடுப்பேனெனநினைந்தான்றிசைமுகத்தான்
முதுமாப்படைதுரந்தாலினிமுடிந்தாயெனமொழிந்தான். (கஙO)

வானின்றலைநிலைநின்றவர்மழுவாளியுமலரோன்
தானும்முனிவாரும்பிறதவத்தோர்களுமறத்தோர்
கோனும்பிறபிறதேவர்கள்குழுவும்மனங்குலைந்தார்
ஊனம்மினிபிலதாகுகவிளங்கோக்கெனவுரைத்தார். (கஙக)

---

கஉஎ. பித்தன் - வைத்தியக்காரனை இந்திரசித்து.

ஊழிக்கடையிறுமத்தில்யுலகியாவையுமொன்றும்
ஆழிப்பெருங்கனறன்றொருசுடரென்னவுமாகாப்
பாழிச்சிலைவிரியத்தனிபடர்கின்றதுபார்த்தான்
ஆழித்தனிமுதலையுகற்கிளையானதுமதித்தான். (௧௧௨)

பிரமாத்திரப் பிரயோகம்.

மாட்டானினிமலரோன்படைமுதற்போதுதன்வலத்தால்
மீட்டானவன்றடுத்தானலன்முடிக்தானெனவிட்டான்
காட்டானினிக்காத்தாலதுகருமம்மலதென்னாத்
தாட்டாமரைமலரோன்படைதொடுப்பேனெனச்சமைந்தான். (௧௧௩)

நன்றுகுகவுலகுக்கெனமுதலோன்மொழிநவின்றான்
பின்றாதவனுயிர்மேற்செலவொழிகென்பதுபிடித்தான்
ஒன்றாகவிம்முதலோன்படைதனைமாய்க்கவென்றுரைத்தான்
நின்றானதுதாக்தானிவன்றனிவானவர்நினைத்தார். (௧௧௪)

தான்விட்டனமலரோன்படையினமற்றிடைதருமே
வான்விட்டதுமன்விட்டதுமறவோனுடலதுமே
தேன்விட்டுகுமலரோன்படைதீர்ப்பாயெனத்தெரிந்தான்
வன்விட்டவன்மறம்விட்டிடலன்னவானவருவந்தார். (௧௧௫)

உருமேறவர்தெதிர்த்தாலதனெதிரேசெருப்புய்த்தால்
வருமாங்கதுதவிர்த்தாலெனமலரோன்படைமாயத்
திருமாறனக்கிளையான்படையுலகேழையுந்தீய்க்கும்
அருமாகனலனநின்றதுவிசும்பெங்கணுமாக. (௧௧௬)

படையங்கதுபடராவகைபகலோன்குலமருமான்
இடையொன்றதுதடுக்கும்படிச்சந்தீபுகவெய்தான்
தொடையொன்றினைக்கணைமீமிசைத்துறுவாயினியென்றான்
விடையொன்றொருவிடமுற்றனவிடுவித்ததுவேகம். (௧௧௭)

விண்ணாதுகண்டார்வயவீரர்க்ஙனிமேன்மேல்
ஒண்ணாதனவுளவோவெனமனத்தேறினருவந்தார்
எண்ணாதநம்பெருமானவர்க்கரிதோவெனக்கடைபார்த்
தெண்ணாநிலைபகர்ந்திரம்பாருங்கேளிரானவிசைத்தான். (௧௧௮)

நாராயணனரென்றிவருநாயகமர்க்கெல்லாம்
வேராய்முழுமுதற்காரணப்பொருளாய்வினைகடந்தோர்
ஆராயினுந்தெரியாததொர்பெருமொழியினகத்தார்
பாராயணமறைநான்கையுங்கடந்தார்நிலையழியோர். (௧௧௯)

௧௧௪. ஒன்றாகவிம்முதலோன்படை தீர்ப்பாயெனத் தெரிந்தானென்றும் பாடம்.

௧௧௮. ஒண்ணாதன - செய்துமுடிக்கக்கூடாதன.

அறத்தாறழிவுளதாமெனவறிவுற்றொடர்ந்தனுகாப்
புறத்தார்புகுந்தறத்தாரெனப்புகுந்தன்னதுபுரப்பார்
மறத்தார்முதற்குலம்வேரறமாய்ப்பானிவண்வந்தார்
திறத்தாலதுதெரிந்தியாவருந்தெரியாவகைதிரிவார். (௧௪0)

உயிர்தோறுமுற்றுளன்றேத்திரத்தொருவன்னெனவுரைக்கும்
அயிராநிலையுடையானிவனவனிவ்வுலகனைத்தும்
தயிர்தோய்பிறையெனலாம்வகைதலந்தேறியதலைவன்
பயிராததொர்பொருளின்னதென்றுணரீரிதுபரமால். (௧௪௧)

நெடும்பாற்கடற்கிடந்தானும்பண்டிவர்நாங்குறைநேர
விடும்பாக்கியமுடையார்களைக்குலத்தொடறவீட்டி
இடும்பாக்கியத்தறங்காப்பதிற்கிசைந்தாரெனவிதெலாம்
அடும்பாக்கியத்துடைச்செஞ்சடைமுதலோன்பணித்தமைந்தான். (௧௪௨)

அறிந்தேயிருந்தறியேமவனெனுமாலையையிழப்பேம்
பிறிந்தேயினிமுழுதையமும்பெருமானுரைபிடித்தேம்
எறிந்தேம்பகைமுழுதும்மினித்தீர்ந்தேயிடர்கடந்தேம்
செறிந்தோர்வினைப்பகைவாவெனத்தொழுதார்நெடுந்தேவர். (௧௪௩)

சக்கரப் பிரயோகம்.

மாயோனெடும்படைவாங்கியவளைவாளெயிற்றரக்கன்
நீயோவிதுதடுப்பாயெனினினைக்காரெதிர்நிற்பார்
போயோவிசும்படைவாயிதுபிழையாதெனப்புகலாத்
தீயோன்மிசையுலகியாவையுந்தடுமாறிடத்துரந்தான். (௧௪௪)

(இலக்குமணன் தன்னை நாராயணனாக நினைக்க ஆழி வணங்கி விலகுதல்

சேமித்தனரிமையோர்தமைச்சிரத்தேந்தியசக்கரத்தார்
ஆமித்தொழில்பிறர்யாவருமடைந்தார்முதலுடையார்க்
காமிப்பதுமுடிவிப்பதுபடிகின்றதுகண்டான்
நேமித்தனியரிதானெனனினைந்தானெதிர்நடந்தான். (௧௪௫)

தீக்கின்றதிவ்வுலகேழையுமெனச்செல்வதுதெரிந்தான்
நீக்குந்தரமல்லாமுழுமுதலோனெனநினைந்தான்
வீக்கின்றிலதயல்சென்றதுவிலங்காவலந்தொடுமேல்
போய்த்தங்கதுகனன்மாண்டதுபுகைவீந்ததுபொதுவே. (௧௪௬)

ஏத்தாடினரிமையோர்களுங்கவியின்குலமெல்லாம்
கூத்தாடினரரமங்கையர்குனித்தாடினர்தவத்தோர்
காத்தாயுலகனைத்துமெனக்களித்தாடினர்கமலம்
பூத்தானுமம்மழுவாளியுமுழுவாய்கொடுபுகழ்ந்தார். (௧௪௭)

---

௧௪௫. எதிர்நடந்தான் - நேமியினெதிரே சென்றான்.

## பாசுபதாத்திரப் பிரயோகம்.

அவனன்னதுகண்டானிவனோவெனவயிர்த்தான்
இவனன்னதுமுதலேயுடையிறையோனெனவியவா
எவனென்னினுநன்றுகவினியெண்ணலெனென்னாச்
சிவனன்படைதொடுத்தாருயிர்முடிப்பேனெனத்தெரிந்தான். (கசஅ)

பார்ப்பான்றருமுலகியாவையுமொருநாளொருபகலே
தீர்ப்பான்படைதொடுப்பேனெனத்தெரிந்தானதுதெரியா
மீப்பாவியவிமையோர்குலம்வெருவுற்றதிப்பொழுதே
மாய்ப்பானெனவுலகியாவையுமறுகுற்றனமயங்கா. (கசகூ)

நானேசிவன்றரப்பெற்றதுதவஞான்பலவுழந்தே
தானேபிறரறியாததுதந்தேனெனச்சமைந்தான்
ஆனாலிவனுயிர்கோடலுக்கையம்மிலையென்னா
மேனாளுமிதனையேவிடினெதிர்நிற்பவரில்லை. (கரு0)

மனத்தான்மலர்புனல்சாந்தமொடவிதூபமும்வகுத்தான்
நினைத்தானிவனுயிர்கொண்டிவணெய்வாயெனவுயிர்த்தான்
சினத்தானெடுஞ்சிலைநாண்டடச்சேந்தான்மேலுறச்செலுத்தா
எனைத்தாயதோர்பொருளாவிடைநடையில்லதைவிட்டான். (கருக)

சூலங்களுமழுவுஞ்சுடுகணையுங்கறைகடரும்
ஆலங்களுமரவங்களுமசனிக்குலமெவையும்
காலன்றனதுருவங்களுங்கரும்பூதமும்பெரும்பேய்ச்
சாலங்களுமிமிர்கின்றனவுலகெங்கணுந்தானாய். (கருஉ)

ஊழிக்கனலொருபாலதனுடனேதொடர்ந்துடற்றும்
சூழிக்கொடுங்கடுங்காற்றதனுடனேவரத்தூர்க்கும்
ஏழிற்குமப்புறத்தாயனபெரும்போர்க்கடலிழிந்தாங்
காழித்தலைகிடந்தாலெனநெடுந்தூங்கிருளடைய. (கருங)

இரிந்தார்குலநெடுந்தேவர்களிருடிக்குலத்தவரும்
பரிந்தாரிதுபழுதாகிலதுவாமெனும்பயத்தால்
செரிந்தாங்கழிகுரங்குற்றதுபகருந்துணைநெடிதே
திரிந்தாரிருசுடரோடுலகொருமூன்றுடன்றிரிய. (கருச)

## இலக்குமணன் அல்லாதார் பாசுபதாத்திரங்கண்டு நடுங்குதல்.

பார்த்தானெடுந்தகைவீடணனுயிர்காலுறப்பயத்தால்
வேர்த்தானிதுவிலக்குந்துணையுளதோமுதல்வீரர்
தீர்த்தாவெனவழைத்தானதற்கிளங்கோளரிசிரித்தான்
போர்த்தானவர்களிவீரருமவன்றூணிழல்புகுந்தார். (கருரு)

---

கசஅ. சிவன்படை - பாசுபதாத்திரம்.

அவையம்முனக்கவயம்மெனுமனைவோரையுமஞ்சேல்
அவையம்முமக்களித்தோமெனத்தன்கைத்தலத்தமைத்தான்
உவையம்முறுமுலகின்பயமுணர்ந்தேனினியொழியேன்
இவையன்மனமுடையான்படைதொடுப்பேனெனத்தெளிந்தான். (௧௩௬)

அப்பொற்படைமனத்தானினைந்தர்ச்சித்ததையழிப்பாய்
இப்பொற்படைதனைமற்றொருதொழில்செய்கிலையென்னுத்
துப்பொப்பதொர்கணைகூட்டினன்றரந்தானவைதொடா
எப்பொற்படையெவையும்புகவிழுங்குற்றதொரிமைப்பின். (௧௩௭)

விண்ணார்த்ததுமண்ணார்த்ததுமேலோர்மணிமுரசின்
கண்ணார்த்ததுகடலார்த்ததுமழையார்த்ததுகலையோ
டெண்ணார்த்ததுகவியார்த்ததுவிசயம்மெனவிசயப்
பெண்ணார்த்தனளறமார்த்ததுபிறரார்த்ததுபெரிதால். (௧௩௮)

இறுகாலையினுலகியாவையுமவிப்பானிகற்படையை
மறுகாவகைவலித்தானதுவாங்கும்படிவல்லான்
தெறுகாவனிற்கொடியோனுமற்றதுகண்டகந்திகைத்தான்
அறுகால்வயக்கவிவீரருமரியென்பதையறிந்தார். (௧௩௯)

தெய்வப்படைபழுதுற்றதுவெனக்கூசுதல்சிதையா
வெய்வித்தகமுனைதென்னிதுபிழையாதெனவிசயாக்
கய்வித்தகமதனாற்சிலகணைவித்தினனவையும்
மொய்வித்தகன்றடந்தோளினுநுதற்குட்டினனுழக்க. (௧௪௰)

வெய்யோன்மகன்முதலாகியவிறலோர்மிக்கிறலோர்
கய்யோய்விலர்மலைமாரிபினிருதர்க்கடல்கடப்பார்
உய்யாரெனவடிவாளிகள்சதகோடிகளுய்த்தான்
வெய்யோனயறனிநின்றதன்சிறுதாதையைவெறுத்தான். (௧௪௧)

வேறு.

விபீடணனை இந்திரசித்து இகழ்தல்.

முரட்டடர்த்தண்டுமேத்திமணிசரைமுறையைக்குன்றிப்
பிரட்டரிற்புகழ்ந்துபேதையடியரினிரந்துபின்சென்
றிரட்டுறுமுரசமென்னவிசைத்ததேயிசைக்கின்றாயைப்
புரட்டுவன்றலையையின்றுபழியெனவொழிவென்போலாம். (௧௪௨)

விழிபடமுதல்வரெல்லாம்வெதும்பினரொதுங்கவீழ்த்து
வழிபடவுலகமூன்றுமடிபடவர்த்தேனும்
அழிபடைதாங்கலாற்றுமாடவர்யாண்டும்வெஃகாப்
பழிபடவந்தவாழ்வையாவரேபகரற்பாலார். (௧௪௩)

---

௧௩௬. அவையம் - அது பயமின்மையைச் செய்யெனல்.

நீருளதனையுமுள்ளமீனெனநிருதரெல்லாம்
வேருளதனையும்வீவாரிராவணனோடுமீளார்
ஓருளதொருவனின்றாய்நீயுனையுறையநின்றோ
டாருளரரக்கர்நிற்பாராகவீற்றிருக்கவையா. (கசுச)

முந்தைநாளுலகந்தந்தமூத்தவானோர்கட்கெல்லாம்
தந்தையார்தந்தையாரைச்செருவிடைச்சாயத்தள்ளிக்
கந்தனார்தந்தையாரைக்கயிலையோடொருகைக்கொண்ட
எந்தையாராகசெய்வதிப்பெரும்பலங்கொண்டேபோ. (கசுரு)

பனிமலர்த்தவிசின்மேலோன்பார்ப்பனகுலத்துக்கெல்லாம்
தனிமுதற்றலைவனானவுன்னைவந்தமரர்தாழ்வார்
மனிசருக்கடிமையாய்நீயிராவணன்செல்வமாள்வாய்
இனியுனக்கென்னோமானமெங்களோடடங்கிற்றன்றே. (கசுசு)

சொல்வித்தும்பழித்துநுங்கைமூக்கினைத்துணிவித்தோரார்
எல்வித்தும்படைக்கையுங்கடமையினையெங்களோடும்
கொல்வித்துத்தோற்றுநின்றகூற்றினர்குலத்தையெல்லாம்
வெல்வித்தும்வாழும்வாழ்வின்பெருமையேவிழுமிதன்றே. (கசுஎ)

எழுதியோரணிந்ததிண்டோளிராவணனிராமனம்பால்
புழுதியேபாயலாகப்புரண்டநாள்புரண்டுமேல்வீழ்ந்
தழுதியோநீயுங்கூடவார்த்தியோவிவனைவாழ்த்தித்
தொழுதியோயாதோசெய்யத்துணிந்தனைவிசயத்தோனாய். (கசுஅ)

ஊனுடையுடம்பினீங்கிமருந்தினாலுயிர்வந்தெய்து
மானுடரிலங்கைவேந்தைக்கொல்வரேநீயுமன்னான்
தானுடைச்செல்வந்துய்க்கத்தகுதியேசாத்தினேனும்
வானிடைப்புகுதியன்றேயான்பழிமறுக்கினென்றான். (கசுகூ)

இந்திரசித்திற்கு விபீடணன் பதிலுரைத்தல்.

அவ்வுரையமையக்கேட்டவீடணனலங்கன்மோலி
செவ்விதிற்றுளக்கித்தன்பான்முறுவலுந்தெரிவதாக்கி
வெவ்விதுபாவஞ்சாலத்தருமமேவிழுமிதைய
இவ்வுரைகேட்டியென்னாவினையனவிளம்பலுற்றான். (கஎ0)

அறந்துணையாவதல்லாலருநரகமையநல்க
மறந்துணையாகமாயாப்பழியொடும்வாழமாட்டேன்
துறந்திலேன்மெய்ம்மையெய்தும்பொய்ம்மையேதுறப்பதல்லால்
பிறந்திலேனிலங்கைவேந்தன்பின்னவன்பிழைத்தபோதே. (கஎக)

---

கசுரு. தந்தையார்தந்தையார் :- திருமால்.

உண்டிலெனறவம்பொய்ம்மையுரைத்திலென்வலியாலொன்றும்
கொண்டிலென்மாயவஞ்சங்குறித்திலென்யாருங்குற்றம்
கண்டிலரென்பாலுண்டேனீயிருங்காண்டிரன்றே
பெண்டிரிற்றிறம்பினாரைத்துறந்ததுபிழையிற்றாமோ. (௧௭௨)

மூவகையுலகமேத்துமுதலவனெவர்க்குமூத்த
தேவர்தந்தேவன்றேவிகற்பினிற்சிறந்துளாளை
நோவனசெய்தநீதென்றுரைப்பதுன்றுதைசிறுப்
போவெனப்போந்தேனின்றுநரகதிற்பொருந்துவேனோ. (௧௭௩)

வெம்மையிற்றருமநோக்காவேட்டதேவேட்டுவீயும்
உம்மையேபுகழும்பூண்கதுறக்கமுமுமக்கேயாக
செம்மையிற்பொருந்திமேலோரொழுக்கினோடறத்தைத்தேறும்
எம்மையேபழியும்பூண்கநரகமுமெமக்கேயாக. (௧௭௪)

அறத்தினைப்பாவம்வெல்லாதென்னுமதறிந்துஞானத்
திறத்தினதுறுமென்றெண்ணித்தேவர்க்குந்தேவைச்சேர்ந்தேன்
புறத்தினிற்புகழேயாகபழியொடும்புணர்கபோதச்
சிறப்பினிற்பெறுகதீர்கவென்றனன்சீற்றந்தீர்ந்தான். (௧௭௫)

இந்திரசித்து விபீடணன் மீது அம்பேவுதல்.

பெறுஞ்சிறப்பெல்லாமென்கைப்பிறைமுகப்பகழிபெற்றால்
இறுஞ்சிறப்பில்லையையவெங்கினிப்போவையென்னாத்
தெறுஞ்சிலைக்கலுழனன்னவொருகணைதொடுத்துச்செம்பொன்
உறுஞ்சுடர்க்கழுத்தைநோக்கித்துரக்கினானுருமின்வெய்யோன். (௧௭௬)

விபீடணன் மீது வந்தவம்பினை இலக்குமணன் தடுத்தல்.

அக்கணையசனியென்னவன்றெனவாலமுண்ட
முக்கணன்சூலமென்னமுடுகியமுடிவைநோக்கி
இக்கணத்திற்றானிற்றானென்கின்றவிமையோர்காணக்
கைக்கணையொன்றால்வள்ளலக்கணைகண்டங்கண்டான். (௧௭௭)

இந்திரசித்து வேலேவுதலும்இலக்குமணன் தடுத்தலும்.

கோலொன்றுதுணிதலோடுங்கூற்றுக்குங்கூற்றமன்னான்
வேலொன்றுவாங்கிவிட்டான்வெயிலொன்றுவிழுவதென்ன
நாலொன்றுமூன்றுமானபுவனங்கணடுங்கலோடும்
நூலொன்றுவிதிவலானுமதனையுநுறுக்கிவீழ்த்தான். (௧௭௮)

விபீடணன் இந்திரசித்தின் தேர்ப்புரவி யாதியவழித்தல்.

வேல்கொடுகொல்லலுற்றானென்றொருவெகுளிபொங்கக்
கால்கொடுகாலிற்கூடிக்கைதொடர்கனகத்தண்டால்
கோல்கொளுமொருவனோடுங்கொடித்தடத்தேரிற்பூண்ட
பால்கொளும்புரவியெல்லாம்படுத்தினான்றுடிப்புமாற. (௧௭௯)

---

௧௭௮. நூலொன்று வரிவிலானும் என்றும்பாடம்.

அழிந்ததேர்மீதுநின்றானுயிர்கோடியம்பால்
பொழிந்தவன்றோளின்மேலுமிலக்குவன்புயத்தின்மேலும்
ஒழிந்தபேருரத்தின்மேலுமுதிரநீர்வாரியோதம்
அழிந்திழிந்தோடநோக்கியண்டமுமிரியவார்த்தான். (௧௮௦)

இந்திரசித்து மறைந்துஇராவணனிடம் புகுதல்.

ஆர்த்தவனையபோழ்தினழிவிலாத்தேர்கொண்டன்றிப்
போர்த்தொழில்புரியலாகாதென்பதோர்பொருளையுன்னிக்
காத்தவரிமையாமுன்னம்விசும்பிடைக்கார்தானென்னும்
வார்த்தையைநிறுத்திப்போனானிராவணன்மருங்குசென்றான். (௧௮௧)

௨௬ - வது. நிகும்பலைப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௧௦௭௧.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

---

இருபத்தேழாவது

## இந்திரசித்துவதைப்படலம்.

இராவணன் இந்திரசித்தை வினாவுதல்.

விண்ணிடைக்கார்தானென்பார்வஞ்சனைவிளைக்குமென்பார்
கண்ணிடைக்கலக்கநோக்கியையுறவுழக்குங்காலை
புண்ணிடையாக்கைச்செந்நீரிழிதரப்புக்குகின்ற
என்னுடைமகனைநோக்கியிராவணனினையசொன்னான். (௧)

தொடங்கியவேள்விமுற்றும்பெற்றிலாத்தொழிலின்றோண்மேல்
அடங்கியவம்பையென்னையறிவித்தழிவில்யாக்கை
நடுங்கினைபோலச்சாலத்தளர்ந்தனைகலுழனண்ணப்
படங்குறையரவமொத்தாயுற்றதுபகர்தியென்றான். (௨)

இந்திரசித்துப் பதிலுரைத்தல்.

சூழ்வினைமாயையெல்லாமும்பியேதுடைக்கச்சுற்றி
வேள்வியைச்சிதையநூறிவெகுளியாலெழுந்துவீங்கி
ஆழ்வினையாற்றலாற்றனமர்த்தொழிற்புக்குநின்றான்
தாழ்விலாப்படைகண்மூன்றுந்தொடுத்தனென்றடுத்துவிட்டான். (௩)

இந்திரசித்துஇலக்குமணன் பெருமைகூறுதல்.

நிலஞ்செய்துவிசும்புஞ்செய்துநெடியவன்படையின்றானை
வலஞ்செய்துபோவதானான்மற்றினிவலியதுண்டே

---

- மாயம்.

நலஞ்செய்தபாவத்தாலேகொடும்பழிதேடிக்கொண்டோம்
லஞ்செயினுலகமூன்றுமிலக்குவன்முடிப்பன்றானே. (௪)

முட்டியசெருவின்முன்னமுதலவன்படையைமுன்பா
யிட்டிலருலகையஞ்சியாதலால்வென்றுமீண்டேன்
ஒட்டியபோதுங்காத்தாரின்னமுங்கினாவல்லார்
ஈட்டியவலியினாலேகோறலைத்துணிந்துநின்றார். (௫)

ஆதலானஞ்சினேனென்றருளலையாசைதானச்
சீதைபால்விடுதியாயினனையவர்சீற்றந்தீர்வர்
போதலும்புரிவர்செய்ததீமையும்பொறுப்பருன்மேல்
காதலாலுரைத்தேனென்றானுலகெலாங்கலக்கிவென்றான். (௬)

இராவணன் இந்திரசித்தினை வெறுத்தல்.

இயம்பலுமிலங்கைவேந்தனெயிற்றினிலவுமெய்தப்
புயங்களுங்குலுங்கநக்குப்போர்க்கினியொழிதிபோலாம்
மயங்கினைமனிசன்றன்னையஞ்சலைவருந்தலைய
சயங்கொடுதருவெனின்றேமனிசரைத்தனுவொன்றாலே. (௭)

முன்னையோரிறந்தாரெல்லாமிப்பகைமுடிப்பரென்றும்
பின்னையோர்நின்றாரெல்லாம்வென்றனர்பெயர்வரென்றும்
உன்னைநீயவரைவென்றுதருதியென்றுணர்ந்துமன்றால்
என்னையேநோக்கியானிந்நெடும்பகைதேடிக்கொண்டேன். (௮)

பேதைமையுரைத்தாய்மைந்தவுலகெலாம்பெயரப்பேராக்
காதையென்புகழினோடுநிலைபெறவமரர்காண
மீதெழுமொக்கனன்னயாக்கையைவிடுவதல்லால்
சீதையைவிடுவதுண்டோவிருபதுதிண்டோளுண்டாய். (௯)

வென்றிலனென்றபோதும்வேதமுள்ளளவும்யானும்
நின்றனனன்றேமற்றவ்விராமன்பேர்நிற்குமாயின்
பொன்றுதலொருகாலத்துந்தவிருமோபொதுமைத்தன்றே
இன்றுளார்நாளைமாள்வார்புகழுக்குமிறுதியுண்டோ. (௧0)

விட்டனன்சீதைதன்னையென்னனும்விண்ணோர்நண்ணிக்
கட்டுவதல்லாற்பின்னையானெனக்கருதுவாரோ
பட்டனனென்றபோதுமெளிமையிற்படுகிலேன்யான்
எட்டினோடிரண்டுமாயதிசைகளையெறிந்துவென்றேன். (௧௧)

சொல்லியென்பலவுநின்னிருக்கையைத்தொடர்ந்துதோளில்
புல்லியபகழிவாங்கிப்போர்த்தொழிற்சிரமம்போக்கி
எல்லியுங்கழித்தியென்னுவெழுந்தனனெழுந்துபேய்வாழ்
மல்லியமுனித்தாவன்னுன்வருகதேர்தருகவென்றான். (௧௨)

---

௧. பேராக்காதை - அழியாத கதை.

### இந்திரசித்து இராவணனைத்தடுத்துத் தான் இரதமேறுதல்.

எழுந்தனன்றன்னைநோக்கியிணையடியிறைஞ்சியெந்தாய்
ஒழிந்தருள்சிற்றஞ்சொன்னவுறுதியைப்பொறுத்தியானே
கழிந்தனரென்றபின்னர்கல்லவாக்காண்டியென்னு
மொழிந்தனன்றெய்வத்தேர்மேலேறினான்முடியலுற்றான். (கங)

படைக்கலவிஞ்சைமற்றும்படைத்தனபலவுந்தன்பால்
அடைக்கலமாகத்தேவரளித்தனவெல்லாம்வாங்கிக் [க்
கொடைத்தொழில்வேட்டோர்க்கெல்லாங்கொடுத்தனன்கொடியோன்றன்னை
கடைக்கணானோக்கிநோக்கியிருகணீர்கலுழப்போனான். (கச)

இலங்கையினிருதரெல்லாமழிந்தனர்விரைவினெய்தி
விலங்கலத்தோளனின்னைப்பிரிகலம்வினிதுமென்னு
வலங்கொடுதொடர்ந்தார்தம்மைமன்னனைக்காமின்யாதும்
கலங்கலிரினிமேற்சென்றமனிசரைக்கடப்பலென்றான். (கரு)

வணங்குவார்வாழ்த்துவார்தன்வடிவினைநோக்கித்தம்வாய்
உணங்குவாருயிர்ப்பாருள்ளமுருகுவார்வெருவலுற்றுக்
கணங்குழைமகளிர்ண்டியிரைத்தவர்கடைக்கணென்னும்
அணங்குறைநெடுவேல்பாயுமமர்கடந்தரிதிற்போனான். (கசு)

ஏயினனின்னனாகவிலக்குவனெடுத்தவில்லான்
சேயிருவிசும்பைநோக்கிவீடணநீயோனப்பால்
போயினனாதல்வேண்டும்புரிந்திலனென்றமென்பான்
ஆயிரம்புரவிபூண்டதேரின்பேரரவங்கேட்டான். (கஎ)

வேறு.

குன்றிடைசெறிதரவடவரையின்குவடுருள்குவதெனமுடுகுதோறும்
பொன்றிணிகொடியனதிடியுருமினதிர்குரன்முரல்லதுபுனைமணியின்
மின்றிரள்சுடரதுகடல்பருகும்வடவனல்வெளியுறவருவதெனச்
சென்றதுதிசைதிசையுலகிரியத்திரிபுவனமுமுறுதனியிரதம். (கஅ)

கடன்மறுகிடநிலைகுலையநெடுங்கரியிரிதரவெதிர்கவிகுலமும்
குடன்மறுகிடமலைகுலையநிலங்குழியொடுகிழிபடவழிபடரும்
இடமறுகியபொடிமுடுகிடலும்மிருளவதெனவெழுமிகலரவின்
படமறுகிடவெதிர்பரவியவண்பகலிருள்வருவனபகையிரதம். (ககூ)

### இந்திரசித்தின் போர்.

ஆர்த்ததுவிருதர்தமனிகமுடனமாரும்வெருவினர்கவிகுலமும்
வேர்த்ததுவெருவலொடலம்வரலால்விடுகணைசிதறினனடுதொழிலோன்
நீர்த்தனுமவனெதிர்முடுகிநெடுந்திசைசெவிடுறிதரவிசைகெழுநின்
போர்த்தொழில்புரிதலுமுலகுகடும்புகையொடுகிகையனல்பொறுளியதால். (

வீடணனமலனைவிறல்கெழுபோர்விடலையையினியிடைவிடலுனதேல்
குடலைதருமலர்வாகையெனத்தொழுதனனவனவிலழகனுமக்
கோடணைவரிசிலையுலகுலையக்குலவரைபிதிர்படநிலவரையின்
சேடனும்வெருவுறவுருமுறழ்திண்டெறுகணைமுறைமுறைசிதறினனால். (௨௧)

ஆயினவ்வளவையினன்முகவாயடுகணையவன்விடவிவன்விடலும்
தீயினுமெரிவனவுயிர்பருகச்சிதறினகவினொடினநிருதர்
போயினதிசைதிசையனநிறைப்புரன்பவர்முடிவிலர்பொருதிறலோர்
எயினவொருவரையொருவர்குறித்தெரிகணையிருமழைபொழிவனபோல். (௨௨)

அற்றனவனல்விழிநிருதன்வழங்கடுகணையிடையிடையடலரியின்
கொற்றவன்விடுகணைமுடுகியவனுடல்பொதிகுருதிகள்பருகினகொண்
டுற்றனவொளிகிளர்கவசநுழைந்துறுகிலதெறுகிலவநுமனுடல்
புற்றிடையரவெனநுழையநெடும்பொருசரமவனவையுணர்கிலனால். (௨௩)

ஆயிடையிளையவன்விடமனையானவணிதுகவசமுமழிவுபடத்
தூயினனயின்முகவிசிகநெடுந்தொளைபடவிழியனல்சொரியமுனிந்
தேயினனிருதனதெரிகணைதானிடனிலபடுவனவிடையிடைவந்
தோய்வுறுவனவதுதெரிவுறலாலூறநினரிமையவருநகையினால். (௨௪)

வில்வினின்வலிதரவரிதெனலால்வெயிலினுமனலுமிழயில்விரவில்
செல்லெனமிடல்கொடுகடவினன்மற்றதுதிசைமுகன்மகனுதவியதால்
எல்லினும்வெளிபடவெதிர்வதுகண்டிளையவனெழுவகைமுனிவர்கடம்
சொல்லினும்வலியதொர்சுடுகணையானடுவிருதுணிபடவுறநினனால். (௨௫)

ஆணியினிலையெனவிசிகநுழைத்தாயிரமுடல்புகவழிபடுசெஞ்
சோணிதநிலமுறவுலறிடவுந்தொடுகணைவிடுவனமிடல்கெழுதிண்
பாணிகள்கடுகினமுடுகிடலும்பகலவன்மருமகனடுகணைவன்
தூணியையுருமுறழ்பகழிகளாற்றுணிபடமுறைமுறைசிதறினனால். (௨௬)

தேருளதெனினிவன்வலிதொலையானெனுமதுதெரிவுறவுணருறுவாக்
போருறுபுரவிகள்படுகிலவாற்புனைபிணிதுணிகிலபொருகணையால்
சிரிதுபெரிதிதனிலைமையெனத்தெரிபவனொருசுடுதெறுகணையால்
சாரதிமலைபுரைதலையைநெடுந்தரையிடையிடுதலுநிலைதிரிய. (௨௭)

வேறு

உய்வினையொருவன்றுண்டாலுலத்தலிற்றவத்தைநண்ணி
அய்வினைகளியவைவானறிவிற்குமுவமையாகி
மெய்வினையமைந்தகாமம்விற்கின்றவிராகிற்றேலாய்
பொய்வினைமகளிர்கற்பும்போன்றதப்பொலம்பொற்றிண்டேர். (௨௮)

துன்றுபாய்புரவித்தேருமுறைமுறைதானேதூண்டி
அன்னினன்பரிக்குத்தன்போரகமேயாவமாக

---

௨௮. அய்வினை - ஐந்து ஆசையில் வரும்வினை.

வள்ளன்மேலதுமன்றன்மேன்மற்றையோர்மற்றின்டோண்மேல்
உள்ளுறப்பகழிதூவியார்த்தனனெவருமுட்க. (௨௯)

வீரரென்பார்கட்கெல்லாமுன்னிற்கும்வீரர்வீரன்
பேரரென்பார்களாகும்பெற்றியிற்பெற்றித்தாமே
சூரரென்றுரைக்கற்பாலார்துஞ்சும்போதுணர்விற்சோரார்
தீரரென்றமரர்செப்பிச்சிந்தினர்தெய்வப்பொற்பூ. (௩௰)

எய்தவன்பகழியெல்லாம்பறித்தவனென்மேலெய்யும்
கய்தமொருதுன்னமுயிரினக்கலங்காதியாக்கை
மொய்கணைகோடிகோடிமொய்க்கவுமினைப்பொன்றில்லான்
அய்யனுமிவனோடெஞ்சமாண்டொழிலாற்றலென்றான். (௩௧)

தேரினைக்கடாவிவானிற்செல்லினுஞ்செல்லுஞ்செய்யும்
போரினைக்கடந்துமாயம்புணர்க்கினும்புணர்க்கும்போயக்
காரினைக்கடந்தும்வஞ்சங்கருதினுங்கருதுங்காண்டி
வீரமெய்ப்பகலினல்லால்விளிகிலனிருளின்வெய்யோன். (௩௨)

என்றெடுத்திலங்கைவேந்தற்கிளையவனியம்பலின்னே
பொன்றுவதல்லாலப்பாலினிப்பொருபோக்குமுண்டோ
சென்றழிச்செல்லுமென்றேதெறுகணைவலியிற்றீர்த்தால்
வென்றியிப்பொழுதேகோடுக்காணெனவிளம்புமெல்லை. (௩௩)

சூரியாஸ்தமனம்.

செம்புனற்சோரிச்செக்கர்திசையுறச்செறிகையாலும்
அம்பெனவுற்றகோற்றத்தாயிரங்கதிர்களாலும்
வெம்புபொற்றேரிற்றோன்றுஞ்சிறப்பினுமரக்கன்வெய்யோன்
உம்பரிற்சென்றானொடொத்துநித்தனனருக்கனுப்பால். (௩௪)

விடிந்ததுபொழுதும்வெய்யோன்விளங்கினனுலகமீதா
விடுஞ்சுடர்விளக்கமென்னவாக்கரினிருளும்வீயக்
கொடுஞ்சினமாயச்செய்கைவலியொடுங்குறைந்துகுன்ற
முடிந்தனராக்கனென்னுமுழங்கினரும்பர்முற்றும். (௩௫)

ஆழியாதருலத்தண்ணறனருளினீந்த
தோழியாதபோதுஞ்சிலைசாத்திருந்தபோதும்
போரழியானிவ்வெய்யோன்புகழழியாதபொற்றோன்
வீரவிதானையென்றான்வீடணன்வினைவதோர்வான். (௩௬)

பச்சைவெம்புரவிவீயாபல்லியற்சில்லிபாரின்
நிச்சயமற்றுநீங்காவென்பதுநினைந்துவில்லின்
விச்சையின்கணவனானவின்மையால்வயிரமிட்ட
அச்சினோடாழிவெவ்வேறுக்கினானிமைக்கில். (௩௭)

௩௰. தெய்வப்பொற்பூ - கற்பகப்பூ.

மணிநெடுந்தேரின்றட்டுவிட்டதுமறிதலோடும்
அணிநெடும்புரவியெல்லாமாற்றலவாயவன்றே
திணிநெடுமரமொன்றூழிவாண்மழுத்தாக்கச்சிந்திப்
பணைநெடுமுதலுநீங்கிப்பாங்குறுபறவைபோல. (௩௮)

இந்திரசித்து வானத்துண் மறைந்துபோநதல்.

அழிந்ததேர்த்தட்டினின்றுமங்குள்ளபடையையள்ளிப்
பொழிந்தனனிளையவன்னல்கணைகளாற்றுணித்துப்போக்க
மொழிந்திருவகையில்விண்ணைமூட்டினனுலகமூன்றும்
இழிந்தனவென்னவார்த்தான்கண்டிலரோசைகேட்டார். (௩௯)

மல்லின்மாமாரியன்னதோளினன்மழையின்வாய்ந்த
கல்லின்மாமாரிபெற்றவரத்தினாற்சொரியுங்காலைச்
செல்லுவான்றிசைகளோரார்சிரத்தினோடுடல்கள்சிந்தப்
புல்லினார்நிலத்தைநின்றவானரவீரர்போகார். (௪௦)

காண்கிலன்கல்லின்மாரியல்லதுகாளைவீரன்
சேண்கலந்தொளித்துநின்றசெய்கையாற்றிசைகளெங்கும்
மாண்கலந்தனந்தமாயன்வடிவெனமுழுதும்வௌவ
ஏண்கலந்தமைந்தவாளியேவினனிடைவிடாமல். (௪௧)

மறைந்தனதிசைகளெங்குமாறுபோய்மலையுமாற்றல்
குறைந்தனவிருண்டமேகக்குழாத்திடைக்குருதிக்கொண்மூ
உறைந்துளதென்னநின்றானுருவினையுலகமெல்லாம்
நிறைந்தமன்கண்டான்காணுவினையதோர்நினைவதானான். (௪௨)

இந்திரசித்தின் கரமறுந்தல்.

சிலையறுதெனினுமற்றத்திண்ணியோன்றிரண்டதோளாம்
மலையறுதொழியாதென்னுவரிசிலையொன்றுவாங்கிக்
கலையறுத்திங்களன்னவாளியாற்கையைக்கொய்தான்
விலையறுமணிப்பூணோடும்வில்லொடுநிலத்துவீழ. (௪௩)

பாகவான்பிறைபோல்வெவ்வாய்ச்சுடுகணைபடுதலோடும்
வேகவான்கடுங்காலெற்றமுற்றும்போய்விளிந்தநாளின்
மாகவான்றடக்கைமண்மேல்விழுந்ததுமணிப்பூண்மின்ன
மேகமாகாயத்திட்டவில்லொடும்வீழ்ந்ததென்ன. (௪௪)

படித்தலஞ்சுமந்தநாகம்பாகவான்பிறையைப்பற்றிக்
கடித்ததுபோலக்கோலவிரல்களாவிறுகக்கட்டிப்
பிடித்தவெஞ்சிலையினோடும்பேரெழில்வீரன்பொற்றோள்
துடித்ததுமாமுங்கல்லூர்துகள்படக்குரங்குதுஞ்ச. (௪௫)

௪௨. கொண்மூ - மேகம்.

அந்தரமதனினின்றவானவருக்கன்வீழாச்
சந்திரன்வீழாமேருமால்வரைதகர்ந்துவீழா
இந்திரசித்தன்பொற்றேரினிற்றிடைவிழுந்ததென்றால்
எந்திரமனையவாழ்க்கையினிச்சிலருகர்தென்னென்றார். (௪௬)

மொய்யறுமூர்த்தியன்னமொய்ம்பினனம்பினாலப்
பொய்யறச்சிறிதென்றெண்ணும்பெருமையான்புதல்வன்பூத்த
மய்யறக்கரிதென்றெண்ணுமனத்தினன்வயிரமன்ன
கய்யறத்தலையற்றான்போற்கலங்கினர்நிருதர்கண்டார். (௪௭)

அன்னதுநிகழும்வேலையார்த்தெழுந்தரியின்வெள்ளம்
மின்னெயிற்றரக்கர்சேனையாவருமீளாவண்ணம்
கொன்னசக்கரத்தாற்பல்லான்மரங்களான்மானக்குன்றால்
பொன்னெடுநாட்டையெல்லாம்புதுக்குடியேற்றிற்றன்றே. (௪௮)

காலங்கொண்டெழுந்தமேகக்கருமையான்செம்மைகாட்டும்
ஆலங்கொண்டிருண்டகண்டத்தமரர்கோனருளிற்பெற்ற
சூலங்கொண்டெறிவலென்றுதோன்றினன்பகையின்றோற்ற
மூலங்கொண்டுணராநின்னைமுடித்தன்றிமுடியேனென்றான். (௪௯)

இந்திரசித்துமாயப்போர்புரிதல்.

காற்றெனவருமேறென்னக்கனலெனக்கடைநாளுற்ற
கூற்றெனவுருவுகொண்டுகுறுகியதென்னக்கொல்வான்
தோற்றினனதனைக்காணாவினித்தலைதுணிக்குங்காலம்
ஏற்றதென்றயோத்திவேந்தற்கிளையவனினையசெய்தான். (௫௦)

இராமனேபரம் பொருளாகலிந்திரசித்தினைக்கொல்கவென
அம்பேவுதல்.

மறைகளேதேறத்தக்கவேதியர்வணங்கற்பால
இறையவனிராமனென்னுநல்லறமூர்த்தியென்னின்
பிறையெயிற்றிவனைக்கோறியென்றொருபிறைவாய்வாளி
நிறையுறவாங்கிவிட்டானுலகெலாநிறுத்திநின்றான். (௫௧)

இந்திரசித்தின் தலையற்றுவிழுதல்.

நேமியுங்குலிசவேலுநெற்றியினெருப்புக்கண்ணன்
காமவேளுமற்றைநான்முகன்படையுநாணத்
தீமுகங்கதுவவோடிச்சென்றவன்சிரத்தைத்தள்ளிப்
பூமழைமாரிசிந்தப்பொலிந்ததகப்பகழிப்புத்தேள். (௫௨)

அற்றவன்றலைமீதோங்கியண்டமுற்றணுகாமுன்னம்
பற்றியருலத்தோடுமுடனிறைபகழியோடும்
எற்றியகாலக்காற்றன்மின்னொடுமிடியினோடும்
சுற்றியபுயல்வீழ்ந்தென்னவீழ்ந்ததுசோரன்யாக்கை. (௫௩)

---

௪௬. எந்திரமனையவாழ்க்கை - பிறந்துபிறந்து உழலும் வாழ்க்கை.

விண்டலத்திலங்குதிங்களிரண்டொடுமின்னும்வீசும்
குண்டலத்துணைகளோடுங்கொந்தளக்குஞ்சிச்செங்கேழ்ச்
சண்டவெங்கதிரோன்செக்கர்த்தழலொடுமருவித்தாம
மண்டலம்விழுந்ததென்னவிழுந்ததுதலையுமண்மேல். (௫௪)

உயிரிறப்புக்ககாலையுண்ணின்றவுணர்வினோடும்
செயிரறுபொறியுமந்தக்கரணமுஞ்சிந்துமாபோல்
அயிலெயிற்றரக்கருள்ளாராற்றலராகியான்ற
எயிலுடையிலங்கைநோக்கியிரிந்தனர்படையும்விட்டார். (௫௫)

தேவர் ஆரவாரித்தல்.

வில்லாளராணர்க்கெல்லாமேலவன்விளிதலோடும்
செல்லாதவ்விலங்கைவேந்தற்கரசெனக்களித்ததேவர்
எல்லாருந்துசுகீக்கியேறிடவார்த்தபோது
கொல்லாதவிரதத்தார்தங்கடவுளர்கூட்டமொத்தார். (௫௬)

திருமூர்த்தியாதிதேவரை வானரர் தெரிசித்தல்.

வாக்தருமுதல்வன்மற்றைமான்மறிக்கரத்துவள்ளல்
புரந்தரன்முதல்வராயநான்மறைப்புலவர்பாரில்
நிரந்தரர்தோன்றிநின்றாருளினானிறைந்தநெஞ்சர்
கரந்திலரவரையாக்கைகண்டனகுரங்குங்கண்ணால். (௫௭)

இறந்தவானரர் உயிர்பெற்றெழுதல்.

அறந்தலைநின்றார்க்கில்லையழிவெனுமறிஞர்வார்த்தை
சிறந்ததுசரங்கள்பாயச்சிந்தியசிரத்தவாகிப்
பறந்தலையதனின்மற்றைப்பாதகவரக்கன்கொல்ல
இறந்தனகவிகளெல்லாமெழுந்தனவிமையோரேத்த. (௫௮)

ஆக்கையினின்றுவீழ்ந்தவரக்கன்றன்றலையையங்கை
தூக்கினனுள்ளங்கூர்ந்தவாலிசேய்தூசசெல்ல
மேக்குயர்ந்தமரர்வெள்ளமள்ளினர்தொடர்ந்துவீசும்
பூக்கிளர்பந்தர்கீழலநுமன்மேலினவல்போனான். (௫௯)

இராமன் இந்திரசித்தின் தலையைக்காண்டல்.

வீங்கியதோளன்றேய்ந்துமெலிகின்றபழியன்மேன்மேல்
ஓங்கியவுவகையூறமுள்ளத்தனும்பர்க்காகத்
தேங்கியகடலைமுன்னாட்டிரிந்தவன்சேய்செங்கையால்
தாங்கியகுரிசில்பற்றிக்கொணர்ந்திடுந்தலையைக்கண்டான். (௬௦)

எல்லிவான்மதியினூற்றகறையெனவென்மேல்வந்து
புல்லியவழுவும்போகாதென்றகம்புலம்புகின்றேன்

௫௪. தாமமண்டலம்-ஒளிமண்டலம், ௫௮. தூசசெல்ல-முன்னணியிற்போக.

சொல்லியதருமகல்கத்துவக்கற்றுத்துயரந்தீர்ந்தேன்
செல்வமும்பெறுதற்குண்டேகுறையினிச்சிறுமையாதோ. (கக)

தென்றலையாழிசூழ்ந்ததிண்மதிலிலங்கைகாக்கும்
புன்றலைக்கள்வன்பெற்றபுதல்வனையினவல்வீழ்த்த
வன்றலையெடுத்துநீமுன்வருதலால்வானரேச
என்றலையெடுக்கலானேனினிக்குடையெடுப்பேனென்றான். (கஉ)

வான்றலையெடுக்கவேலைமண்டலையெடுக்கவானோர்
கோன்றலையெடுக்கவேதக்குலந்தலையெடுக்கக்குன்றாத்
தேன்றலையெடுக்குந்தாராய்தேவரைவென்றான்றீய
வன்றலையெடுத்தாய்நீயென்றுரைத்தனருவகைமிக்கார். (கங)

வாதன்போய்மறுகாதின்றமனத்தினன்மாயத்தோனைச்
சாதம்போர்வென்றமீளுந்தருமமேதாங்குகென்பான்
வீரதம்பூண்டுயிரினேடுந்தன்னுடைமீட்சிநோக்கும்
பாதன்போன்றிருந்தான்றம்பிவருகின்றபரிசைப்பார்த்தான். (கச)

வன்புலங்கடந்துமீளுந்தம்பிமேல்வைத்தமாலைத்
தன்புலகயனமென்னுந்தாமரைசொரியுந்தாரை
அன்புகொலழுகணீர்கொலானந்தவாரியேகொல்
என்புகளுருகிச்சோருங்கருணைகொல்யாரதோர்வார். (கரு)

இராமன்காலேகிரோ இந்திரசித்தின் தலையை இடுதல்.

விழுந்திழிகண்ணினீருமுவகையுங்களிப்பும்வீங்க
எழுந்தெதிர்வந்தவீரனிணையடிமுன்னரிட்டான்
கொழுந்தெழுஞ்செக்கர்க்கற்றைக்குழாங்கொளவெயிற்றினீட்டம்
அழுந்துறம்பிடித்தபேழ்வாய்த்தலையடியிறையொன்றாக. (கசு)

தலையினைநோக்குந்தம்பிதொற்றவைதழீஇயபொற்றோன்
மலையினைநோக்குமின்றமாருதிவலியைநோக்கும்
சிலையினைநோக்குந்தேவர்செய்கையைநோக்குஞ்செய்த
கொலையினைநோக்குமொன்றாமுரைத்திலன்களிப்புக்கொண்டான். (கஎ)

இராமன்இலக்குமணனைத் தழுவி மகிழுதல்.

கானமேகத்தைச்செக்கர்கலந்தெனக்கரியகுன்றம்
தான்வெயிற்பரந்ததென்னநம்பிதன்றம்பிமார்பில்
தோனின்மேலுதிரச்செங்கேழ்ச்சுவடுதன்னுருவிற்றோன்றத்
தாளின்மேல்வணங்கினனைத்தழுவினன்றனித்தொன்றில்லான். (கஅ)

வேறு.

இராமன் இலக்குமணனைப் புகழுதல்.

கம்பமதத்துக்களியானைக்காவற்சனகன்பெற்றெடுத்த
கொம்புமென்பாலினிவந்துகுறுகினளன்றெனக்குளிர்ந்தேன்

கஉ. புன்றலைக்கள்வன் - இராவணன்.

வம்புசெறிந்தமலர்க்கோயின்மறையோன்படைத்தமாநிலத்தில்
தம்பியுடையான்பகையஞ்சானென்னுமாற்றந்தந்தனையால். (௬௯)

வேறு.

தூக்கியதுணிவாங்கித்தோளொடுமார்பைச்சுற்றித்
வீக்கியகவசபாசமொழித்ததுவினைவிளக்கித்
தாக்கியபகழிக்கூர்வாய்தடித்தபுண்டழும்புமின்றிப்
போக்கினன்றழுவிப்பல்காற்பொற்றடந்தோளினுேற்றி. (௭0)

இராமன் விபீடணனைப்புகழ்தல்.

ஆடவர்திலகனின்னுலன்றிகலநமனென்னும்
சேடனுலன்றுவேறோர்தெய்வத்தின்சிறப்புமன்று
வீடணன்றந்தவெற்றியீதெனவிளம்பிமெய்ம்மை
ஏடவிழலங்கன்மார்பனிருந்தனனினிதினிப்பால். (௭௧)

உஎ-வது இந்திரசித்துவதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௧௪௪.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

இருபத்தெட்டாவது

# இராவணன்சோகப்படலம்.



ஓதரோதனவேலைகடந்துராய்ப்
பூதரோதரம்புக்கெனப்போர்த்திழி
சீதரோதக்குருதித்திரையொரீஇத்
தூதரோதவெங்காலிற்றுனைந்துளார்.

(இ - ள்.) தூதர் - தூதுவர், ஓத - இந்திரசித்துக்கொலையுண்ட செய்தியைச்சொல்லும்படி, ஓதம் - கடலோசையையொத்த, ரோதனம் - (போரிற்பட்டதமருக்காக ஒழிந்தோர்) அழுகையினது, வேலை - கரையை, கடந்து - தாவி, உராய் - (ஒருவரையொருவர்) உராய்ந்து சென்று, போர்த்து -(அப்போர்க்களமெங்கும்) தவழ்ந்து, உறசீதம் - மிகுதியுந் தண்மையாகிய, ரோதம் - காரையையுடைய, குருதித்திரை - இரத்தக்கடலை, ஒரீஇ - கடந்து நீங்கி, பூதரோதம் - பொன்மலையினது வயிற்றினுள், புக்கென - புகுந்தாற்போல (இலங்கையின் கோபுரவாயிலுள்,) வெங்காலின்-கடுங்காற்றைப்போல, துனைந்துளார் - விரைந்தோடினர்-எ - று

ஓதரோதனம் சீதரோதனமென்பன வடமொழிச்சந்தி. புகுந்தாலென தென்பதனீறுதொகுத்தல். இலங்கையின்கோபுரவாயிலென்பது பூதரோதரம் புக்கென என்பதற்கிசைவத்த இசையெச்சம், புகழ்பொருள் இதுவே யென்

பது "மேருவைகிறத்திவெளிசெய்தது கோல்" என்பதனுற் பெற்றும். உரோதனத்திற்கு ஓதத்லதயுவமித்தமையான் அதுகிகழுமிடத்தினெல்லையை வேலையென்முர். பூதாம் காரணவிடுகுறியாயினும் ஈண்டு இடு குறிமாத்திறை யாய் மேருவுக்காயிற்று. பூதரோதரம் புக்கெனப் போர்த்தென்பதற்கு - பூவா கிய தரையினதுதரத்திலும் புகுந்த தென்னும்படி போர்க்களமுழுமையும் பரவியெனக் குருதித்திரையின் மேலேற்றிக்கூறலுமொன்று, புக்கதென்பத னிறும் உம்மையுக் தொகுத்தல். (க)

அன்றிலக்கரும்பேடைகளாமென
முன்றிலெங்குமரக்கரைமொய்த்தழ
இன்றிலங்கையழிந்ததென்றேங்குவார்
சென்றிலங்கையிற்றுதையைச்சேர்ந்தனார். (உ)

பல்லும்வாயுமனமுந்தம்பாதமும்
நல்லுயிர்ப்பொறையோடிடுங்குவார்
இல்லையாயினனுன்மகனின்றெனச்
சொல்லினர்பயஞ்சுற்றத்தனங்குவார். (௩)

மாடிருந்தவர்மாதவர்வானவர்
ஆடனுண்ணிடையார்மற்றும்யாவரும்
வீடுமின்றிவ்வுலகெனவிம்முவார்
ஓடியெங்கணுஞ்சிந்தியொளித்தனர். (௪)

சுடர்க்கொழும்புகைதீவிழிதுண்டிடத்
தடக்கைவாளுருவித்தருந்துதரை
மிடற்றுஙீசலுருவிழுந்தானரோ
கடற்பெருந்திரைபோற்கரஞ்சோரவே. (௫)

வாய்ப்பிறந்துமுயிர்ப்பின்வளர்ந்தும்வன்
காய்ப்புறுந்தொறுங்கண்ணிடைக்காந்தியும்
போய்ப்பிறந்திவ்வுலகைப்பொதியும்வெந்
தீய்ப்பிறந்தனதின்றெனச்செய்ததால். (௬)

படம்பிறங்கியபார்தனும்பாரும்பேர்த்
திடம்பிறங்கிவலம்பெயர்ந்திடுற
உடம்பிறங்கிக்கிடந்துழைத்தோங்குதீ
விடம்பிறந்தகடலெனவெம்பினன். (௭)

இராவணனது புத்திரசோகம்.

திருகுவெஞ்சினத்திகிகள்சிற்றமும்
பெருகுகாதலுந்துன்பும்பிறழ்ந்திட
இருபதென்னுமெரிபுரைகண்களும்
உருகுசெம்பெனவோடியதுற்றுநீர். (௮)

உ. அன்றில் - கிரவுஞ்சபட்சி.

கடித்தபற்குலங்கற்குலங்கண்ணுற
இடித்தகாலத்துருமெனவெங்கணும்
அடித்தகைத்தலமம்மலையாழிநீர்
பொடித்தவாய்தொறும்பொங்கினமீச்செல. (௯)

மைந்தவோவெனுமாமகனேயெனும்
எந்தையேமெவனொனுன்னுயிரேயெனும்
முந்தினேனுனைநானுனேனேவெனும்
வெந்தபுண்ணிடைவேல்பட்டவெம்மையான். (௧௦)

புரந்தரன்பகைபோயிற்றன்றோவெனும்
அரந்தைவானவரார்த்தனரோவெனும்
கரந்தைசூடியும்பாற்கடற்கள்வனும்
நிரந்தரம்பகைநீங்கினரோவெனும். (௧௧)

நீறுபூசியுநேமியுநீங்கினார்
மாறுகுன்றெறுவேலைமறைந்துளார்
ஊறுநீங்கினராயுவணத்தினோ
டேறுமேறியுலாவுவரென்னுமால். (௧௨)

வானமானமும்வானவரீட்டமும்
போனபோனதிசையிடைப்புக்கனர்
தானமானவைசார்கிலர்சார்குவ
தூனமானுடர்வென்றிகொண்டோவெனும். (௧௩)

கெட்டதுதர்கினத்தினவாறொரு
கட்டமானுடன்கொல்லவென்காதலன்
பட்டொழிந்தனனேயெனும்பன்முறை
விட்டழைக்குமுழைக்கும்வெதும்புமால். (௧௪)

எழுமிருக்குமிரைக்குமிரக்குமுற்
றழுமாற்றுமயர்க்கும்வியர்க்கும்போய்
விழும்விழிக்குமுகிழ்க்குந்தன்மேனியால்
உழுநிலத்தையுருளும்புரளுமால். (௧௫)

இராவணன் தலையலைத்துத் தனித்தனிபுலம்புதல்.

அய்யனேயெனுமோர்சிரம்யானினம்
செய்வெனேயாதென்னுமங்கோர்சிரம்
கய்யனேயுனைக்காட்டிக்கொடுத்தகான்
உய்வெனேயென்றுரைக்குமங்கோர்சிரம். (௧௬)

எழுவிற்கோலமெழுதியதோள்களால்
தழுவிக்கொள்கலையென்னுமங்கோர்தலை

௧௧. புரந்தரன் - இந்திரன்.

உழுவைப்போத்தையுழையுயிருண்பதே
செழுவிற்சேவகனேயெனுமோர்சிரம். (௧௭)

நீலங்காட்டியகண்டனுநேமியும்
மேலுங்காட்டினெதிர்ந்தபடையெலாம்
தோலுங்காட்டித்துரந்தனைமீண்டுநின்
ஓலங்காட்டிலையோவெனுமோர்தலை. (௧௮)

அஞ்சினாய்கொறனைபிரிந்தேனெனும்
வஞ்சமோவெனும்வாரலையோவெனும்
நெஞ்சகோவலொருநீர்தனியேகிடர்
தஞ்சினேனென்றரற்றுமங்கோர்தலை. (௧௯)

காகமாடுகளத்திடைக்காண்பெனோ
பாகசாதன்மௌலியொடும்பொதித்
தோகைமாதவருச்சியின்வைத்தநின்
வாகைநாண்மலரென்னுமற்றோர்தலை. (௨௦)

சேவியற்கணியக்கர்தந்தேவிமார்
மேவினித்தவிர்கிற்பர்சொல்வீரநின்
கோலவிற்குரல்கேட்டுக்குலுங்கித்தந்
தாலியைத்தொடலென்னுமற்றோர்தலை. (௨௧)

கூற்றமுன்னெதிர்வந்துயிர்கொள்வதோர்
ஊற்றந்தானுடைத்தன்றெனையும்மொழித்
தேற்றவெவ்வுலகுற்றனையெல்லையில்
ஆற்றலாயென்றழைக்குமங்கோர்தலை. (௨௨)

இராவணன் மகனைத்தேடிப் போர்க்களமடைதல்.

இன்னவாறழைத்தேங்குகின்றனெழர்
துன்னுமாத்திரத்தோடினனுழிநான்
பொன்னின்வானன்னபோர்க்களம்புக்கனன்
றன்மகன்றனதாக்கையைநாடுவான். (௨௩)

தேவரேமுதலாகியசேவகர்
யாவரும்முடனேதொடர்ந்தேகினர்
மூவகைப்பேருலகுமுறைமையும்
ஏவதாகுமென்றெண்ணியிரங்குவார். (௨௪)

அழுதவாற்சிலவன்பினர்போன்றடி
தொழுதவாற்சிலதுங்கினவாற்சில
உழ்தவானைப்பிணம்புக்கொளித்தவால்
கழுதும்புள்ளுமரக்கனைக்காண்டலும். (௨௫)

௨௫. அரக்கன் - இராவணன்.

கோடிகோடிகுதிரையின்கூட்டமும்
ஆடல்வென்றியரக்கர்தமாக்கையும்
ஓடையானையுந்தேருமுருட்டினான்
நாடினான்றன்மகனுடனெலாம் (உசு)

வெட்டுண்டகரத்தினை இராவணன் காண்டல்.

மெய்கிடந்தவிழிவழிநீர்விழ
நெய்கிடந்தகனல்புரைநெஞ்சினான்
மொய்கிடந்தசிலையொடுமூரிமாக்
கைகிடந்ததுகண்டனன்கண்களால். (உஎ)

இந்திரசித்தின் கரத்தினை இராவணன் தலைமீது
எடுத்துவைத்து வருந்துதல்.

பொங்குதோள்வளையும்பொழிபுட்டிலோ
டங்கதங்களுமம்புமலங்கிட
வெங்கணாகமெனப்பொலிமெய்யதைச்
செங்கையாலெடுத்தான்சிரஞ்சேர்த்தினான். (உஅ)

கற்றின்மார்பிற்றழுவுங்கழுத்தினில்
சுற்றுஞ்சென்னியிற்சூட்டுஞ்சுழல்கணோ
டொற்றுமோர்ந்திட்டுருகுமுளைக்குமால்
முற்றுநாளின்விடுநெடுமூச்சினான். (உகூ)

இந்திரசித்தின் உடன்மீது இராவணன்விழுந்து புலம்புதல்.

கைகண்டான்பின்கருங்கடல்கண்டன
மெய்கண்டானதன்மேல்விழுந்தானரோ
பெய்கண்டாரையருவிப்பெருந்திரை
மொய்கண்டார்திரைவேலையைமூடவே. (௩0)

அப்புமாரியழுந்தியமார்பைத்தன்
அப்புமாரியழுதிழியாக்கையின்
அப்புமாரினணைக்குமரற்றுமால்
அப்புமானுற்றதியாவருற்றாரரோ.

(இ - ள்.) அப்புமாரி - அம்பினது கொலை, அழுந்தியநிலைத்த, மார்பை - இந்திரசித்துவினுடைய மார்பை, அழுது - அழுதலினால், அப்புமாரி - கண்ணீர்மழை, இழி - ஒழுகுகின்ற, தன்யாக்கையின் - தனதுடலில், அப்பும் (சிறிதுபொழுது) ஒற்றுவான், மாரின் - மார்பில், அணைக்கும் - (சிறிதுபொழுது) அணைப்பான், அரற்றும் - ஒழியாது கதறுவான், (அப்போது) அப்புமான் - அந்தவாண்மையிற்சிறந்த இராவணன், உற்றது - உற்றதுன்பத்தை, யாவருற்றார் - யாவரடைந்தனர், ஒருவருமிலர்-எ - று.

அப்பு - வலித்தல். அழுதென்பது செயவெனெச்சத்திரிபு, மாரென்பது கடைக்குறை. யாக்கை. ஆகுபெயர். ஆல்அரோஅசை. அப்பும் அணைக்குமென வினைமுற்றடுக்கி வந்தமையிற் சிறிது பொழுதென்பது ஆங்காங்குத்தந்துரைக் கப்பட்டது. அரற்றல் அவ்விருதொழிலும் நிகழ்வழியும் நிகழ்ந்ததென்பது தோன்ற அரற்றுமென இறுதியிற்கூறினர். (கக)

பறிக்குமார்பிற்பகழியைப்பன்முறை
முறிக்குமூர்ச்சிக்குமோக்குமுயங்குமால்
எறிக்கும்வெங்கதிரோடுலகேழையும்
கறிக்கும்வாயினிட்டின்றெனக்காந்துவான். (கஉ)

தேவரோடுமுனிவருஞ்சிரியோர்
ஏவரோடுமிடமின்றிநின்றவன்
மூவரோடுமுலகொருமூன்றுடன்
போவதேகொன்முனிவெனும்பொம்மலான். (கங)

இந்திரசித்தின் தலைகாணுது இராவணன் வருந்துதல்.

கண்டிலன்றலைகாந்தியமானுடன்
கொண்டிறந்தனனென்பதுங்கொண்டவன்
புண்டிறந்தனநெஞ்சன்பொருமலன்
விண்டிறந்திடவிம்மியரற்றினன். (கச)

வேறு.

நிலையுமாதிரத்துநின்றயானையுநெற்றிக்கண்ணன்
மலையுமேயெளியவென்னுன்மனிசர்க்குமறிந்தமைந்தன்
தலையுமாருயிருங்கொண்டாரவருடலோடுந்தங்கப்
புலையனேனின்னுமாவிசுமக்கின்றேன்போலும்போலும். (கரு)

எரியுணவளைகைமூதரிந்திரனிருக்கையெல்லாம்
பொரியுணவுலகமூன்றும்பொதுவறப்புரந்தேன்போலாம்
அரியுணுமலங்கன்மெனவிழிந்தவெண்மதலையாக்கை
நரியுணக்கண்டேனானினுயுணுமுணவுான்றுல். (கசு)

பூண்டொருபகைமேற்புக்கென்புத்திரனேடும்போனூர்
மீண்டிலர்விளிந்துவீழ்ந்தார்விரதியிருவரோடும்
ஆண்டொருகுரங்குமொன்றுமமர்க்களத்தாருமின்னும்
மாண்டிலரினிமற்றுண்டோவிராவணன்வீரவாழ்க்கை. (கஎ)

கத்தர்ப்பரியக்கர்சித்தராக்கர்தங்கன்னிமார்கள்
சித்தொக்குஞ்சொல்லினுருன்றேவியர்திருவிலல்லார்
வர்துற்றெங்கணவன்றன்னைக்காட்டென்று மருங்குவீழ்ந்தால்
அத்தொக்கவரற்றவோரான்கூற்றையுமாடல்கொண்டேன். (கஅ)

சினத்தொடுங்கொற்றமுற்றியிந்திரன்செல்வமேவி
நினைத்ததுமுடித்துநின்றேனேரிழையொருத்திநீரால்
எனக்குநீசெய்யத்தக்ககடனெலாமேங்கியேங்கி
உனக்குநான்செய்வதானேனென்னின்யாருலகத்துள்ளார். (கக)

இந்திரசித்தின் உடலுடன் இராவணன் இலங்கைக்கேகுதல்.

என்பனபலவும்பன்னியெடுத்தழைத்திரங்கியேங்கி
அன்பினுன்மகனைத்தாங்கியரக்கியராற்றிவீழப்
பொன்புனைநகரம்புக்கான்கண்டவர்புலம்பும்பூசல்
ஒன்பதுதிக்குமற்றையொருதிக்குமுற்றதன்றே. (சo)

அசுரர் புலம்புதல்.

கண்களைச்சூல்கின்றாருங்கழுத்தினைத்தடிகின்றாரும்
புண்கொளத்திறந்துமார்பினீருளைப்போக்குவாரும்
பண்கன்புக்கலம்புராவையுயிரொடுபறிக்கின்றாரும்
எண்களிற்பெரியவாற்றாரிருந்துயர்பொறுக்கலாற்றார். (சக)

மாதிரங்கடந்ததிண்டோண்மைந்தன்றன்மகுடச்சென்னி
போதலைபுரிந்தயாக்கைபொறுத்தனன்புகுதக்கண்டார்
ஓதநீர்வேலையன்னகண்களாலுகுத்தவெள்ளக்
காதனீரோடியாடற்கருங்கடன்மறுத்ததன்றே. (சஉ)

ஆவியினினியகாதலரக்கியர்முதல்வராய
தேவியர்குழாங்கள்சுற்றிச்சிரத்தின்மேற்றளிர்க்கைசேர்த்தி
ஓவியம்வீழ்ந்துவீழ்ந்துபுரள்வனவொப்பவொல்லை
கோவியல்கோயிற்புக்கான்குருதிநீர்க்குமிழிக்கண்ணான். (சங)

மண்டோதரி புலம்புதல்.

கருங்குழற்கற்றைப்பாரங்காறுடக்கமலப்பூவால்
குரும்பையைப்புடைக்கின்றாள்போற்கைகளான்முலைமேற்கொட்டி
அருங்கலச்சும்மைதாங்கவகலல்குலன்றிச்சற்றே
மருங்குலுமுண்டுண்டென்னமயன்மகண்மறுகிவந்தாள். (சச)

தலையின்மேற்சுமந்தகையடழலின்மேன்மிதிக்கின்றாள்போல்
நிலையின்மேன்மிதிக்குந்தானைசேத்தானிறைந்தநெஞ்சன்
கொலையின்மேற்குறித்தவேடன்கூர்ங்கணையுயிரைக்கொள்ள
மலையின்மேன்மயில்வீழ்ந்தென்னமைந்தன்மேன்மறுகிவீழ்ந்தாள். (சரு)

உயிர்த்திலளுணர்வுமில்லளுயிரிலள்கொல்லோவென்னப்
பெயர்த்திலள்யாக்கையொன்றும்பேசலள்விம்மியாதும்
வியர்த்திலளொடிதுபோதுவிம்மலண்மெல்லமெல்ல
அயர்த்திலளரிதிற்றேறிவாய்திறந்தாற்றலுற்றாள். (சசு)

சங. ஆவி - உயிர்.

கலையினாற்றிங்களென்னவளர்கின்றகாலத்தேயுன்
சிலையினாலரியைவெல்லக்காண்பதோர்தவமுஞ்செய்தேன்
தலையிலாவாக்கைகாணவெத்தவஞ்செய்தேனந்தோ
நிலையிலாவாழ்க்கையின்னுநினைவெனோநினைவிலாதேன். (௪௭)

அய்யனேயழகனேயென்னரும்பெறலமிழ்தேயாழிக்
கய்யனேமழுவனேயென்றவர்வலிகடந்தகால
மொய்யனேமுளரியன்னநின்முகங்கண்டிலாதேன்
உய்வனேயுலகமூன்றுக்கொருவனேசெருவலோனே. (௪௮)

தானரிச்சதங்கையார்ப்பத்தவழ்கின்றபருவந்தன்னில்
கோளரியிரண்டுபற்றிக்கொணர்ந்தனைகொணர்ந்துகோபம்
மூளுறப்பொருத்திமாடமுன்றிலின்முறையினோடி
மீளருவினையாட்டின்னுங்காண்பெனோவிதியிலாதேன். (௪௯)

அம்புலியம்மவாவென்றழைத்தலுமவிர்வெண்டிங்கள்
இம்பர்வந்தானையஞ்சவெளவிருகரத்தினேந்தி
வம்புறுமறுவைப்பற்றிமுயலெனவாங்கும்வண்ணம்
எம்பெருங்களிறேகாணவேசற்றேனெழுந்திராயோ. (௫௦)

இயக்கியரரக்கிமார்கள்விஞ்சையரேழைமாதர்
முயற்கறைபயிலாத்திங்கண்முகத்தியர்முருகின்னை
மயக்கியமுயக்கந்தன்னுண்மலரணைமணிமீதே
அயர்த்தனையுறங்குவாயோவமர்பொருதலசினாயோ. (௫௧)

முக்கணான்முதலினோரையுலகொருமூன்றினோடும்
புக்கபோரெல்லாம்வென்றநின்றவெண்புதல்வன்போலாம்
மக்களிலொருவன்கொல்லமாள்பவன்வானமேரு
உக்கிடவணுவொன்றோடியுதைத்ததுபோலுமம்மா. (௫௨)

பஞ்செரியுற்றதென்னவரக்கர்தம்பறவையெல்லாம்
வெஞ்சினமனிசர்கொல்லவிளிந்ததேமீண்டதில்லை
அஞ்சினேனஞ்சினேனச்சீதையென்றமிழ்தாற்செய்த
நஞ்சினாலிலங்கைவேந்தனானையித்தகையனன்றோ (௫௩)

இராவணன் சீதையை வாளாலெறிய ஓடுதல்.

என்றழைத்திரங்கியேங்கவித்துயர்நமர்கட்கெல்லாம்
பொன்றழைத்தனையவல்குற்சீதையாற்புகுந்ததென்ன
வன்றழைக்கல்வினெஞ்சின்வஞ்சகத்தானைவாளால்
கொன்றிழைத்திடுவெனென்றுவோடினனரக்கர்கோமான். (௫௪)

இராவணனை மகோதரன் தடுத்தல்.

ஓடுகின்றானைநோக்கியுயர்பெரும்பழியினுச்சி
சூடுகின்றனையென்றஞ்சிமகோதரன்றணிந்தநெஞ்சன்

- [illegible] - இளமை, இங்கே உபசாரம்.

மாடுசென்றடியின்வீழ்ந்தவணங்கிநின்புகழ்க்குமன்னா
கேடுவந்தடுத்ததென்னாவினையனைவிளைத்தலுற்றான். (௩௫)

நீருளதனையுஞ்சூழ்ந்தநெருப்புளதனையுநீண்ட
பாருளதனையும்வானப்பரப்புளதனையுங்காவின்
பேருளதனையும்போரப்பெரும்பழிபிடித்திபோலாம்
போருளதனையும்வென்றபுகழுளதனையுமுன்னாய். (௩௬)

தென்னருங்காலகேயர்சிரத்தொடுந்திசைக்கையானை
வெள்ளியமருப்புச்சிந்தவீசியவிசயத்தோள்வான்
வள்ளியமருங்குற்செவ்வாய்மாதர்மேல்வைத்தபோது
கொன்னாமேயாவிதானேநாணத்தாற்குறைவதல்லால். (௩௭)

மங்கையர்குலத்துளாளைத்தவத்தியைமுனிந்துவாளால்
சங்கையொன்றின்றிக்கொன்றான்குலத்துக்கேதக்கானென்று
கங்கையஞ்சென்னியானுங்கண்ணனுங்கமலத்தோனும்
செங்கையுங்கொட்டியுன்னைச்சிரிப்பாற்சிறியனென்னா. (௩௮)

நிலத்தியல்பன்றுவானினெறியன்றுநீதியன்று
தலத்தியல்பன்றுமேலோர்தருமமேலதுவுமன்று
புலத்தியன்மரபின்வந்துபுண்ணியமரபுபூண்டாய்
வலத்தியல்பன்றுமாயாப்பழிகொளாமறுகுவாயோ. (௩௯)

இன்றுநீயிவளைவாளாலெறிந்துபோயிராமன்றன்னை
வென்றுமீண்டிலங்கைமூதூரெய்தினைவெதும்புவாயோ
பொன்றினன்சிதையெஃதேபோவர்கள்வர்தாமல்லால்
வென்றிடமுடியாதென்னும்வீரமோவிளம்பவென்றான். (௪0)

இந்திரசித்தின் உடலினை எண்ணெய்த்தோணியி லிடுதல்.

என்னலுமெடுத்தகூர்வாளிருநிலத்திட்டுமீண்டு
மன்னவன்மைந்தன்றன்னைமாற்றலார்வலியார்கொண்ட
சின்னமுமவர்கடங்கள்சிரமுங்கொண்டன்றிச்சேர்கேன்
துன்னருந்தயிலத்தோணிவளர்த்துமினென்னச்சொன்னான். (௪௧)

அத்தொழிலவருஞ்செய்தாராயிடையனைத்துத்திக்கும்
பொத்தியவிருந்தானைகொணரியபோயதூதர்
ஒத்தனராணுமிவந்தவணங்கினரிலங்கையுன்னார்
பத்தியினமைந்தர்தானைக்கிடமிலைபணியிதென்றார். (௪௨)

௨௮ - வது. இராவணன்சோகப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௨0௧.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

இருபத்தொன்பதாவது

## படைக்காட்சிப்படலம்.

எம்பலுற்றெழுந்தமன்னனெவ்வழியெய்திற்றென்றான்
கூம்பலுற்றுயர்ந்தகையரொருவழிகூறலாமோ
வாம்புனற்பரவையேழுமிறுதியின்வளர்ந்ததென்னத்
தாம்பொடித்தெழுந்ததானைக்குலகிடந்தானில்லென்றார். (௧)

மண்ணுறநடந்ததானைவளர்ந்தமாத்துளிமண்ட
விண்ணுறநடக்கின்றாருமிறைத்தனரேகமேன்மேல்
கண்ணுறவருமைகாணுக்கற்பத்தின்முடிவிற்கார்போல்
எண்ணுறவரியசேனையெய்தியதிலங்கைநோக்கி. (௨)

வாட்டனின்வயக்கமின்னுமழையதினிருளமாட்டா
வீட்டியமுரசினார்ப்பையிடிப்பொடுமுழக்கமாட்டா
மீட்டினியுவமையில்லைவேலைமீச்சென்றவென்னின்
நீட்டியபடையுமாவும்யானையுந்தேருஞ்செல்லா. (௩)

உலகினுக்குலகுபோய்ப்போயொன்றினொன்றுதங்கலுற்ற
தொலைவருந்தானைமேன்மேலெழுந்ததுதொடர்ந்துசுற்ற
நிலவினுக்கிறையுமீனுநீங்கினநிமிரநின்றான்
அலரியுமுந்துசெல்லுமாறுநீத்தஞ்சியப்பால். (௪)

மேற்படவிசும்பைமுட்டிமேருவின்விலங்கிவிண்ட
காற்பெருவாயினூடுமிலங்கையூர்நடக்குந்தானை
கார்க்கருங்கடலைமற்றோரிடைக்கிடைகாலன்றானே
சேர்ப்பதுபோன்றதியாண்டுஞ்சமைபொருதுலகமென்ன. (௫)

நெருக்குடைவாயினூடுபுகுமெனினெடிதுகாலம்
இருக்குமித்தன்மையென்னுமதிவினுக்கும்பரெய்தி
அரக்கனதிலங்கையுற்றவண்டங்களனைத்தினுள்ள
கருக்குலமேகமெல்லாமொருங்குடன்கலந்ததென்ன. (௬)

அதுபொழுதரக்கர்கோனுமணிகொள்கோபுரத்தினெய்திப்
பொதுவுறநோக்கலுற்றானொருநெறிபோகப்போக
விதிமுறைகாண்பனென்னும்வேட்கையான்வேலையேழும்
கதுமெனவொருங்குநோக்கும்பேதையிற்காதல்கொண்டான். (௭)

மாதிரமொன்றினின்றுமாறொருதிசைமேன்மண்டி
ஓதநீர்செல்வதென்னதானையையுணர்வுகூட்டி

௩. வாட்டனின்வயக்கமின்னுமழை - வாளாயுதங்களையொப்ப விளக்கமா

வேதவேதாந்தங்கூறும்பொருளினைவிரிக்கின்றார்போல்
நாதவாணிகடோறும்வான்முறைகாட்டிச்சொன்னார். (அ)

வேறு.

சாகத்தீவினிலுறைபவர்தானவர்சமைத்த
யாகத்திற்பிறந்தியைந்தவர்தேவரையெல்லாம்
மோகத்திற்படமுடித்தவர்மாயையின்முதல்வர்
மேகத்தைத்தொடுமெய்யினரிவரெனவிரித்தார். (கூ)

குசையின்றீவினிலுறைபவர்கூற்றுக்கும்விதிக்கும்
வசையும்வன்மையும்வளர்த்தவர்வானநாட்டுறைவார்
இசையுஞ்செல்வமுமிருக்கையுமிழந்திங்கிவரால்
விசையந்தோனெனநிற்பவரிவர்நெடுவிறலோய். (க0)

இலவத்தீவினிலுறைபவரிவர்கள்பண்டிமையாப்
புலவர்க்கிந்திரன்பொன்னகரழிதரப்பொருதார்
நிலவைச்செஞ்சடைவைத்தவன்வரந்தாங்கிமிர்ந்தார்
உலவைக்காட்டுறுதீயெனவெகுளிபெற்றுடையார். (கக

அன்றிற்றீவினிலுறைபவரிவர்பண்டையமரர்க்
கென்றைக்குமிருந்துறைவிடமென்றிடமேருக்
குன்றைக்கொண்டுபோய்க்குரைகடலிடவறக்குலைந்தோர்
சென்றித்தன்மையைத்தவிருமென்றிரந்திடத்தீர்ந்தோர். (கஉ)

பவளத்தீவினிலுறைபவர்வெள்ளிபண்பழிந்தோர்
குவளைக்கண்ணியங்கிராக்கதக்கன்னியைக்கூட
அவளிற்றோன்றினரையிருகோடியர்நொய்தின்
திவளப்பாற்கடல்வறள்படத்தேக்கினர்சிலநாள். (கங)

கந்தமாதனமென்பதிக்கருங்கடற்கப்பால்
மந்தமாருதமூர்வதோர்கிரியினில்வாழ்வோர்
அந்தக்காலத்தவ்வாலகாலத்துடன்பிறந்தோர்
இந்தவாளெயிற்றரக்கரெண்ணிறந்தவரிறைவ. (கச)

மலையமென்பதுபொதியமாமலையதின்மறவோர்
நிலையமன்னதுசாகரத்தீவிடைநிற்கும்
குலையுமெவ்வுலகெனக்கொண்டுநான்முகன்கூறி
உலைவிலீரிதிலுறையுமென்றிரந்திடவுறைந்தார். (கரு)

முக்கரக்கையர்மூவிலைவேலினர்முசண்டி
சக்கரத்தினர்சாபத்தரிந்திரன்றலைவர்
நக்கரக்கடலுளொருமூன்றுக்குநாதர்
புக்கரப்பெருந்தீவிடையுறைபவர்ப்புகழோய். (கசு)

---

கரு. மறவோர் - மறவர்.

முறவியைப்பண்டுதம்பெருந்தாய்சொலவலியால்
புறவிலைப்பெருஞ்சக்கரமால்வரைப்பொருப்பின்
விறல்கெடச்சிறையிட்டயனிரந்திடவிட்டோர்
இறவியப்பெருந்தீவிடையுறைபவரிவர்கள். (௧௭)

வேதாளக்காத்திவர்பண்டுபுவியிடம்விரிவு
போதாதுந்தமக்கெழுவகையாய்நின்றபுவன
பாதாளத்துறைவீரெனநான்முகன்பணிப்ப
நாதாபுக்கிருந்தனக்கன்பிலுவிவணடைந்தார். (௧௮)

திருதிதன்குலப்புதல்வர்நின்குலத்துக்குநேரே
பருதிதேவர்களெனத்தக்கபண்பினர்பானக்
குருதிபெற்றிலரேற்கடலேழையுங்குடிப்பார்
இருணிறத்தவரொருத்தரேழ்மலையையுமெடுப்பார். (௧௯)

பாரனைத்தவெம்பன்றியையன்பினுற்பார்த்த
காரணத்தினனுதியிற்பயந்தபைங்கழலோர்
பூரணத்தடர்திசைதொறுமிந்திரன்புலரா
வாரணத்தினையிறுத்தியேசூடினர்வாகை. (௨௦)

மறக்கண்வெஞ்சினமலையெனநிற்கின்றவைபவர்
இறக்கங்கீழிலாப்பாதலத்துறைகின்றவிகலோர்
அரக்கண்டுஞ்சிலனுயிரம்பணத்தலையநந்தன்
உறக்கந்தீர்த்தனனுறைகின்றதிவர்தொடர்தொழுக்க. (௨௧)

காளியைப்பண்டுகண்ணுதல்காட்டியகாலை
மூளமுற்றியசினக்கடுந்தீயிடைமுளைத்தோர்
கூளிகட்குநல்லுடன்பிறந்தார்பெருங்குழுவாய்
வாளிமைக்கவும்வானெயிறிமைக்கவும்வருவார். (௨௨)

பாவந்தோன்றியகாலமேதோன்றியபழையோர்
தீவந்தோன்றியமுழைத்துணையெனத்தறுகண்ணர்
கோவந்தோன்றிடிற்றலையுமுயிருணுங்கொடியோர்
சாவந்தோன்றிடவடதிசைமேல்வந்துசார்வார். (௨௩)

சீற்றமாகியவைம்முகனுலகெலாந்தீப்பான்
ஊற்றமாநுதல்விழியிடைத்தோன்றினரிவரால்
கூற்றமாகியகொம்பினையம்பாலுடைக்கொடுமை
ஊற்றமாகிப்பண்டுதித்தனரென்பவருவரால் (௨௪)

காலன்மார்புழைச்சிவன்கழல்படவன்றுகான்ற
வேலையேழன்னகுருதியிற்றோன்றியவீரர்
சூலமேந்திமுன்னின்றவரிந்நின்றதொகையார்
ஆலகாலத்தினையிழ்ந்தின்முன்பிறந்தபோலரக்கர் (௨௫)

---

௨௩ தீயம் - விளக்கு.

வடவைத்தீயினைவாசுகிகான்றமாகடுவை
இடவத்தீயிடையெழுந்தவரிவரினமழையைத்
தடவத்தீமிர்குஞ்சியரிவருவர்தனித்தோர்
கடவத்தீர்தவெம்புரத்திடைத்தோன்றியகழலோர். (உக)

எனையரின்னவரென்பதோரளவிலரைய
னினையவுங்குறித்துரைக்கவுமரிதிவர்கினைர்த
வினையமும்பெருவரங்களுந்தவங்களும்விளம்பின்
அனையபேருகமாயிரத்தளவினுமடங்கா. (உஎ)

ஒருவரோசென்றவ்வுறுதிறந்துரங்கையுமுரவோர்
இருவரென்றவர்தம்மையுமொருகைகொண்டெற்றி
வருவர்மாறினிப்பகர்வதென்வானவர்க்கரிய
திருவவென்றனர்தூதுவரிராவணன்செப்பும். (உஅ)

இராவணன் தன்சேனையை ஆயிரவெள்ளமென்றுர்பித்த ரெனல்.

எத்திறத்திதற்கெண்ணெனத்தொகைவகுத்தியன்ற
அத்திறத்தினையறைதிரென்றுரைசெயவவர்கள்
ஒத்தவெள்ளமோராயிரமுளவெதனவுரைத்தா
பித்தரிப்படைக்கெண்சிறிதென்றனர்பெயர்ந்தார். (உகூ)

இராவணன் சேனுபதிகளை அழைப்பித்தல்.

படைப்பெருங்குலத்தலைவரைக்கொணருதிரென்பால்
கிடைத்துளானவர்க்குற்றனபொருளெலாங்கினத்தி
அடைத்தகல்லுரைவிளம்பினனளவளாயமைவுற்
றுடைத்தபூசனைவரன்முறையியற்றவென்றுரைத்தான். (௩0)

இராவணன் கால்களில் சேனுபதிகள் விழுந்து வணங்குதல்.

தூதர்கூறிடத்திசைதொறுந்திசைதொறுந்தொடர்ந்த
ஓதவேலையினுயகரெவரும்வந்துற்றூர்
போதுதுவினர்வணங்கினரிராவணன்பொலன்றாள்
மோதுமோலியின்பேரொளிவானினைமுட்ட. (௩க)

இராவணன்சேனுபதிகளைச் சேமம்விசாரித்தல்.

அனையர்யாவருமருகுசென்றடிமுறைவணங்கி
வினையமேவினரினிதினங்கிருந்தபோர்வேலை
நினையுகல்வாவாகதும்வரவெனகிரம்பி
மனையுமக்களும்வலியரோயென்றனன்மறவோன். (௩உ)

சேனுபதிகள் பதிலுரைத்தல்.

பெரியதிண்புயனியனைதவவரம்பெரிதால்
உரியவேண்டியபொருளெலாமுடிப்பதற்கொன்றோ

---

௩0. அளவளாய் - கலந்து சந்தோஷித்தல்.

இரியதேவரைக்கண்டனம்பகைபிறிதில்லை
அரியதென்னெமக்கென்றனாவன்கருத்தறிவார். (௧௩)

இராவணன் நடந்தவைகளை யுரைத்தல்.

மாதரார்களுமைந்தருமின்மருங்கிருந்தார்
பேதுறுதவரில்லைநீவருந்தினைபெரிதும்
யாதுகாரணமருளெனவனையவரிசைத்தார்
சீதைகாதலிற்பிறந்துளபரிசெலாந்தெரித்தான். (௧௪)

சேனபதிகள் நகுதல்.

கும்பகன்னனோடிந்திரசித்தையுங்குலத்தின்
வெம்புவெஞ்சினத்தரக்கர்தங்குழுவையும்வென்றோர்
அம்பினாற்சிறுமனிசரோாகன்றாகம்மாற்றல்
நம்பசேனையும்வானரமேயெனாநக்கார். (௧௫)

உலகைச்சேடன்றனுச்சிநின்றெடுக்கவன்றோரேழ்
மலையைவேரொடும்வாங்கவன்றங்கையால்வாங்கி
அலைகொள்வேலையைக்குடிக்கவன்றழைத்ததுமலரோ
டிலைகள்கோதுமக்குரங்கின்மேலேவக்கொலெம்மை. (௧௬)

சேனபதிகட்கு மாலியவான் இராமாதியர் திறமுரைத்தல்.

என்னக்கையெதிர்த்திடியுருமேறெனாநக்க
மின்னும்வெள்ளெயிற்றரக்கரையங்கையால்விலக்கி
வன்னியென்பவன்புட்காத்தீவுக்குமன்னன
அன்னமானுடரார்வலியாவதென்றறைந்தான். (௧௭)

மற்றவாசகங்கேட்டலுமாலியவான்வர்
துற்றதன்மையுமனிசாதுற்றமுமுடனும்
கொற்றவானரத்தலைவர்தந்தகைமையுங்கூறிக்
கிற்றுங்கேட்டிராலென்றவன்கிளத்துவான்கிளர்ந்தான். (௧௮)

ஆழியன்னகீரறிதிரன்றேகடலனைத்தும்
ஊழிக்காலெனக்கடப்பவன்வாலியென்போனை
எழுகுன்றமுமெடுக்குறுமிடுக்கனையிந்நாள்
பாழிமார்பகம்பிளந்துயிர்குடித்ததோர்பகழி. (௧௯)

பரியதோளுடைவிராதன்மாரீசனும்பட்டார்
கரியமால்வரைநிகர்கரதூடணர்கதிர்வேல்
திரிசிராவவர்திரைக்கடலனபெருஞ்சேனை
ஒருவிலாலொருநாழிகைப்பொழுதினிலுலந்தார். (௨௦)

இங்குவந்துநீர்விளையதென்னெறிநிரைப்பாவை
அங்குவெந்நிலதோசிறிதறிந்ததுமிலிரோ

௧௯. ஊழிக்கால் - பிரளயகாற்று.

கன்கைசூடினன் கடுஞ்சிலையொடித்தவக்காலம்
உங்கள்வான்செவிபுகுந்திலதோமுழங்கோதை. (௪௧)

ஆயிரம்பெருவெள்ளமுண்டிலங்கையினளவில்
நீயின்வெய்யபோராக்கர்தஞ்சேனையச்சேனை
போயதந்தகன்புரம்புகநிறைந்ததுபோலாம்
ஏயுமும்மைநூன்மார்பினரெய்தவிவிரண்டால். (௪௨)

குற்றவெஞ்சிலைக்கும்பகன்னனுநுங்கள்கோமான்
பெற்றமக்களும்பிரகத்தன்முதலியபிறரும்
மற்றைவீரருயிர்திரசித்தொடுமடிந்தார்
இற்றைநாள்வரையானுமற்றிவனுமேயிருந்தேம். (௪௩)

மூலத்தானையென்றுண்டதுமும்மைநூறமைந்த
கூலச்சேனையிவ்வெள்ளமற்றதற்கின்றுகுறித்த
காலச்செய்கையானீர்வந்திராயினக்கழலோர்
சீலச்செய்கையுங்கவிப்பெருசேனையுந்தெரிக்கின். (௪௪)

ஒருகுரங்குவந்திலங்கையைமலங்கெரியூட்டித்
திருகுவெஞ்சினத்தக்கனைநிலத்தொடுத்தேய்த்துப்
பொருதுதுதுரைத்தேகியதரக்கியர்புலம்பக்
கருதுசேனையாங்கடலையுங்கடலையுங்கடந்து. (௪௫)

கண்டிலீர்கொலாங்கடலினைமலைகொண்டுகட்டி
மண்டுபோர்செயவானரரியற்றியமார்க்கம்
உண்டுவெள்ளமோரொருபதுமருந்தொருகொடியின்
கொண்டுவந்ததுமேருவிற்கப்புறங்குதித்து. (௪௬)

இதுவியற்கையோர்சீதையென்றிருந்தவத்தியைத்தான்
பொதுவியற்கைதீர்கற்புடைப்பத்தினிபொருட்டால்
விதிவிளைத்தவாவில்லியர்வெல்கநீர்வெல்க
முதுமொழிப்பதஞ்சொல்லினனென்றுரைமுடித்தான். (௪௭)

வன்னிமன்னனைநோக்கிநீயிவரெல்லாமடிய
என்னகாரணமிகல்செயாதிருந்ததென்றிசைத்தான்
புன்மைநோக்கினுணிறுற்பொருந்திலேனென்றான்
அன்னதேவினியமையுமெங்கடனஃதென்றான். (௪௮)

முதுணர்ந்தயிம்முதுமகன்கூறியமுயற்சி
சீதையென்பவடனைவிட்டம்மனிசரைத்திருத்தல்
ஆதியின்றலைசெயத்தக்கதினிச்செயலழிவால்
காதலிந்திரசித்தையாம்யாண்டினிக்காண்டும். (௪௯)

௪௭. முதுமொழி - பழமொழி, முடிந்தசொல்.

விட்டமாயினுமாதினைவெஞ்சமம்விரும்பிப்
பட்டவீரரைப்பெறுகிலம்பெறுவதுபழிப்பால்
முட்டிமற்றவர்குலத்தொடுமுடிக்குவதல்லால்
கட்டமத்தொழிற்செருத்தொழிலினிச்செயுங்கடமை. (ங0)

என்றெழுந்தனனிராக்கதரிருத்தியாமே
சென்றுமற்றவர்சில்லுடற்குருதிநீர்தேக்கி
வென்றுமீளுதும்வென்குறுமேன்மிடலில்லாப்
புன்றொழிற்குலமாதுமென்றுரைத்தனர்போனார். (ஙக)

உகூ-வது படைக்காட்சிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஉருஎ.
கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

முப்பதாவது

## மூலபலவதைப்படலம்.



இராவணன் மூலபலத்தை இராமர்மீதேவுதல்.

வானரப்பெருஞ்சேனையையாணொருவழிசென்
றூனறக்குறைத்துயிருண்பனியிர்போயொருங்கே
ஆனமற்றவரிருவரைக்கோறிரென்றமைந்தான்
தானவப்பெருங்கிரிகளைவான்கொண்டுதடித்தான். (க)

எனவுரைத்தலுமெழுந்துதம்மூர்திமேலேறிக்
கனைகடற்பெருஞ்சேனையைக்கலந்ததுகாணு
வினையமற்றிலைமூலமாத்தானையைவிரவோ
டினையமுற்செலவேவுகென்றிராவணனிசைத்தான். (உ)

ஏவியப்பெருந்தானையைத்தானும்விட்டெழுந்தான்
தேவர்மெய்ப்புகழ்தேய்த்தவன்சில்லியர்தேர்மேல்
காவன்மூவகையுலகமுமுனிவருங்கலங்கப்
பூவைவண்ணத்தன்சேனைமேலொருபுறம்போனான். (ங)

மூலபலத்தன்மை.*

எழுகசேனையென்றியானைமேலணிமுரசெற்றி
வழுவில்வள்ளுவர்துறைதொறும்விளித்தலும்வல்லைக்
குழுவிமீண்டியதென்பாற்குவலயமுழுதும்
தழுவின்னையுந்திசையையுந்தடவுமாத்தானை. (ச)

* பி - வகுத்து.

அடங்கும்வேலைகளண்டத்தினகத்தகன்மலையும்
அடங்குமன்னுயிரனைத்துமவ்வரைப்பிடையவைபோல்
அடங்குமேமற்றப்பெருபடையிரும்படையாக்கை
அடங்குமாயவன்குறளுருத்தன்மையினவரால். (௫)

அறத்தைத்தின்றருங்கருணையைப்பருகிவேறமைத்த
மறத்தைப்பூண்டுவெம்பாவத்தைமணம்புணர்மணாளர்
திறத்துக்காரன்னநெஞ்சினர்நெருப்புக்குநெருப்பாப்
புறத்துப்பொங்கியபங்கியர்காலனும்புகழ்வார். (௬)

நீண்டதோள்களால்வேலையைப்புறஞ்செலநீக்கி
வேண்டுமீனெடுமகரங்கள்வாயிட்டுவிழுங்கித்
தீண்டுவானுருமேற்றினைச்செவிதொறுந்தூக்கி
மூண்டவான்மழையுரித்துடுத்துலாவருமூர்க்கர். (௭)

மால்வரைக்குலம்பரலெனமழைக்குலஞ்சிலம்பக்
கால்வரைக்குலஞ்சிலம்புகொண்டசைத்தபைங்கழலார்
மேல்வரைப்படர்களுழன்வன்காற்றெனும்விசையோர்
நால்வரைக்கொணர்ந்துடன்பிணித்தாலன்னநடையார். (௮)

உண்ணுந்தன்மையினூண்முறைதப்பினவ்வுடனே
பண்ணினின்றமால்யானையைவாயிடும்பசியார்
தண்ணினீர்முறைதப்பிடிற்றடங்கையாற்றடவி
விண்ணின்மேகத்தைவாரிவாய்ப்பிழிந்திடும்விடாயார். (௯)

உறைந்தமந்தரமுதலியகிரிகளையுருவ
வெறிந்துவேணிலைகாண்பவரிந்துவால்யாக்கை
சொறிந்துதீர்வுறுதினவினர்மலைகளைச்சுற்றி
அறைந்துகற்றமாத்தண்டினாசனியினர்ப்பார். (௧௦)

சூலம்வாங்கிடிற்சுடர்மழுவெறிந்திடிற்சுடர்வாள்
கோலவெஞ்சிலைபிடித்தலிற்கொற்றவேல்கொள்ளின்
சாலவன்றண்டுதரித்திடிற்சக்கரந்தாங்கின்
காலன்மால்சிவன்குமரனென்றிவரையுங்கடப்பார். (௧௧)

ஒருவரோவல்லரோருலகத்தினைவெல்ல
இருவர்வேண்டுவரோழுலகத்தையுமிறுக்கத்
திரிவரோடுடற்றிருநெடுநிலஞ்செவ்வே
வருவரோடன்கடல்களுந்தொடர்ந்துபின்வருமால். (௧௨)

மேகமெத்தனையத்தனைமால்கரிவிரித்த
நாகமெத்தனையத்தனைதேர்கனிகானாப்

௧௧. பிரமன் என்றும்பாடம்.

போகமுற்றினவெத்தனையத்தனைபுரவி
ஆகமேலெனவெத்தனையத்தனையனிகம். (௧௩)

இன்னதன்மையயானைதேரிவுளியென்றிவற்றின்
பன்னுபல்லணமருமமற்றுப்பொடுபலவும்
பொன்னுநன்னெடுமணியுங்கொண்டல்லதுபுனைந்த
சின்னமுள்ளனவில்லனமெய்ம்முற்றுந்தெரிந்தால். (௧௪)

இப்பெரும்படையெழுந்திரைத்தேகமேலெழுந்த
துப்புதிர்ந்தனதுளியின்படலமீத்தூர்ப்பத்
தப்பில்சார்சிறந்தவிர்ந்ததுகரிமதந்தழுவ
உப்புநீங்கியதோங்குநீர்வீங்கலையுவரி. (௧௫)

மலையும்வேலையுமற்றுளபொருள்களும்வானோர்
நிலையுமப்புறத்துலகங்கள்யாவையுநிரம்ப
உலைவுறுவகைபுண்டுபண்டுமிழ்ந்தபேரொருமைத்
தலைவன்வாயொத்ததிலங்கையின்வாயில்கடருவ. (௧௬)

கடம்பொருமதக்களிறுதேர்பரியிடைகடல்கள்
படம்பொருமையினனந்தலையனந்தனும்பதைத்தான்
விடம்பொருதிரியமரர்போற்றுரக்கினமிதிக்கும்
இடம்பொருமையினிரிந்துபோய்வடதிசையிறந்த. (௧௭)

ஆழிமால்வரைவேலிசுற்றிடைவகுத்தமைத்த
ஏழுவேலையுமிடுவலையரக்கரேயினமா
வாழிகாலனும்விதியும்வெவ்வினையுமேமன்னர்
தோழமாமதிலிலங்கைமால்வேட்டமேற்றொடர்ந்தான். (௧௮)

ஆர்த்தவோசையோவலங்குதோராழியினதிர்ப்போ
கார்த்திண்மால்கரிமுழக்கமோவாசியின்கலிப்போ
போர்த்தபல்லியத்தரவமோநெருக்கினுற்புழுங்கு
வேர்த்தவண்டத்தைவெடித்திடப்பொடித்ததுமென்மேல். (௧௯)

வழங்குபல்படைமீனதுமதகரிமகரம்
முழங்குகின்றதுமுரிதிரைப்பரியதுமுரசம்
தழங்குபோரொலிகளிப்புறுந்தறுகண்மாக்கிருதப்
புழுங்குவெஞ்சினச்சுறவதுநிறைபடைப்புணரி. (௨௦)

தசம்பிற்பொங்கியதிரள்புயத்தரக்கர்தந்தானை
பசும்பொற்றிண்டலமிதித்தலிற்கரிபடுமதத்தின்
அசம்பிற்சேறுபட்டனதுபட்டமிழுமாலடங்க
விசம்பிற்சேறலிற்கெடுத்தவ்விலங்கன்மேலிலங்கை. (௨௧)

படியைப்பார்த்தனர்பரவையைப்பார்த்தனர்படர்வான்
முடியைப்பார்த்தனர்பார்த்தனர்நெடுந்திசைமுழுதும்
விடியப்பார்ப்பதோர்வெள்ளிடைகண்டிலர்மிடைந்த
கொடியைப்பார்த்தனர்வேர்த்தனர்வானவர்குலந்தார். (உஉ)

உலகினுமலாவுருவெலாமிராக்கதவுருவா
அலகில்பல்படைபிடித்தமர்க்கெழுந்தவோவன்றேல்
விலகினீர்த்திரைவேலையோரேழும்போய்விதியால்
புலைகள்வல்லுருப்பொடித்தனவோவென்றுபுகன்றார். (உ௩)

தேவர் சிவனை அசுரசேனையின் வரலாறு வினவுதல்.

நடுங்கிநெஞ்சடைகண்டனை வானவர்நம்ப
ஒடுங்கியாங்காந்துறைவிடமறிகிலமுயிரைப்
பிடுங்கியுண்குவர்யாரிவர்பெருமைபண்டறிவார்
முடிந்ததெம்வலியென்றவரோடுவான்முயன்றார். (உ௪)

ஒருவரைக்கொல்லவாயிரமிராமர்வந்தொருங்கே
இருபதிற்றிரண்டாண்டுநின்றமர்செய்தாலென்னும்
நிருதரைக்கொல்வதிடம்பெற்றாரிடையினின்றன்றோ
பொருவதிப்படைகண்டுதன்னுயிர்பொருத்தன்றோ. (உ௫)

சிவன்தேவர்க்கு இம்மூலபலத்தை இராமன் கொல்வானெனல்.

என்றிறைஞ்சலுமிருண்மிடற்றிறைவனுமினிநீர்
ஒன்றுமஞ்சலீர்வஞ்சனையரக்கரையொருங்கே
கொன்றுநீக்குமக்கொற்றவனிக்குலமெல்லாம்
பொன்றுவிப்பதோர்விதிதந்ததாமெனப்புகன்றான். (உ௬)

வானரங்கள் அஞ்சியோடுதல்.

புற்றினின்றுவல்லரவினம்புறப்படப்பொருமி
இற்றதெம்வலியெனவிரைந்திரிதருமெலிபோல்
மற்றவானரப்பெருங்கடல்பயங்கொண்டுமறுகிக்
கொற்றவீரரைப்பார்த்திலதிரிந்ததுகுலைவால். (உ௭)

அணையின்மேற்சென்றசிலசிலவாழியைநீந்தப்
புணைகடேடினசிலசிலநீந்தினபோன
துணைகளோடும்புக்கழுந்தினசிலசிலதோன்றாப்
பணைகளேறினமலைமுழைபுக்கனபலவால். (உ௮)

அடைத்தபோரணையளித்ததாமக்குயிரழிவான்
உடைத்துபோதுமாலவர்தொடராமலென்றுரைத்த
படைத்துச்செல்குவர்விசும்பினுமென்றனபோதோன்
படைத்ததிக்கெலாம்பாய்ந்தனரொன்றனபயத்தால். (உ௯)

---

உ௯. அடைத்த - கட்டிய.

அரியின்வேந்தனுமநுமனுமங்கதனவனும்
பிரியகிற்றிலரிறைவரைநின்றனர்பின்றூர்
இரியலுற்றனர்மற்றையோர்யாவருமெறிநீர்
விரியும்வேலையைக்கடந்தனர்நோக்கினன்வீரன். (க0)

விபீடணன் மூலபலத்தின் வரலாறுகூறுதல்.

இக்கொடும்படையெங்குளதியம்புதியென்றான்
மெய்க்கடுந்திறல்வீடணன்விளம்புவான்வீர
திக்கனைத்தினுமேழுமாத்தீவினுந்தீயோர்
புக்கழைத்திடப்புகுந்துளதிராக்கதப்புணரி. (கக)

ஏழெனப்படுங்கீழுளதலத்தினின்றேறி
ஊழிமுற்றியகடலெனப்புகுந்ததுமுளதால்
வாழிமற்றிவண்மூலமாந்தானைமுன்வருஞ்
ஆழிவேறினியப்புறத்தில்லைவாளரக்கர். (கஉ)

ஈண்டிவ்வண்டத்துளிராக்கதரெனும்பெயரெல்லாம்
மூண்டுவந்ததுதீவினைமுன்னின்றுமுடுக
மாண்டுவீழுமின்றென்கின்றதென்மதிவலியூழ்
தூண்டுகின்றதென்றடிமலர்தொழுதவன்சொன்னான். (கங)

வானரசேனையை அறிந்துவர இராமன் கட்டளையிடுதல்.

கேட்டவண்ணலுமுறுவலுஞ்சீற்றமுங்கிளரக்
காட்டுகின்றமெனன்காணுதியொருகணத்தென்று
ஓட்டின்மேற்கொண்டதானையைப்பயந்துடைத்தூரவோய்
மீட்டிகொல்லெனவங்கதனோடினன்விரைந்தான். (கச)

வானரசேனாபதிகள் திரும்பி வருதல்.

சென்றுதானையையுற்றனன்சிறிதிறைகெடுவீர்
நின்றுகேட்டபினேகுமினெனச்சொல்லினோர்வான்
ஒன்றுங்கேட்கிலமென்றனர்நாக்கினமுறையால்
வென்றிவெந்திறற்படைப்பெருந்தலைவர்கண்மீண்டார். (கரு)

சேநாபதியர் ஓடிய காரணமுரைத்தல்.

மீண்டுவேலையின்வடகரையாண்டொருவெற்பின்
ஈண்டினார்களையெங்குறித்திரிவுற்றதென்றான்
ஆண்டநாயககண்டிலைபோலுநீயவரை
மாண்டுசெய்வதெனென்றுரைகூறினர்மறுப்பார். (கசு)

ஒருவனிந்திரசித்தெனவுள்ளவனுளனாம்
செருவினுற்றனைகொற்றவமறந்திலோதெரியின்
பொருவின்மற்றவரிற்றிலர்யாரொடும்பொருவார்
இருவர்விற்பிடித்தியாவரைத்தடுத்துநின்றெய்வார். (கஎ)

புரங்கடந்தவப்புனிதனேமுதலியபுலவோர்
வரங்கடந்துலகளிப்பவர்யாவருமாட்டார்
கரந்தடங்கினரினிமற்றவ்வரக்கரைக்கடப்பார்
குரங்குகொண்டுவெந்தமர்செயுமானுடர்கொல்லாம். (௩௮)

ஊழியாயிரகோடிநின்றுருத்திரனோடும்
ஆழியானுமற்றயனொடுபுரந்தரனவனும்
சூழுமோடினரொருவரைக்கொன்றுதந்தோளால்
வீழுமாசெய்யவல்லரேல்வென்றியினன்றே. (௩௯)

என்னப்பாமற்றிவ்வெழுபதுவெள்ளமுமொருவன்
தின்னப்போதுமோதேவரின்வலியமோசிறியேம்
முன்னிப்பாரெலாம்படைத்தவனனெலாமுறைநின்
றுன்னிப்பார்த்துநின்றுரையிடக்குறையுமிவ்வூகம். (௪௦)

நாயகன்றலைபத்துளதையுநாலைந்தென்
றேயுமுன்னதேயொருவன்மற்றவன்வந்திங்குற்றூர்
ஆயிரந்தலையதற்கிரட்டிக்கையரையா
பாயும்வேலையிற்கூலத்துமணலினும்பலரால். (௪௧)

கும்பகன்னனென்றுளன்மற்றிங்கொருவனைக்கொண்ட
அம்புதாங்கவுமிடுக்கிலனவன்செய்ததறிதி
உம்பரன்றியேயுணர்வுடையார்பிறருளரோ
நம்பிநீயுமுன்றனிமையையறிந்திலைநடந்தாய். (௪௨)

அனுமனாற்றலுமரசனதாற்றலுமிருவர்
தனுவினாற்றலுந்தம்முயிர்தாங்கவுஞ்சாலா
கனியுங்காய்களுமுணவுளமுழைபுனகரக்க
மனிசராளினெனினிராக்கதராளினெனவையும். (௪௩)

தாமுளாரன்றேபுகழினைத்திருவொடுந்தரிப்பார்
யாமுளேமெனினெங்கிளையுள்ளதெம்பெரும
போமினீரென்றுவிடைதரத்தக்கனைபுரம்போய்ச்
சாமினீரென்றறருமமன்றென்றனர்தளர்ந்தார். (௪௪)

வேறு

அங்கதன் சாம்பனுக்குச் சமாதானம் உரைத்தல்.

சாம்பனைவதனநோக்கிவாலிசேயறிவுசான்றோய்
பாம்பணையமலன்மற்றிவ்விராமனென்றெமக்குப்பண்டே
ஏம்பல்வந்தாற்றகாலத்தியம்பினையல்லையோநீ
ஆம்பலம்பகைஞன்றன்னோடயிந்திரமமைத்தோனன்னாய். (௪௫)

௩௮. புரம் - திரிபுரம்

தேற்றுவாய்தெரிந்தசொல்லாற்றெருட்டுவாய்தெளிவிலோரை
ஆற்றுவாயல்லைநீயுமஞ்சினைபோலுமாலி
போற்றுவாயென்றபோதுபுகழென்னும்புலமையென்னும்
கூற்றின்வாயுற்றால்வீரங்குறைவரேயிறைமைகொண்டார். (௪௬)

அஞ்சினும்பழியும்பூண்டாகம்புவியாண்டுமாலி
துஞ்சுமாறன்றிவாழவொண்ணுமோகாண்மேற்றென்றின்
நஞ்சினையிட்டாலன்னவமிழ்தின்றோகம்மையம்மா
தஞ்சமென்றுணர்ந்தவீரர்தனிமையிற்சாதனன்றே. (௪௭)

தானவரோடுமற்றைச்சக்கரத்தலைவரோடும்
வானவர்கடையமாட்டாமறிகடல்கடைந்தவாலி
ஆனவனம்பொன்றாலேயயர்ந்தமையயர்த்ததென்னீ
மீனலர்வேலைபட்டதுணர்ந்திலைபோலுமேலோய். (௪௮)

எத்தனையரக்கரேனுந்தருமமாண்டில்லையன்றே
அத்தனையறத்தைவெல்லும்பாவமென்றறிந்ததுண்டோ
பித்தரைப்போலநீயுமிவரொடும்பெயர்ந்ததன்மை
ஒத்திலதென்னச்சொன்னானவனிவையுரைப்பானானான்.  (௪௯)

சாம்பன்பதிலுரைத்தல்.

நாணத்தாற்சிறிதுபோழ்துநல்கினனிருந்துபின்னும்
துணைத்ததிரடோள்வீரதோன்றியவரக்கர்வீரம்
காணத்தானிற்கத்தானக்கறைமிடற்றவற்குமாமே
கோணற்பூவுண்ணும்வாழ்க்கைக்குரங்கின்மேற்குற்றமுண்டோ. (௫௦)

தேவருமவுணர்தாமுஞ்செருப்பண்டுசெய்தகாலை
ஏவரேயென்னாற்காணப்பட்டிலரிருக்கையான்ற
மூவகையுலகினுள்ளாரிவர்துணையாற்றன்முற்றும்
பாவகருளரேகூற்றுமிவருடன்பகைக்கவற்றே. (௫௧)

மாலியைக்கண்டேன்பண்டைமாலியவானைக்கண்டேன்
காலநேமியையுங்கண்டேனிரணியன்றயுகனைக்கண்டேன்
ஆலமாவிடமுங்கண்டேன்மதுவினையறசனோடு
வேலையைக்கலக்கக்கண்டேனுவர்க்குளமிடுக்குமுண்டோ. (௫௨)

வலியிதன்மேலேபெற்றவரத்தினர்மாயம்வல்லர்
ஒலிகடன்மணலின்மிக்ககணக்கினருள்ளரோக்கின்
கலியினுங்கொடியர்கற்றபடைக்கலக்காத்தரென்றால்
மெலிகுவதன்றியுண்டோவின்னுறவெருவல்கண்டால். (௫௩)

ஆகினுமையவுண்டாலார்க்கேனுமமரினஞ்சிச்
சாகினும்பெயர்ந்ததன்மைபழிதருகாகிற்றன்றும்

௪௮. சக்கரத்தலைவர் - விஷ்ணு.

எருதுமீளவின்னுமியம்புவதுளதாலெய்தி
மேகமேயனையான்கண்முனெங்ஙனம்விழித்துநிற்றும். (௫௪)

அங்கதன் சமாதானங்கூறுதல்.

என்றெடுத்தெண்ணின்றானைக்கிறையவனியம்பலோடும்
வன்றிறற்குலிசமோச்சிவரைசிறகரிந்துவெள்ளிக்
குன்றிடைநீலக்கொண்மூவமர்ந்தெனமதத்தின்குன்றம்
நின்றவனருளுமைந்தன்மகனிவைநிகழ்த்தலுற்றான். (௫௫)

எடுத்தலுஞ்சாய்த்தலானுமெதிர்த்தலுமெதிர்ந்தோர்தம்மைப்
படுத்தலும்வீரவாழ்க்கைபற்றினர்க்குற்றமேனுன்
அடுத்ததேயஃதுநிற்பவன்றியுமொன்றுகூறக்
கடுத்ததுகேட்டீர்நீருங்கருத்துளீர்கருதிநோக்கின் (௫௬)

ஒன்றுநீயஞ்சலையயாமெலாமொருங்குசென்று
நின்றுமொன்றியற்றலாற்றாநேமியான்றானேநேர்ந்து
கொன்றுபோர்கடக்குமாயிற்கொள்ளுதும்வென்றியன்றேல்
பொன்றுதுமவனோடென்றான்போதலோபுகழன்றென்றான். (௫௭)

இராமன் இலக்குமணற்கு உரைத்தல்.

கண்டியதானைநீங்கநிற்பதென்யாமேசென்று
பூண்டவெம்பழியினோடும்போந்தநாம்போவதென்று
மீண்டனர்தலைவரெல்லாமங்கதனோடும்வீரன்
மூண்டவெம்படையைநோக்கித்தம்பிக்குமொழிவதானான். (௫௮)

அத்தநீயுணர்தியன்றேயரக்கர்தானவுணரேதான்
எத்தனையுளரென்றாலும்யான்சிலையெடுத்தபோது
தொத்துறுகனலின்வீழ்ந்தபஞ்செனத்தொலையுந்தன்மை
ஒத்ததோரிடையூறுண்டென்றுணர்விடையுதிப்பதன்றால். (௫௯)

இலக்குமணனை நீ வானரசேனையைக்காத்து நிற்றியென

இராமன் கூறுதல்.

காக்குநரின்மைகண்டகலக்கத்தாற்கவியின்சேனை
போக்கறப்போகித்தத்தமுறைவிடம்புகுந்ததுண்டேல்
தாக்கியபடையைமுற்றுந்தலைதுமிப்பளவுந்தாங்கி
நீக்குதிநிருதராங்குநெருக்குவார்நெருக்காவண்ணம். (௬0)

இப்புறத்தினையசேனையேவியாண்டிருந்தநீயோன்
அப்புறத்தமைந்தசூழ்ச்சியறிந்தவனயலேவந்தால்
தப்பறக்கொன்றுநீக்குமவனையார்தடுக்கத்தக்கார்
வெப்புறுகின்றதன்னம்வீரநீயலதுவில்லோர். (௬௧)

௬௧. வெப்பு - வெம்மை.

மாருதியோடுநீயும்வானரக்கோனும்வல்லே
பேருதிர்சேனைகாக்கவென்னுடைத்தனிமைபேணிச்
சோருதிரென்னின்வெம்போர்தோற்றநாமென்னச்சொன்னான்
வீரன்மற்றிதனைக்கேட்டவிளையவன்விளம்பலுற்றான். (கஉ)

இலக்குமணன் அவ்வாறே செய்துமெனல்.

அன்னதேகருமமையவன்றியுமனைவேசின்றால்
என்னுனக்குதவிசெய்வதிதுபடையென்றபோது
சென்னியிற்சுமந்தகையர்தேவரேபோலயாமும்
பொன்னுடைவரிவிலாற்றல்புறனின்றுகாண்டுமென்றான். (கங)

அனுமன் தன்தோள்மீதேற இராமனை வேண்டுதல்.

என்றவனேகலுற்றகாலையினநுமனெந்தாய்
புன்றொழிற்குரங்கெனதென்றோளின்மேலேறிப்புக்கால்
நன்றெனக்கருதாயென்றேனல்லதூராபினானுன்
பின்றனிநிற்றுமாயினடிமையிற்பிழைப்பிலென்றான். (கச)

நீ இலக்குமணற்குத் துணையாகிபோனஅநுமனுக்கு இராமனுரைத்தல்.

அய்யநிற்கியலாதுண்டேயிராவணனடலேவுந்தற்
றெய்யும்விற்காத்தவீரனிலக்குவன்றன்னோடேற்றால்
மொய்யமர்க்களத்தினுன்னைத்துணைபெறுதொழியின்முன்பு
செய்யுமாவெற்றியுண்டோசேனையுஞ்சிதையுமன்றே. (கரு)

ஏரைக்கொண்டமைந்தகுஞ்சியிந்திரசித்தென்பான்றன்
போரைக்கொண்டிருந்துமேனுளினையவன்றன்னைப்போக்கின்
ஆரைக்கொண்டென்னலன்றேவன்றதங்கயினையின்னும்
வீரற்கும்வீரநின்னைப்பிரிகிலன்வெல்லுமென்பேன். (கசு)

சேனையைக்காத்தென்பின்னைதிருநகர்தீர்ந்துபோந்த
யானையைக்காத்துமற்றையிறைவனைக்காத்தெண்டீர்ந்த
வானையித்தலத்தினோடுமறையொடும்வளர்த்தியென்றான்
ஏனைமற்றுரைக்கலாதானிளவலபினெழுந்துசென்றான். (கஎ)

விபீடணனையும் இலக்குமணற்குத் துணைபோகச்செய்தல்.

வீடணநீயுமற்றுன்றம்பியோடேகிவெம்மை
கூடினர்செய்யுமாயத்தெரிந்தனகுறிக்கொண்டேகி
நீடுறதானைதன்னைத்தாங்கினையில்லையென்னின்
கேடுளதாகுமென்றானவனதுகேட்பதானான். (கஅ)

கஎ. யானையை - இலக்குமணனை. இறைவன் - சுக்கிரீவன்
[illegible] - இலக்குமணனை.

சூரியன்சேயுஞ்செல்வன்சொற்றதேயெண்ணுஞ்சொல்லன்
ஆரியன்பின்புபோனவனைவருமதுவேசல்ல
காரியமென்னக்கொண்டார்கடற்படைகாத்துநின்றார்
வீரியன்பின்னர்செய்தசெயலெலாம்விரிக்கலுற்றாம். (சுசு)

இராமனது போர்க்கோலம்.

வில்லினைத்தொழுதுவாங்கியேற்றினன்மெய்ர்நாண்மேருக்
கல்லெனச்சிறந்ததேனுங்கருணையங்கடலேயன்ன
எல்லொளிமார்பிற்றீராக்கவசமிட்டிழையாவேதச்
சொல்லெனத்துணையவாளித்தூணியும்புறத்துத்தூக்கி. (எ௦)

மூலபலம் பொருதல்.

யோசனைநூற்றின்வட்டமிடைவிடாதுறைந்தசேனைத்
தூசிவந்தண்ணறன்னைப்போக்கறவளைந்துசுற்றி
வீசினபடையுமம்புமிடைதலின்விண்ணோர்யாக்கை
கூசினபொடியாமெலங்குங்குமிழ்ந்தனவியோமகூடம். (எக)

இராமனைத் தேவர்பரவுதல்.

கண்ணனேயெளியேமிட்டகவசமேகடலேயன்ன
வண்ணனேயறத்தின்வாழ்வேமறையவர்வலியேமாறு
தொண்ணுமேசியலாதோரொருவர்க்கிப்படைமேலுன்ற
எண்ணமேமுடித்தியென்றுவேத்தினரிமையோரெல்லாம். (எ௨)

இராமனே வெல்வானாகவென முனிவர் ஆசிகூறுதல்.

முனிவரேமுதல்வராயவறத்துறைமுற்றினோர்கள்
தனிமையுமரக்கர்தானைப்பெருமையுந்தரிக்கலாத்தார்
பணிவருகண்ணர்விம்மிப்பதைக்கின்றநெஞ்சர்பாவத்
தனைவருந்தோற்கவண்ணல்வெல்கவென்றாசிசொன்னார். (எ௩)

வேறு.

தேவராதியரும் இராமனை வாழ்த்துதல்.

மற்றும்வேற்றத்துணின்றவானநாட்டினைத்துவோர்
கொற்றவில்லிவெல்கவஞ்சமாயர்வீகருவலயத்
துற்றதீமைதீர்கவின்றொடென்றுகூறினார்நிலம்
துற்றவெம்படைக்கைநீசரின்னவின்னசொல்லினார். (எ௪)

அசுரர் இராமனைக்கண்டு பலவாறுகூறுதல்.

இரிந்தசேனைசிந்தியாருமின்றியேயுநின்றாம்
விரிந்தசேனைகண்டியாருமஞ்சலின்றிவெஞ்சமம்
தெரிந்துசேவகன்றிறம்பலின்றியெய்துசெய்கையான்
புரிந்ததன்மைவென்றிமேலுமன்றுமாவிபொய்க்குமோ. (எரு)

எ௦. சொல்லெனத்தொலைவிலாததூணியும் என்றும் பாடம்.

புரங்களெய்தபுங்கவற்குமுண்டுதேர்பொருந்தினர்
பரந்ததேவர்மாயனம்மைவேறுந்தபண்டைநாள்
விரைந்துபுள்ளின்மீதுவின்னுனோர்களோடுமேவினன்
கரந்திலன்றனித்தொருத்தனேறும்வந்துகாலினன். (எசு)

தேருமாவும்யானையோடுசெய்யயாளியாதியா
மேருமானுமெய்யகின்றவேலையேழின்மேலவா
வாரும்வாருமென்றழைக்குமானுடற்கிம்மண்ணிடைப்
பேருமாறுநம்முழைப்பிழைக்குமாறுமென்றனே. (எஎ)

இராமனது வின்றொழிற்றிறம்.

என்றுசென்றடர்த்திரைத்தொர்சியவேறடர்ந்தகைக்
குன்றருஞ்வளைந்தபோற்றொடர்ந்தசேனைகூடலும்
கன்றிதென்றுறாவமேழுகாகமேழுமானுதன்
வென்றிவில்லைவேதநாதனுணெறிந்தவேலைவாய். (எஅ)

கதம்புலர்ந்தசிந்தைவந்தகாவல்யானைமாவொடு
மதம்புலர்ந்தகின்றவீரர்வாய்புலர்ந்தமாவெலாம்
மதம்புலர்ந்தவேகமாகவானரக்கர்பண்புசால்
விதம்புலர்ந்ததென்னின்வென்றவென்றிசொல்லவேண்டுமோ. (எகூ)

வெறிந்திரிந்துவாசியோடுசெய்யமாவுமீளிபும்
செறிந்தமைந்தமுந்தசில்லிபுல்லுமாழிகூடுதேர்
முறிந்தெழுந்தமுற்கையானைவீசமூசுபாகரைப்
பிறிந்திரிந்துசிந்தவர்தொராகுலம்பிறந்ததால். (அ0)

இராமன் மூலபலத்தினைப் பொருதழித்தல்.

இந்தமித்தமிப்படைக்கிடந்துடித்தடுத்ததோர்
துந்தமித்தமென்றுகொண்டுவானுளோர்கடுள்ளினர்
அந்தமித்தமுற்றபோதரக்கர்கண்ணரங்கமேல்
மின்னியிர்த்தகன்னவாளிவேதநாதன்வீசினன். (அக)

யாளிமேலுமாளின்மேலுமானைமேலுமாடன்மா
மீளிமேலும்வீரர்மேலும்வீரர்தேரின்மேலும்வெவ்
வாளிமேலும்வில்லின்மேலுமண்ணின்மேல்வளர்ந்தமாத்
தூளிமேலுமேறவேறவீரன்வாளிதூவினன். (அஉ)

மலைவிழுந்தவாவிழுந்தமானயானைமன்னர்செந்
தலைவிழுந்தவாவிழுந்தநாயவாசிதாளிநம்
சிலைவிழுந்தவாவிழுந்ததிண்பதாகைதிங்களின்
கலைவிழுந்தவாவிழுந்தவெள்ளெயிற்றகாடெலாம். (அக)

அ0. ஆகுலம் - துன்பம்.

வாடைநாறுபாறும்வீசமாகமேகமாலைவெங்
கோடைமாரிபோலவாளிகூடவோடையானையும்
ஆடன்மாவும்வீரர்தேருமாளுமான்வதாயவால்
பாடுபேருமாறுகண்டுகண்செல்பண்புமில்லையால். (அச)

விழித்தகண்கள்கைகள்விற்கள்வேல்கள்வாள்கள்விண்ணினுள்
தெழித்தவாய்கள்செல்லலுற்றதாள்கடோள்கள்செல்வினைப்
பழித்தவாளிசிந்தவின்றுபட்டதன்றிவிட்டகோல்
கழித்தவாயுதங்களொன்றுசெய்ததில்லைகண்டதே. (அரு)

தொடுத்தவாளியோடுவிற்றுணிந்துவீழுமுன்றுணிந்
தெடுத்தவான்களோடுதோள்களிற்றுவீழுமற்றுடன்
கடுத்ததாள்கள்கண்டமாகுமெங்ஙனேகலந்துநேர்
தடுத்தவீரர்தாமுமொன்றுசெய்யுமாசலத்தினால். (அசு)

குரந்துணிந்தகண்சிதைந்தபல்லணங்குலைந்தபேர்
உரந்துணிந்தவீழ்வதன்றியாவியோடவொண்ணுமே
சரந்துணிந்தவொன்றைநூறுசென்றுசென்றதன்னலால்
வரந்துணிந்தவீரர்போரின்முந்தவுந்துவாசியே. (அஎ)

ஊரவுன்னின்முன்புபட்டுயர்ந்தவெம்பிணங்களால்
பேரவொல்வதன்றுபேரினுயிரம்பெருஞ்சரம்
தூரவொன்றுநூறுகூறுபட்டுகுந்துயக்கலால்
தேர்களென்றவந்தபாவியென்னசெய்கைசெய்யுமே. (அஅ)

எட்டுவன்றிசைககணின்றயாவும்வல்லயாவரும்
கிட்டினுய்ந்துபோகிலார்களென்னநின்றகேள்வியால்
முட்டும்வெங்கண்மானயானையம்புராயுமுன்னமே
பட்டுவந்தபோல்விழுந்ததென்னதன்மைபண்ணுமே. (அகூ)

வாவிகொண்டபுண்டரீகமன்னகண்ணவாளியொன்
றேவிறுண்டைநூறுகோடிகொல்லுமென்னவெண்ணுவான்
பூவிஃண்டர்கோனுமெண்மயங்குமன்னபோரின்வந்
தாவிகொண்டகாலனூர்கடுப்புமன்னதாகுமே. (கூ0)

கொடிக்குலங்கடேரின்மேலயானைமேலகோடைநாள்
இடிக்குலங்கள்வீழவெந்தகாடுபோலெரிந்தவால்
முடிக்குலங்கள்கோடிகோடிசிந்தவேகமுற்றுரு
வடிக்குலங்கள்வாளியோடவாயினூடுதீயினால். (கூக)

அற்றவேலும்வாளுமாகியாயுதங்கண்மீதெழுந்
தற்றவேகமுந்தவோடியோதவேலையூடறத்

அச. கோடைமாரி - வெயிற்காலமழை.

